# பிரியமானவளே

அமெரிக்கக் கலாசாரத்தில் வளர்ந்த விஜய், ஓராண்டு ஒப்பந்தத்தில் சிம்ரனைக் கைப்பிடிக்கிறார். குடும்பச் சூழலுக்காக சிம்ரனும் கழுத்தை நீட்டுகிறார். ஒப்பந்த காலம் முடிந்த பிறகு "வா- போகிற வழியில்தானே உன் அம்மா வீடு, உன்னை டிராப் செய்கிறேன்" என்று இறக்குமதிக்காரில் சிம்ரனை ஏற்றி வந்து, கூலாகக் கழற்றி விடுகிறார் விஜய். அடடே என்று ரசிகர்கள் நிமிர்ந்து உட்காருகிறார்கள்.

நமது பண்பாட்டிற்குப் பழக்கமில்லாத கதைதான் என்றாலும் தொய்வில்லாத திரைக்கதையும், லாஜிக் பிசகாத வசனங்களும் படத்திற்கு ஜீவனைக் கொடுத்து விடுகின்றன.

வண்டியில் பூட்டிய இரட்டை மாடுகள் போல, ஒருவர் நடிப்பை மற்றொருவர் ஓவர் டேக் செய்து விடாமல், காட்சிக்கு ஏற்ப சூப்பராய் பேலன்ஸ் செய்து ஜமாய்க்கிறார்கள் விஜய்யும் சிம்ரனும்.

விதவிதமாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் இனிப்பு வகைகளைப் பார்த்து "யார் இங்கே ஸ்வீட் ஸ்டால் ஓபன் செய்தது" என்று அப்பாவியாகக் கேட்கும் விஜய்யின் கால்களைத் தொட்டு சிம்ரன் வணங்க, பதிலுக்கு விஜய்யும் சிம்ரன் கால்களில் விழுந்து வணங்கும் கலகல முதலிரவுக்காட்சி ஒரே கலக்கல்.

டிஸ்கோத்தே முடிந்து நடு இரவு வீடு திரும்பும் விஜய், தனக்காகப் பட்டினியாய்க் காத்திருக்கும் மனைவியிடம் 'நீ எதுக்காக சாப்பிடாமல் இருக்கே என்று கேட்டு, தானே பரிமாறி சிம்ரனை ஆனந்த கண்ணீரோடு சாப்பிடவைக்கும் போது, கடவுளே இந்த ஜோடி நீடூழி வாழ வேண்டும் என பிரார்த்திக்க வைக்கிறார்கள்.

விதவை அம்மா, திருமணத்திற்கு முன்பே கர்ப்பமாகும் தங்கை, கணவனால் கைவிடப்பட்ட அக்காள், வேலையில்லாத பட்டதாரித் தம்பி என்று சிம்ரனை நிர்பந்தப்படுத்தும் குடும்பச் சூழல் அரதப்பழசு என்பதால் ஒன்ற முடியவில்லை. ஆனாலும் தனிமையில் அமர்ந்து அழாமலே உணர்ச்சிகளை முகத்தில் காட்டும் சிம்ரன் ஒரு டிபிகல் மிடில் கிளாஸ் பெண்ணாக முத்திரை பதிக்கிறார்.

தவறை உணரும் விஜய், மனைவியை அழைத்துவர விவேக், வையாபுரி கூட்டணியுடன் இணைந்து போடும் அதிரடி திட்டங்கள் ஒரே ரொமண்டிக் காமெடி.

விஜய்யின் அப்பாவாக வரும் எஸ்.பி.பியின் நடிப்பிற்கு நல்ல ஸ்கோப்.

மனோகரா பாணியில் கூடிக் கூடி வசனம் பேசும் பல காட்சிகளின் நீளத்தைக் கொஞ்சம் குறைத்திருக்கலாம்.

இப்படியொரு புதிய கதைக்கு மெலோடிராமா மாதிரி ஒரு க்ளைமாக்ஸ் என்றால் பொறுக்க முடியவில்லை.

மெலடியான ட்யூன்களை கொடுக்கும் எஸ்.ஏ. ராஜ்குமாரின் பாடல்கள் காதில் இடியாய் இறங்குகின்றன.

'நினைத்தேன் வந்தாய்' படத்தின் மூலம் தமிழுக்கு ஒரு உருப்படியான ரீமேக் இயக்குனர் கிடைத்திருக்கிறார் என்று எண்ண வைத்த செல்வபாரதிக்கு இந்தப் படத்தில் பாஸ்மார்க் கிடைத்திருக்கிறது.

— விஷுவல்தாசன்

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com     ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

"நான் திண்டுக்கல்லில் பணியாற்றிய போது நடந்த சம்பவம் இது. பலநாள் தலை மறைவாக இருந்த கிரிமினல் ஒருவனின் மறைவிடம் பற்றித் தகவல் கிடைத்தது. அவனைப் பிடிக்க உடன் ஒரு போலீஸ்காரரை அழைத்துக்கொண்டு விரைந்தேன். முப்பத்தைந்து வயதே நிரம்பிய அந்தப் போலீஸ்காரரின் பெயர் பெரியசாமி. மறைவிடத்தை அடைந்ததும், கிரிமினல் ஓட ஆரம்பித்தான். நாங்கள் துரத்த ஆரம்பித்தோம். கிட்டத்தட்ட மூன்று கிலோமீட்டர் தூரம் ஓடி அவனைப் பிடித்துவிட்டு, திரும்பிப் பார்க்கிறேன். அப்போதுதான் பெரியசாமி என் பின்னால் ஓடி வரவில்லை என்று தெரிந்தது. கைதியைப் பிடித்தபடி திரும்பவும் இரண்டரை கிலோமீட்டர் தூரம் கடந்து வந்தபோது எனக்குப் பெரிய அதிர்ச்சி. பெரியசாமி பேச்சு மூச்சற்று இறந்துகிடந்தார். அவரை மாரடைப்பு தாக்கியிருந்தது.

"சந்திரன் என்றொரு இளம் போலீஸ்காரர். கடலூரைச் சேர்ந்தவர். உதவி இன்ஸ்பெக்டராக பதவி உயர்வு பெற உடல் தகுதியை மேம்படுத்த வேண்டும் என்று உடற்பயிற்சியில் இறங்கினார். மைதானத்திற்கு அதிகாலையில் சென்று ஓட ஆரம்பித்தவருக்கு, இரண்டாவது சுற்றை ஓடி முடிப்பதற்கு முன்பே மாரடைப்பு ஏற்பட்டு மைதானத்திலேயே இறந்துவிட்டார்.

"இப்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆண்டொன்றுக்கு ஐந்து காவலர்கள் மாரடைப்பு மூலம் மரணத்தைத் தழுவுகிறார்கள். மன உளைச்சல் காரணமாக மூன்று பேர் தற்கொலை செய்து கொள்கிறார்கள். காவல் துறையில் இது போன்ற பரிதாப மரணங்கள் நிகழ்வதற்குக் காரணம் என்ன என்று சிந்தித்தபோது இரண்டு விஷயங்கள் தெரிந்தன. உடல்நலம், மனநலம் இரண்டைப் பற்றிய பிரக்ஞையே காவல்காரர்களுக்கு இல்லை. போலீஸ் பயிற்சிக் கல்லூரியோடு அவர்கள் உடற்பயிற்சியை மறந்து போகிறார்கள். இதற்குக் காரணம், வேலையின் தன்மை, கால நேர மற்ற பணி, கண் விழிப்பு, நேரத்திற்கு உணவருந்த முடியாதது... மேலதிகாரிகளின் கெடுபிடி, குடும்பத்தோடு அதிக நேரம் செலவிட முடியாமல் போய்விடுவது இப்படி நிறைய. இதனால் பொதுமக்களோடு ஒரு கனிவான அணுகுமுறையை கையாள முடியாத நிலை. இந்த நிலையிலிருந்து விடுதலை பெற சிறந்த வழி யோகா என்று எனக்குத் தோன்றியது. உடன் கல்லூரியிலேயே யோகா வகுப்புகளைச் சோதனையாக முயன்று பார்த்தோம். பெரும் வெற்றி கிடைத்தது. அதைத் தொடர்ந்து இப்போது அடையாறு வட்டத்தில் உள்ள காவல்காரர்களுக்குப் பத்து நாள் யோகா முகாம் நடத்தி வருகிறோம். ஓய்வு பெற்ற காவல்துறை அதிகாரி கிருஷ்ணா தலைமையில் யோகா மாஸ்டர் ஜெயவேல், மற்றும் அவரது சகாக்கள் பயிற்சி கொடுத்து வருகிறார்கள். இந்தப் பத்து நாள் முகாமில் யோகா கற்ற அத்தனை பேரிடமும் நிறைய மாற்றங்கள். அதை அவர்களே நேரடியாகச் சொல்கிறபோது மகிழ்ச்சியாக இருக்கிறது.

"தமிழக காவல்துறையினர் அனைவருக்கும் யோகா பயிற்சி கொடுத்து, அதைத் தொடர்ந்து கடைபிடிக்கும்படி உற்சாகப் படுத்தினால் நல்ல பலனை எதிர்பார்க்கலாம். குறிப்பாகத் தொப்பை குறைந்து, மிடுக்கான தோற்றம் கிடைக்கும். உடல் வலிமையோடு மன வலிமையும் கிடைத்துவிட்டால் மக்களைப் புரிந்துகொண்டு அணுகுவதும் அதிகமாகிவிடும். அதன் பிறகு காவல் நிலையங்களை ஒரு கண்ணியமான இடமாகக் கருதுவதும்

# தொந்தி

அதிகரித்து விடும். பிறகு பத்திரிகைகளில் போலீஸ்காரரின் கேலிச்சித்திரம் வரையும்போது தொப்பையை ஹைலைட் செய்ய முடியாது. அந்த நிலை வர வேண்டுமானால், ஒவ்வொரு காவல் நிலையத்திலும், துப்பாக்கி அறை, கைதி அறை இருப்பதுபோல இனி யோகா அறையும் இடம் பெற வேண்டும்" என்று தன் விருப்பத்தை வெளியிட்டார் அடையாறு துணைக் கமிஷனர் சைலேந்திரபாபு. யோகா முகாம் நடைபெறும் சாஸ்த்ரி நகர் காவல் நிலையத்திற்குச் சென்றோம்.

சாஸ்த்ரி நகர் காவல் நிலையத்தின் இரண்டாவது தளத்தில் இருந்த ஆலோசனைக் கூடம் யோகா முகமாக மாறியிருந்

• சைலேந்திரபாபு



தது. திருவான்மியூர், அடையாறு பகுதிகளைச் சேர்ந்த முப்பது போலீசார் வெள்ளை உடையில் மூச்சுப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களுக்குப் பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தவர் ஆர்.எஸ். கிருஷ்ணன். மூச்சுப் பயிற்சி முடிந்ததும் ஆசனங்களைச் செய்யத் தொடங்கினர். மொத்த மிருந்த



• பயிற்சியில் காவலர்கள்

டத்தைப் பெறுவதென்று கற்றுக் கொண்டோம். இத்தனை நாளும் சரியாகக் கூட நமக்கு சுவாசிக்கத் தெரியாமல் இருந்திருக்கிறோம். டென்ஷன் இல்லை. முதுகுவலி, உடம்பு வலி இல்லை. தியானம் மூலம் ஆழ்மன ஆரோக்கியம் கிடைச்சிருக்கு. நான் சிகரெட்டையும், சிக்கனையும் தலை முழுகிட்டேன்... இந்தப் பயிற்சி முடிந்ததும் எதுக்கு நேரம் ஒதுக்குகிறோமோ இல்லையோ யோகாவுக்குத் தினசரி இருபது நிமிஷம் ஒதுக்குவதுன்னு முடிவு செய்துட்டேன்'' என்கிறார் கருணாநிதி.

பத்து நாளில் தனது தொப்பை இரண்டு அங்குலம் குறைந்து விட்டது என்று ஆச்சர்யமாக ரிச்சயிருக்கு)

# குறைஞ்சு போச்சு!

முப்பது பேரில் பதினைந்து பேருக்குத் தொப்பையால் தொந்தரவு. ஆனாலும் மனம் தளராமல் உறுதியோடு ஆசனங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். அடுத்து தியானம். தியானம் முடிந்த பிறகு டிஸ்கஷன்... போட்டி போட்டுக்கொண்டு யோகா மாஸ்டரிடம் சந்தேகக் கேள்விகளைக் கேட்க, பொறுப்பான, பொருத்தமாக பதில் சொன்னார். பதிலில் புத்தப் பிட்சுக்கள் போல காட்சியளித்தக் காவலர்கள் ஆச்சரியமாய்த் தெரிய, முகாம் முடிந்து வந்த திருவான்மியூர் தலைமைக் காவலர் கருணாநிதியிடம் பேச்சுக் கொடுத்தோம்...

"**ப**தஞ்சலி முனிவர் உருவாக்கிய இந்த யோகக் கலை மூலமாக மூச்சை எப்படி ஒழுங்குபடுத்தி, முழுமையான இரத்த ஓட்

தொந்தியை ஆட்டிக் காட்டுகிறார் காவலர் ஜெயராம். "எனக்கு இரவுப் பணி அடிக்கடி வந்து விடுவதால் காலை நேர யோகாவில் கலந்து கொள்ள முடியவில்லை'' என்று வருத்தப்படுகிறார்.

பத்து நாள் முகாமில் பதஞ்சலி முனிவரின் பாடலையே மனப்பாடம் செய்துவிட்டார் சந்திரசேகர்.

"ஏற்றி இறக்கு இருகாலும் பூரிக்கும்
காற்றை அடக்கும் கணக்கறிவாளரில்லை
காற்றை கணக்கறிவாளருக்கு
கூற்றை உடைக்கும் குறியதுவாமே''

எனப் பாடிக்காட்டி நமக்குப் பொருளும் சொன்ன காவலருக்கு மனப்பூர்வமாக ஒரு சல்யூட் வைத்து விடைபெற்றோம்.

— சக்கரத்தாழ்வார்

"**மை**சூரிலிருந்து வருகிறது என்பதற்காக மைசூர் சந்தன சோப்பை நீங்கள் உபயோகிக்காமல் இருக்கிறீர்களா அல்லது காஞ்சிபுரம் பட்டுப் புடைவை காஞ்சிபுரத்தில் தறி போட்டுத் தயாரிக்கப்படுவதால் ராமநாதபுரத்துப் பெண்மணிகள் அந்தப் புடைவைகளை உடுத்துவதில்லையா... ஆகையால், வெளியூர், உள்ளூர் என்று பார்க்காதீர்கள். நான் கலைஞரின் தம்பி; கழகத்தின் சின்னம் உதயசூரியன். அதை மட்டும் பாருங்கள்'' - ரகுமான்கான் வெளியூர்க்காரர்; அவருக்கு வோட்டுப் போட்டால் உங்களால் அவரைச் சந்திக்க முடியாது என்று ராமநாதபுரம் தொகுதியில் 1996 சட்டமன்றத் தேர்தலின்போது எதிர்க்கட்சிகள் செய்த பிரசாரத்துக்கு ரகுமான்கான் சொன்ன பதில்தான் இது.

"எனக்கு வோட்டுப் போட்டால் மாதத்தில் பதினைந்து நாட்கள் தொகுதியிலேயே சுற்றி வருவேன்; இங்கேயே வீடு எடுத்து விடுவேன்'' என்றும் சொன்னார் ரகுமான்கான். இந்த விஷயத்தில் சொன்ன வாக்கைக் காப்பாற்றுகிறார் அவர். சென்னையில் அவர் வீட்டுக்குத் தொடர்பு கொண்டால் பெரும்பாலும் கிடைக்கும் பதில் "தொகுதிக்குச் சென்றிருக்கிறார் அமைச்சர்'' என்பதுதான்.

தேனி மாவட்டம் கம்பம்தான் அமைச்சரின் சொந்த ஊர். சென்னையில் வழக்கறிஞராக பிராக்டீஸ் செய்து கொண்டிருந்த உடன்பிறப்பான ரகுமான்கானை 1977 தேர்தலில் பார்க்டவுன் சட்டமன்றத் தொகுதியில் நிற்க வைத்தார் கலைஞர். அப்போது பெற்ற வெற்றி, இடையில் 1991 தேர்தல் தவிர 1996ம் ஆண்டு சட்டமன்றத் தேர்தல் வரைத் தொடர்ந்தது. ஆனால் தொகுதிகள்தான் மாறின. சேப்பாக்கம் தொகுதி புதிதாக உருவானவுடன் அதில் தொடர்ந்து நிறுத்தப்பட்டார் ரகுமான்கான். 1996 தேர்தலில் கலைஞருக்காக அந்தத் தொகுதியை விட்டுக் கொடுக்க வேண்டியதாகி விட்டது. எம்.ஜி.ஆர் முதல்வராக இருந்தபோது எதிர்க்கட்சியாக இருந்த தி.மு.க.வில் மூவர் கூட்டணி ஒன்று இருந்தது. சுப்பு, துரைமுருகன், ரகுமான்கான் ஆகியோரைக் கொண்ட கூட்டணி தான் அது. சட்டமன்றத்தில் தினமும் அமைச்சர்களின் கண்ணில் கண்ணீரை வரவழைக்கும் அளவுக்குக் குடைந்தெடுக்கும் கூட்டணி அது. நெற்றியில் சுருளாக வந்து விழும் முடியை அவ்வப்போது தூக்கி விட்டுக்



# தவித்த வாய்க்குத் தண்ணீர்!

கொண்டு ஆதாரபூர்வமாகக் குற்றச்சாட்டுகளை எடுத்து வைப்பார் ரகுமான்கான். அப்போது பெற்ற அனுபவங்கள் 1996ல் முதல் முறையாக அமைச்சர் ஆனவுடன் எதிர்க்கட்சிகளை சமாளிக்க உதவின.

அரசு ஊழியர்கள், பள்ளிக்கூட ஆசிரியர்களைப் பழி வாங்க நினைத்தால் "தண்ணியில்லா காடான" ராமநாதபுரத்துக்கு மாற்றி விடுவார்கள்... கிட்டத்தட்ட ஒரு தண்டனைப் பகுதியாகவே இது இருந்து வந்திருக்கிறது. இந்த நிலையை மாற்ற அமைச்சர் கடுமையான முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார். கிட்டத்தட்ட பதினேழு கோடி செலவில் கடல் நீரைக் குடிநீராக மாற்றும் திட்டம், மூந்நூறுக்கும் மேற்பட்ட கிராமங்களில் செயல்பட இருக்கிறது. அதிக அளவில் தண்ணீர் தேக்கி வைக்கப்படுவதற்காக இரண்டரை கோடி செலவில், உலக வங்கி உதவியுடன் ராமநாதபுரம் பெரிய கண்மாய் ஆழப்படுத்தப்பட்டு இருக்கிறது. சர்க்கரை கோட்டை, தேவிப் பட்டணம், ஆகிய இடங்களிலும் உள்ள கண்மாய்கள் தூர் வாறப்பட்டிருக்கின்றன. ''உங்களைத் தண்ணீர்க் கஷ்டத்தில் தவிக்க விடமாட்டேன். அப்படி ஏதேனும் கஷ்டம் வந்தால் ரயில் மூலம் ராம நாதபுரத்துக்குத் தண்ணீர் கொண்டு வருவேன்'' என்று தேர்தலின்போது சொன்னார் அமைச்சர். இயற்கை ராமநாதபுரத்தைப் புறக்கணிக்காததால் ரயிலில் தண்ணீர் கொண்டு வர வேண்டிய அவசியம் அமைச்சருக்கு ஏற்படவில்லை.

வானம் பார்த்த பூமியான ராமநாதபுரத்தில் மழை பொய்த்தால் மக்கள் மூட்டை முடிச்சைத் தூக்கிக் கொண்டு பஞ்சம் பிழைக்க மற்ற மாவட்டங்களுக்குச் செல்வார்கள். அந்த நிலையை மாற்றி மழை பெய்தாலும், பொய்த்தாலும், மாவட்டத்திலேயே நிரந்தர வேலை வாய்ப்புகளை உருவாக்க வேண்டும் என்பது அமைச்சரின் ஆசை. அதற்கு மாவட்டத்தைத் தொழில் மயமாக்க வேண்டும். தொழிற்சாலைகள் பெருக வேண்டுமென்றால் தங்கு தடையற்ற மின்வசதி வேண்டும். இதைக் கருத்தில் கொண்டு முந்நூறு கோடி செலவில் இயற்கை எரிவாயு உதவியோடு தொண்ணூற்று ஐந்து மெகாவாட் மின் உற்பத்தி நிலையம் ஒன்றை வழுத்தூரில் அமைப்பதற்காக அடிக்கல் நாட்டியிருக்கிறார் அமைச்சர். ராமநாதபுரம் பெருங்குளம் ஆகிய இடங்களில் துணை மின் நிலையங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

அமைச்சர் ஒரு ஊருக்கு பஸ் விடுகிறார் என்றால், அந்த பஸ்ஸை, அவரே ஓட்டிச் சென்று அந்த ஊரில் இறங்குவார். தொகுதியில் நல்ல சாலைகள் போடப்பட்டிருக்கின்றன. சித்தார் கோட்டை, புதுமடம் அருகே கோடிக் கணக்கில் திட்டமிடப்பட்டு பாலங்களுக்கான ஆயத்த வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. புண்ணியஸ்தலமான ராமேஸ்வரத்தில் ஐம்பத்து மூன்று லட்சம் செலவில் தங்கும் விடுதி கட்டப்பட்டிருக்கிறது. இது தவிர தீ அணைப்பு நிலையம், புதிய போலீஸ் ஸ்டேஷன் கட்டப்பட்டிருக்கிறது. ராமநாதபுரத்தில் மகளிர் கல்லூரிக்காகப் புதிய கட்டடம் கட்ட நில ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. ராமநாதபுரமும், ராமேஸ்வரமும் சோடியம் விளக்குகளால் ஒளிமயமாக்கப்பட்டிருக்கின்றன. ''வேலைகள் நடக்காத கிராமங்களே இல்லை. எந்த கிராமத்திற்கு வேண்டுமானாலும் போங்கள். ஏதாவது ஒரு வளர்ச்சிப் பணி நடந்து கொண்டிருக்கும்'' என்கிறார் மாவட்ட உடன்பிறப்பு ஒருவர். அமைச்சர் தமது தொகுதி நிதியைப் பள்ளி வகுப்பறைகள் கட்டுவதற்கும், மேல்நிலைப்பள்ளிகளுக்குக் கம்ப்யூட்டர் வாங்கவும் கொடுத்து வருகிறார். இதுவரை முப்பது கம்ப்யூட்டர்கள் கொடுத்திருக்கிறார்.

மண்டபம் பகுதியில் சமத்துவபுரம், ராமேசுவரம் உழவர் சந்தை என்று அசத்தியிருக்கிறார் அமைச்சர். ''அவரை

அணுகுவது மிக எளிது. ஆனால் ஒரு சின்ன வருத்தம் என்னவென்றால் பிரச்னைகளைப் பற்றிச் சொன்னால் சரியான தொடர் நடவடிக்கை இல்லை. மறுபடி ஞாபகப் படுத்தினால், புதிதாகக் கேட்பது போல் 'செஞ்சுடலாம்' சொல்லுங்க" என்று சொல்கிறார் என்கிறார் கழக உடன்பிறப்பு ஒருவர்.

1989ல் தி.மு.க பதிமூன்று வருட காலத்துக்குப் பின் ஆட்சிப் பொறுப்புக்கு வந்த போது ரகுமான்கானுக்கு அமைச்சர் பொறுப்பு கிடைக்கவில்லை. சிறு சேமிப்புத் துணைத் தலைவர் பதவிதான் கிடைத்தது. ஆனால் 1996ல் தொழிலாளர் நல இலாகாவைக் கொடுத்து அவரை அமைச்சராக்கினார் கலைஞர். சமீபத்தில் நாஞ்சிலார் மறையும்வரை அந்தத் துறை ரகுமான்கான் கையில்தான் இருந்தது. நாஞ்சிலார் மறைவுக்குப் பின் தொழிலாளர் நல இலாகா பொன்முடிக்குச் சென்றுவிட, ரகுமான்கான் வருவாய்துறை அமைச்சர் ஆனார். "அமைப்பு சாரா தொழிலாளர்களின் நலனைப் பாதுகாக்கத் தனி வாரியம் அமைக்க ஏற்பாடு செய்தார். குறிப்பாக டாக்ஸி – ஆட்டோ ஓட்டுனர்கள், சலவைத் தொழிலாளர்கள், முடி திருத்தும் தொழிலாளர்கள் ஆகியோருக்கான நல வாரியம் அமைக்கப்பட்டுள்ளது. தேயிலைத் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச கூலி நிர்ணயிக்கப்பட்டது. மூடிய தொழிற்சாலை ஊழியர்களுக்கு மாதம் ஐந்நூறு உதவித் தொகை, வழங்கப்பட்டது. தொழிலாளர் பிரச்னை காரணமாக எந்த தொழிற்சாலையும் மூடப்படவில்லை. பொதுவான தொழில் அமைதி நிலவியது. இதன் காரணமாக தொழில் துறையில் அந்நிய முதலீடுகள் பெருகின" என்று சொல்கிறார் கோட்டை அதிகாரி ஒருவர்.

**வ**ருவாய்த் துறையில் இப்போதுதான் பணியைத் துவங்கியிருக்கிறார் அமைச்சர். தாலுக்கா அலுவலகங்களைக் கணினி மயமாக்கும் திட்டத்துக்கு முதலிடம் கொடுத்துச் செயல்படுகிறார். ராமநாதபுரம் கடல் பகுதியில் சேது சமுத்திர திட்டம் செயல்படுத்த இருப்பதால் கடலிலிருந்து பன்னிரண்டு கி.மீ தூரம் வரை நிலப்பட்டா கொடுக்கக்கூடாது என்று தடை இருந்ததாம். இதனால் ஆயிரக்கணக்கான மக்களுக்கு நிலப் பட்டா கொடுக்க முடியாத நிலை இருந்தது. இப்போது அந்தத் தடை அமைச்சரின் முயற்சியால் தளர்த்தப்பட்டிருக்கிறது. "மக்களில் இரு சாரார் இருக்கிறார்கள். செய்த சாதனைகளுக்குப் பாராட்டுச் சொல்லி ஊக்குவிப்பவர்கள் ஒரு வகை; ஒன்றுமே செய்யவில்லை என்று பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பவர்கள் மற்றொரு வகை" என்று சொல்கிறார் அமைச்சர்.

கடந்த நான்கு வருடங்களில் தொகுதிக்குத் தாம் செய்துள்ள பணிகளால், வரும் தேர்தலில் "எந்தப் பிரச்னையுமின்றி வெற்றி பெறலாம்" என்று கருதுகிறார் ரகுமான்கான். "கணிசமான அளவில் தொகுதியில் இருக்கும் முக்குலத்தோர்கள் அம்மாவோடு இருந்தாலும், சிறுபான்மையோர், தேவேந்திர குலத்தோர் ஆகியோரது ஆதரவில் வெற்றிக் கனியைப் பறித்து விட முடியும்" என்கிறார்கள் கழக உடன்பிறப்புகள். "ராமநாதபுரத்து மக்களுக்குக் காவிரி குடிநீர், திருச்சி-ராமேஸ்வரம், மதுரை - ராமேஸ்வரம் பிராட்கேஜ் பாதை போன்ற பொதுவான திட்டங்களில் அமைச்சர் கவனம் செலுத்தியிருக்கலாம்" என்கிறார் அந்த மாவட்டத்தைச் சேர்ந்த எதிர்க்கட்சித் தலைவர் சோ. பாலகிருஷ்ணன்!

"நாஞ்சிலார் மரணம் காரணமாக காலியாக உள்ள திருவல்லிக்கேணி தொகுதியில் போட்டியிடலாமே" என்று பாதுகாப்பான தொகுதியை ரகுமான்கானுக்குச் சுட்டிக் காட்டுகிறார்கள் அவரது நண்பர்கள். "ராமநாதபுரத்தில்தான் மீண்டும் போட்டியிடுவேன்" என்று அமைச்சர் அவர்களிடம் சொன்னாலும் தி.மு.க கோட்டையான சென்னையில் போட்டியிடும் வாய்ப்பு கிடைத்தால் 'வேண்டாம்' என்று அமைச்சர் திடமான மனத்துடன் சொல்வது சந்தேகமே!

— ப்ரியன்
படம்: ராஜன்

---

**"பட அதிபர் ரொம்ப நொந்து போயிருக்கார்னு நினைக்கிறேன்!"**

**"ஏம்பா?"**

**"பத்து மாடிக் கட்டடத்தின் உச்சியிலிருந்து கீழே குதிக்கிற காட்சியில் 'ஹீரோவுக்கு' டூப்பாக நானே நடிக்கிறேன்'ங்கிறார்!**

**– உ. ராஜாஜி**



# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

**உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்**

| தஞ்சாவூர் | புதுக்கோட்டை |
|---|---|
| நாள் : 16 & 17 நவம்பர், 2000. | நாள் : 18, நவம்பர், 2000. |
| **இராமநாதன் மன்றம்,** | **புதுக்கோட்டை மாவட்ட வர்த்தக கழகம்,** |
| காந்தி சாலை, | சில்வர் ஹால், மேலராஜ வீதி, |
| (பழைய பஸ் நிலையம் அருகில்) | (தலைமை தபால் நிலையம் எதிரில்) |
| தஞ்சாவூர். | புதுக்கோட்டை - 622 001. |
| தொலைபேசி : 30068 | தொலைபேசி : 22777 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

### எங்களின் அடுத்த டெபாசிட் திரட்டும் முகாம்

**வேலூர் : ஹோட்டல் கங்கா - 23 மற்றும் 24 நவம்பர் 2000**

**காஞ்சிபுரம் : ஸ்ரீ கணபதி ஹால் - 25 நவம்பர் 2000**

# 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,
காலாண்டிற்கு வட்டி 12.12%.

# 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)




மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894.

30-9-2000 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

# எட்டுக்கால் பூச்சிக்கு

கௌன் பனேகா குரோர்பதி தயாரிப்பாளர் சித்தார்த் பாசு கவலையுடன் தன் கம்ப்யூட்டருக்கு முன் உட்கார்ந்திருந்தார்.

"என்ன பாசு சார் உங்க கே.பி.சி. ப்ரோக்ராம்தான் இப்போ போடு போடுன்னு போடுதாமே, நீங்க எழுதிய புஸ்தகங்கள் எல்லாம் பிச்சிக்கிட்டு போகுதாமே? அப்புறம் ஏன் கவலையா இருக்கீங்க?"

"யாரு இந்த ஞாசை உள்ள விட்டது? கூர்க்கா..."

"அவருக்குக் காசு கொடுத்து காபி வாங்கிட்டு வரச் சொல்லியிருக்கேன். இப்ப வரமாட்டார். ஒரேடியா புத்திசாலிங்களோடயே பேசிக்கிட்டு இருக்கீங்களே. என்ன மாதிரி ஞாசோட கொஞ்ச நேரம் பேசினா ஒரு சேஞ்சா இருக்கும்ல? சொல்லுங்க உங்க பிரச்னைய."

குறுநகை பூத்தார் அந்த குவிஸ் மன்னர்.

"ஒண்ணுமில்ல ஞாசு. ஒரு சின்ன பிரச்னை. ஸ்டார் டீ.வி.யும் அமிதாப்பச்சனும் ரொம்பவே தொந்தரவு கொடுக்கறாங்க. கே.பி.சி. ப்ரோகிராம்ல முதல் கேள்விக்குச் சரியா பதில் சொல்லிட்டா ஆயிரம் ரூபாய். அடுத்த கேள்விக்கு ரெண்டாயிரம். இப்படி அஞ்சு கேள்விக்குச் சொன்னாத்தான் பத்தாயிரம் ரூபாய் கிடைக்கும். இப்போ ஸ்டார் டீவிக்காரங்க என்ன சொல்றாங்கன்னா வரவங்க எல்லாருமே முதல் அஞ்சு கேள்விக்குச் சரியா பதில் சொல்லணுமாம். அப்பத்தான் பாக்கறவங்களுக்கு ஒரு இன்ட்ரஸ்ட் வருமாம். அதனால் பயங்கர ஈசியா கேள்விகளை ரெடி பண்ணச் சொல்றாங்க. அதாவது உன்ன மாதிரி ஒரு வடிகட்டின ஞாசு கூட யோசிக்காம பதில் சொல்ற மாதிரி இருக்கணுமாம். நான் என்ன செய்வேன் சொல்லு? கேள்விய கஷ்டமாக்கறதுன்னா எனக்கு ஈசி, கேள்விய ஈசியாக்கறதுன்னா எனக்கு கஷ்டம்."

பாவம் மனிதர் மண்டை காய்ந்து போய் விசு மாதிரி கடிக்க ஆரம்பித்து விட்டாரே என்று கவலையாக இருந்தது.

"சித்தார்த்ஜி இப்பவே முதல் அஞ்சு கேள்விகள் ரொம்ப ஈசியாத்தானே இருக்கு?"

"இருக்கு. அதுலயும் தப்பாச் சொல்றவங்க இருக்காங்களே? உதாரணமா எந்த விளையாட்டுல யானை, குதிரை, பிஷப், ராஜா, ராணி - இதெல்லாம் வரும்னு கேட்டிருந்தேன். நாலு பதில்களப் பாக்காமலே 'செஸ்'னு உன்ன மாதிரி ஞாசு கூடச் சொல்லிரலாம். ஆனா ஒரு ஆளு நாலு பதிலையும் அஞ்சு நிமிஷம் முறைச்சிப் பாத்துட்டு நல்லா யோசிச்சு ரம்மின்னு சொன்னார். அந்தாளுக்குச் செஸ்ஸும் தெரியாது. ரம்மியும் தெரியாதுன்னு எனக்குத் தெரிஞ்சு போச்சு. இதுல என்ன கொடுமைன்னா அவருடைய ஃபேவரிட் கேம் செஸ்தான்னு போற போக்குல அமிதாப்ஜிகிட்ட பீத்திக்கிட்டுப் போறாரு."

"அடக் கண்றாவியே!"

"அதப்பாத்த ஸ்டார் டீவிக்காரங்க முதல் அஞ்சு கேள்விகள இன்னும் ஈசியாக்கணும்னு கத்த ஆரம்பிச்சிட்டாங்க. நானும் ஈசியாக்கிட்டுத்தான் இருக்கேன். போன மாசம் கூடப் பாரு... ஒரு ஈசியான கேள்வி. உங்க பாத்ரூம் குழாய் ஒழுகிக்கிட்டே இருந்துச்சின்னா நீங்க யாரைக் கூப்பிடுவீங்க? எலக்ட்ரீசியன், மருந்துக்கடைக்காரர், சிகை திருத்துபவர், ப்ளம்பர். வந்தவர் பளிச்னு ப்ளம்பர்னு சொல்லிட்டாரு. இதே ஸ்டான்டர்ட்ல இப்போ நெறைய கேள்வி ரெடி பண்ணச் சொல்லிட்டாங்க. அதான் யோசிச்சிக்கிட்டு இருக்கேன். உன்கிட்ட ஏதாவது கேள்வி ஸ்டாக் இருக்கா?"

"ஏன் இல்லாம, வகைவகையா இருக்கு.



# எத்தனை கால்?

முதல் டைப் - கேள்விக்கு நாலு பதில் கொடுக்கறீங்கல்ல... நாலும் சரியா இருக்கற மாதிரி கேட்டுட்டா யாராலும் தப்பாச் சொல்ல முடியாது.''

''உதாரணத்துக்கு ஒண்ணு சொல்லு பாப்போம்''

''முதல் கேள்வி: நமது நாட்டின் தேசப்பிதா யார்? அ) மகாத்மா காந்தி ஆ) எம்.கே.காந்தி இ) மோகன்தாஸ் கரம் சந்த் காந்தி ஈ) காந்தி! இதுல எதச் சொன்னாலும் நிச்சயம் கரெக்டா இருக்கும்.

''ரெண்டாவது கேள்வி :

இந்தியாவின் முதல் பிரதமர் யார்?

அ) ஜவஹர்லால் நேரு ஆ) பண்டித நேரு இ) நேரு மாமா ஈ) இந்திரா காந்தி அவர்களின் தந்தையார்.

''நான் சொன்னது சாம்பிள்தான். உங்களுக்கு இந்த டைப் பிடிச்சிருந்ததுன்னா இதே மாதிரி நூறு கேள்விக்கு மேல ஸ்டாக் வச்சிருக்கேன். வசதிருக்கு. சரி அடுத்த டைப்பச் சொல்லு.''

''கேள்வியிலேயே பதிலைத் தொக்கி நிக்க வைக்கறது.''

''ஃபார் எக்சாம்பிள்?''

''கேள்வி. எட்டுக்கால் பூச்சிக்கு எத்தனை கால் அ) ஒன்பது ஆ) ஏழு இ) பத்து ஈ) எட்டு.

''அப்புறம் ஒரு நகைச்சுவை டீவி சீரியல்ல பாத்தேன் இந்தக் கேள்விய. மூழ்கிப் போன டைட்டானிக் கப்பல் ஒரு அ) கப்பல் ஆ) விமானம் இ) கார் ஈ) லாரி.

''ஒரு வேளை இந்த மாதிரி கேள்விகளுக்குப் பதில் தெரியாம முழிச்சாங்கன்னா கேள்வியத் திருப்பிச் சொல்றேன் பேர் வழின்னு அந்தக் கேள்வில இருக்கற பதில் பகுதிய அழுத்தமாச் சத்தமாச் சொல்லலாம். உதாரணமா எட்டுக் கால் பூச்சிக்கு எத்தனை கால்னு கேட்டா, என்னைவிட பெரிய லூசு கூட கரெக்டா எப்படி?''

''போதும் லூசு போதும். என்னையும் லூசாக்கணும்னு திட்டம் போட்டு வந்திருக்கே போலி

**கே.பி.சி சித்தார்த் பாசுவுடன் ஒரு கற்பனைப் பேட்டி - லூசு**

பதில் சொல்லிருவான். இதெப்படி இருக்கு?"

"இது போக வேற ஏதாவது டைப் இருக்கா?"

"இருக்கு சித்தார்த்ஜி. ஆனா உங்ககிட்ட சொல்றதுக்குப் பயமா..."

"சும்மா பயப்படாம சொல்லு."

"இந்த டைப் வேணும்னா நீங்க கம்ப்யூட்டர் ப்ரோக்ராம முழுசா மாத்தியாகணும். அதைவிட முக்கியம் அமிதாப்பச்சன்ஜியோட டயலாக்க வேற முழுசா மாத்தியாகணும்."

பாசு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"அமிதாப்பச்சன் பேசறதையும் மாத்தணுமா? சொல்லு. சொல்லு. அவருடைய கான்ஃபிடன்ட், லாக் கியா ஜாய், ஷ்யூர். இதையெல்லாம் கேட்டு எனக்கே அலுத்துப் போச்சு. என்ன டைப் சொல்லு, லூசு. ஏய் யாரு அங்க, இங்க ரெண்டு ஆப்பிள் ஜூஸ் கொடுத்தனுப்பு."

நான் தொண்டையைக் கனைத்துக் கொண்டு மெதுவாக ஆரம்பித்தேன்.

"முதல் அஞ்சு கேள்விகள நம்ம கேட்டு, வந்தவங்க சொல்லணும்ங்கற ரூலையே மாத்தணும். முதல் அஞ்சு கேள்வியப் போட்டிக்கு வரவங்க தனக்குத் தானே கேட்டுக்கிட்டுத் தானே பதில் சொல்லுவாங்க. அப்ப அதுல தப்பே வாய்ப்பில்லல்ல? இதெப்படி இருக்கு?"

"ஏய் லூசு. உனக்கு எவ்வளவு திமிர்? யாரு அங்கே. ஆப்பிள் ஜூஸ் கேன்சல். கூர்க்காவை இங்க உடனே அனுப்பு."

"ஐயையோ சித்தார்த்ஜி நானே கிளம்பிடறேன். ஒரே ஒரு விஷயம்."

"என்ன?"

"அவங்களே கேள்வி கேட்டு அவங்களே பதில் சொல்றாங்க இல்லே... அதுல ஒரே ஒரு சிக்கல் இருக்கு."

"என்ன?"

"தான் கேட்ட கேள்விக்கே தப்பா பதில் சொல்றவங்க இருக்காங்க."

சித்தார்த்ஜி வாய்விட்டுச் சிரித்தார்.

"அவங்கள என்ன பண்ணலாம்? பேசாம செவ்வாய் கிரகத்துக்கு அனுப்பிச்சிருவோமா? இல்ல பசிபிக் பெருங்கடல்ல தூக்கிப் போட்டுருவோமா?"

"ஐயையோ அப்படியெல்லாம் ஏடாகூடமா ஏதாவது பண்ணிராதீங்க சித்தார்த்ஜி. அவங்கதான் நம்ம நாட்டு எதிர்காலத் தலைவர்கள். வருங்காலத்தில் நம்மை ஆளப் போகும் அதிபுத்திசாலிகள்."

சித்தார்த்ஜி தன்னை மறந்து சிரித்துக் கொண்டிருந்தபோது நான் விட்டேன் 'ஜூட்!'.



## சமாளிப்பு!

● மத்தியப் பிரதேச முதல்வர் திக்விஜய் சிங், அர்ஜுன் சிங்கின் எதிர்ப்பைச் சமாளிக்க மாநில் கனிம வளக் கழகத்தின் தலைவராக, அர்ஜுன்சிங்கின் மாப்பிள்ளையை நியமித்திருக்கிறாராம்!

## விஞ்ஞான்பதி!

● கௌன் பனேகா குரோர்பதியின் வெற்றியைப் பார்த்துவிட்டு, தூர்தர்ஷன், ஒரு சயின்ஸ் குவிஸ் நிகழ்ச்சியை நடத்தலாமா? என்று யோசித்துக் கொண்டிருக்கிறது. பெயர்: கௌன் பனேகா விஞ்ஞான்பதி!

## 'னி'

● பிரதமர் வாஜ்பாய்க்கு எத்தனை knee? (முழங்கால்)

மூன்று. எப்படி? வலது knee, இடது knee மற்றும் அத்வா'னி'

— சி.எம்



கிரிமினல்கள் ஜாக்கிரதை

16

# எம்.ஜி.ஆர் ரசித்த

**போ**லீஸ் கொடுத்த புடைவை, நடிகை ஷோபாவின் எடையை தாங்கக் கூடியதாக இருக்கிறதா என்பதை மட்டும்தான் நாங்கள் சோதனை செய்து சொன்னோம். ஒரு குற்றம் நடந்து ஆறு மாதத்திற்குப் பின் போலீஸார் இது போன்று கேட்பது கொஞ்சமும் சரியல்ல. அந்தப் புடைவை குறிப்பிட்ட எடையைத் தாங்கக் கூடிய வகையில் இருந்தது என்பதுதான் சரியே தவிர அந்தப் புடைவையைக் கட்டிக் கொண்டு தான் ஷோபா தற்கொலை செய்துகொண்டார் என்பது தடய அறிவியல் நிபுணருக்கு எப்படித் தெரியும்? ஷோபாவின் அதே எடையோடு வேறொருவர் வேறு எங்காவது தற்கொலை செய்து கொண்டிருக்கலாமே!

எனவே பிரபலங்களின் மரணங்களின்போது போலீஸ் சற்று வெளிப்படையாக இருந்தால் மட்டுமே, மக்களிடையே சந்தேகங்கள் எழுவதைத் தவிர்க்க முடியும். இப்படி வெளிப்படையாக இருப்பதற்குப் போலீஸார் செய்ய வேண்டிய முதல் கடமை, குற்றம் நடந்த இடத்திற்குத் தடய இயல் நிபுணரை அழைத்துச் செல்ல வேண்டும். ஆனால் வி.ஐ.பி.க்கள் சம்பந்தப்பட்ட கொலை, தற்கொலைகளைத் துப்பறியும் போலீஸ், சில விஷயங்களை மறைப்பதற்காகவும், ஈகோ பிரச்னை காரணமாகவும், தடய அறிவியல் நிபுணர்களை ஒதுக்கி விடுகின்றனர். பல் தடயவிலைப் பயன்படுத்தி, ஓர் இளம் பெண்ணின் மரணத்திற்குக் காரணமானவர்களைக் கைது செய்தது பற்றிச் சொன்னேன் அல்லவா! உள்ளூர் போலீஸ் மூடி மறைக்க முயற்சி செய்தபோது இளம் ஐ.பி.எஸ். அதிகாரி தடய அறிவியலைப் பயன்படுத்தி துருவியதால்தான் அந்த மரணத்தில் இருந்த மர்ம முடிச்சு அவிழ்ந்தது. அந்த இளம் போலீஸ் அதிகாரி இப்போதைய சென்னை போலீஸ் கமிஷனர் காளிமுத்துதான்.

**ஷோ**பாவின் மரணத்தைப் போன்றே படாபட் ஜெயலட்சுமி, ராணி ஆறுமுகம் ஆகியோரின் மரணங்களில் சர்ச்சை உண்டு. குறிப்பாக ராணி ஆறுமுகத்தின் மரணத்தில் சில போலீஸ் அதிகாரிகளின் பெயர்களும் அடிபட்டன. இப்படி சந்தேகத்துக்கிடமான மரணங்கள் சினிமா உலகில் மட்டுமல்ல; அதிகாரிகள், அரசியல்வாதிகள் ஆகியோரின் மத்தியிலும் உண்டு.

திருச்செந்தூர் கோயிலில் நகை சரி பார்ப்பு அதிகாரி சுப்பிரமணியப் பிள்ளை தூக்கு மாட்டிக் கொண்டு இறந்து போனதாக வழக்கு. எம்.ஜி.ஆர் ஆட்சியில் நடந்த இந்த மரணம் அரசியல் உலகில் பெரிய சர்ச்சையை உருவாக்கியது. அப்போது சுப்பிரமணியப் பிள்ளையின் மரணத்தில் உள்ள மர்மங்கள் தெளிவாக்கப்பட வேண்டும் என்று மதுரையிலிருந்து திருச்செந்தூர் வரை நெடும்பயணம் போனார் கலைஞர். இந்தச் சம்பவத்தில், ஆறு மாதம் கழித்து, என்னிடம் சில சந்தேகங்களைக் கேட்டார்கள். குறிப்பாக, தண்ணீர் பைப்பில் ஏறி, உத்திரத்தில் தூக்கு மாட்டிக்கொண்டதாகப் போலீஸ் சொன்னது. அவரது எடையுள்ள



• ஷோபா



ஒருவர் தண்ணீர் பைப்பில் ஏற முடியுமா என்றெல்லாம் சோதித்துப் பார்த்தோம். அவர் தூக்கு மாட்டிக் கொண்ட காட்சியை மீண்டும் ஜோடித்தோம். எங்கள் அறிக்கையைக் கொடுத்தோம். குறிப்பாக நான் சொல்ல வருவது என்னவென்றால், பிரபலங்களின் மரணத்தின்போது மக்களுக்கு முழுமையான தகவல்கள் போய்ச் சேர, பத்திரிகையாளர்களிடம் போலீஸ் வெளிப்படையாக

# ஃபோட்டோ!

இருக்க வேண்டும் என்பதுதான்.

சர்ச்சைக்குரிய மரணங்களில் சிதம்பரம் பத்மினியுடைய கணவர் நந்தகுமாரின் லாக்-அப் மரணமும் ஒன்று. அரசியல் கட்சிகள், குறிப்பாக இடதுசாரி இயக்கங்கள் நீதி கேட்டு போராட்டம் நடத்தின. லாக்-அப்பில் தூக்கில் தொங்கியதாக. போலீஸ் சொன்னது வெளி மாநிலத்திலிருந்துத் தடய மருத்துவ நிபுணர்களைக் கொண்டு வந்து ஆராய வேண்டும் என்று நீதிபதி மிஸ்ராவிடம் கேட்டுக் கொண்டன அந்த இயக்கங்கள். உடனே அவர் "ஏன் வெளி மாநிலங்களிலிருந்து கொண்டு வரச் சொல்கிறீர்கள். தமிழ்நாட்டிலேயே சிறந்த நிபுணர்கள் உண்டே. நான் ஒருவரைச் சொல்கிறேன். அவரது தலைமையில் இரண்டு தடய மருத்துவ நிபுணர்களை நியமிக்கலாமே!" என்று சொல்லிவிட்டு என் பெயரைச் சொல்லியிருக்கிறார். அவரைச் சந்தித்தவர்கள் உடனே ஒப்புக்கொண்டார்கள். எனக்கு நீதிபதி மிஸ்ராவைத் தனிப்பட்ட முறையில்கூட தெரியாது.

பிரச்னை உடனே எனக்குக் கோர்ட் மூலம் தெரிவிக்கப்பட்டது. தென் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு தடய மருத்துவரையும், சென்னையைச் சேர்ந்த ஒரு தடய மருத்துவரையும் நான் தேர்வு செய்து ஒரு குழு அமைத்தேன். நாங்கள் அனைவரும் சிதம்பரம் சென்று முற்போக்கு இயக்க பிரமுகர்கள் மற்றும் பொதுமக்கள் முன்னால் பத்மினியின் கணவர் உடலை இரண்டாவது முறையாக போஸ்ட்மார்ட்டம் செய்தோம். பெண் போலீஸ் அதிகாரி லத்திகா சரண் தான் இந்த வழக்கை விசாரித்து வந்தார். அவர் எங்களுக்கு தேவையான எல்லா உதவிகளையும் செய்தார். இந்த விவகாரத்தில் நாங்கள் கொடுத்த அறிக்கையின் காரணமாக, தவறு செய்தவர்கள் மாட்டிக் கொண்டார்கள். தண்டனையும் பெற்றார்கள். இது போன்ற சம்பவங்கள் காக்கிச்சட்டைக்குள் இருக்கும் மிருகங்களை அடையாளம் காட்டுகின்றன.

மின்சார வாரியத்துக்குப் பெரிய பிரச்னை மின் திருட்டுதான். பெரிய, பெரிய தொழிற்சாலைகளே மின் திருட்டில் ஈடுபடுவது மிகவும் சகஜம். மின் திருட்டை அதிகாரிகள் கண்டுபிடித்தாலும் வழக்கைத் தொடர்ந்து கோர்ட்டில் விஞ்ஞான பூர்வமாக அதை நிரூபிக்க முடியாமல் திண்டாடினார்கள் அவர்கள். அப்போது கே.வி. சுப்பிரமணியம் என்ற போலீஸ் அதிகாரி மின்சார வாரியத்

தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்



தில் விழிப்புணர்வு அதிகாரியாக இருந்தார். "தடய அறிவியலைப் பயன்படுத்தி மின் திருட்டைக் கண்டுபிடிக்க முடியுமா? இந்த விஷயத்தில் மின் வாரியத்துக்குப் பயங்கர நஷ்டம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது'' என்று என்னிடம் கேட்டார் சுப்பிரமணியம். நான் உடனே 'கட்டாயம் கண்டுபிடிக்க முடியும்' என்றேன்.

சென்னைக்கு அருகில் இருந்த ஒரு தொழிற்சாலையில், மின் திருட்டு நடப்பதாக அதிகாரிகளுக்குச் சந்தேகம். மீட்டரை என்னிடம் கொண்டு வந்தார்கள். அதை ஆராய்ந்து பார்த்ததில் மிகச் சிறிய ஓட்டை ஒன்று போடப்பட்டிருந்தது தெரிய வந்தது. மீட்டரை சீல் திறந்து அந்தச் சிறிய ஓட்டையின் மூலம் உள்ளே உள்ள பல் சக்கரத்துடன் ஒரு மெல்லிய ஒயரை இணைத்து விட்டு ஒயரை வெளியில் கட்டி இருக்கிறார்கள். மிகவும் கச்சிதமாக மறுபடியும் சீல் செய்திருந்தார்கள். பல் சக்கரம் ஓடாது. மின் அதிகாரிகள் வந்திருக்கிறார்கள் என்று மெயின் கேட்டுக்கு வெளியில் இருக்கும் காவல்காரர் இண்டர்காமில் தகவல் கொடுத்ததும், ஒயர் இணைப்பை உடனே துண்டித்து விடுவார்கள். மீட்டர் உடனே ஓடத் துவங்கும். அந்த மீட்டரில் தில்லு முல்லுகளை விஞ்ஞானப்பூர்வமாக விளக்கி அறிக்கை கொடுத்தேன். கோர்ட்டில் அது தாக்கல் செய்யப்பட்டது. மின்சாரத்தைத் திருடிய அந்தத் தொழிலதிபர் மாட்டிக் கொண்டார். தண்டனை கிடைத்தது. இந்தியாவிலேயே மின் திருட்டைக் கண்டு பிடிக்க முதன் முதலாக தடய அறிவியலைப் பயன்படுத்தியது தமிழகத்தில்தான். "எப்படியெல்லாம் மின்சாரத்தைத் திருட முடியும்; அதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்'' என்றெல்லாம் மின்வாரியத்துக்கும் ஆலோசனை கூறப்பட்டது. மற்ற மாநில மின் வாரிய அதிகாரிகளும் எங்களிடம் தகவல்களைப் பெற்று அவர்கள் மாநிலங்களில் நடந்த மின் திருட்டுக்களை கையும் களவுமாக பிடித்து, திருடர்களுக்குத் தண்டனை வாங்கிக் கொடுத்தார்கள்.

எம்.ஜி.ஆருக்கு காமிராக்கள் பற்றி நிரம்ப அறிவு உண்டு. எங்கள் தடய அறிவியல் துறையில் புகைப்படப் பிரிவு என்று தனியாக ஒரு பிரிவு இருக்கிறது. புகைப்பட உதவி இல்லாமல், தடய அறிவியலில் சாட்சிகள் சொல்லுவது மிகக் கடினம். குற்றம் நடந்த இடத்தை ஃபோட்டோ எடுக்கவும், பின்னர் அது பற்றி அறிக்கை கொடுக்கவும் காமிரா மிகவும் அவசியம். அதற்காக அவ்வப்போது காமிராக்கள் வாங்குவோம். முதல்வரின் கீழ் உள்ள உள்துறையில் எங்கள் அலுவலகம் இயங்கி வந்ததால், காமிரா வாங்குவதற்கு நிதி அனுமதி முதல்வர்தான் கொடுக்க வேண்டும். அப்போது Ashai Pentax என்ற காமிரா வாங்குவதற்காக ஒருமுறை அனுமதி கேட்டிருந்தோம். நாங்கள் வாங்க நினைத்தது நவீன வசதிகள் (6/7 format) கொண்ட காமிரா. அது போன்ற வசதிகளைக் கொண்ட காமிரா அதுவரை மார்க்கெட்டுக்கு வந்ததில்லை. அனுமதி வேண்டிய கோப்பு முதல்வருக்குப் போனது. காமிரா, உபகரணங்கள் எல்லாம் சேர்ந்து விலை ஒரு லட்சத்திற்கு மேல்! கோப்பைப் பார்த்த முதல்வர் உடனே உள்துறைச் செயலாளர் டி.வி. வெங்கட்ராமனைக் கூப்பிட்டார். "இது போன்ற வசதி கொண்ட காமிரா இதுவரை மார்க்கெட்டுக்கு வந்ததில்லை. இது எப்போ வந்தது? நமது

---

**"நம்ம பையனுக்குக் கல்யாண ஆசை வந்திருச்சு வத்சலா!"**
**"எப்படிச் சொல்றீங்க?"**
**"ஆபீஸ் போறதுக்கு ஒரு ஸ்கூட்டர் கேக்கறான்!"**
**— புளியரை கணேசன்**

---

நாட்டிற்கு வந்துவிட்டதா; அல்லது தவறான விவரங்கள் சொல்லப்பட்டு விட்டதா?'' என்று கேட்டிருக்கிறார். உடனே முதல்வர் அறையிலிருந்து என்னைத் தொடர்பு கொண்டார் வெங்கட்ராமன். "உங்களுக்கு எந்த மாதிரியான காமிரா வேண்டும். ஏதாவது விவரங்கள் தவறாக கொடுத்து விட்டீர்களா? முதல்வர் கேட்கிறார்'' என்றார்.

"நான் கொடுத்த விவரம் சரிதான்... அந்தக் காமிரா புதுசாக மார்க்கெட்டுக்கு வந்திருக்கு'' என்றேன். உடனே பக்கத்திலிருந்த எம்.ஜி.ஆர், வெங்கட்ராமனிடம் "இது போன்ற காமிரா வந்திருப்பது அவருக்கு எப்படித் தெரியும் என்று கேளுங்கள்'' என்று சொன்னது எனக்கும் காதில் கேட்டது. "நான் ஜெர்மனியிலிருந்து வெளியாகும் போட்டோகிராபி பத்திரிகையில் பார்த்தேன்'' என்று சொன்னேன். "சரி... உடனே அந்தப் பத்திரிகையை எடுத்துக்கொண்டு அவரை வரச் சொல்லுங்கள்'' என்று சொல்லி விட்டார் முதல்வர்.

உடனே நான் கோட்டைக்கு விரைந்

தேன். அந்தப் பத்திரிகையை முதல்வரிடம் காட்டினேன். அதில் சொல்லப்பட்டிருந்த விவரங்களை ஆர்வமுடன் படித்தார் எம்.ஜி.ஆர். அதில் புதிய விஷயங்கள் குறிப்பாக சாலை ஓரத்தில் நின்று ஒரு விபத்தைப் படம் எடுத்தால்கூட, சாலை நடுவில் இருந்து எடுத்தாற்போல ரிசல்ட் கிடைக்கும். "ஓ இவ்வளவு வசதிகளுடன் காமிரா வந்துவிட்டதா?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டுவிட்டு அனுமதி கொடுத்தார். கோப்பில் மார்ஜினுக்குப் பக்கத்தில் "காமிரா வாங்கியவுடன் என்னிடம் காண்பிக்கச் சொல்லவும்'' என்று எழுதிவிட்டார் முதல்வர்.

காமிரா வாங்கியவுடன் முதல்வரிடம் தெரிவித்தேன். "உடனே அதை எடுத்துக் கொண்டு வாருங்கள்" என்றார் எம்.ஜி.ஆர். நான் என் உதவியாளருடன் எம்.ஜி.ஆரைப் பார்த்தேன். காமிராவை ஒரு குழந்தையைக் கையாள்வது போல் மென்மையாகக் கையாண்டு பார்த்தார். "ஃபிலிம் இருக்கிறதா?" என்று கேட்டார். முதல்வர் கேட்பார் என்று முன்கூட்டியே ஜாக்கிரதையாக



ஃபிலிம் ரோலைப் போட்டுத்தான் காமிராவைக் கொண்டு போயிருந்தேன். உடனே எம்.ஜி.ஆர் என் உதவியாளரைக் கூப்பிட்டு என்னையும் அவரையும் படமெடுக்கச் சொன்னார். பின்னர் உதவியாளரைத் தம் பக்கத்தில் நிறுத்தி வைத்துக் கொண்டு "சந்திரசேகர் நீங்கள் எங்கள் இருவரையும் படம் எடுங்கள்'' என்றார். ''எனக்கும் போட்டோ எடுக்கத் தெரியுமா?" என்று சோதனை செய்வது போலிருந்தது அவரது செயல். நான் உடனே எம்.ஜி.ஆரையும் என் உதவியாளரையும் சேர்த்துப் படம் எடுத்தேன். இந்தச் சம்பவம் காபினெட் அறையில் நடந்தது. பக்கத்தில் அமை... கள். அவர்களுக்கும் எம்.ஜி.ஆருட... க் காமிராவில் படம் எடுத்துக்

வேண்டும் என்ற ஆசை. ''அண்ணே... எங்களையும் உங்களுடன் சேர்த்து ஒரு படம்...'' என்று கோரிக்கை வைத்தார்கள். "இந்த காமிரா உங்களை படம் எடுக்காதைய்யா?'' என்றார் அவர்களிடம் விளையாட்டாக. அந்த ஜோவியலான சூழலில், நான் எம்.ஜி.ஆரிடம் "உங்களை 'குளோஸ்-அப்'பில் ஒரு படம் எடுக்கலாமா?'' என்றேன். உடனே எம்.ஜி.ஆர் என்னை ஒரு குறிப்பிட்ட இடத்துக்குப் போகச் சொல்லி அங்கிருந்து எடுங்கள்' என்றார். மேஜையில் அண்ணா படத்துடன், அவரது பொன்மொழிகளும் இருந்த புகைப்படத்தை காமிராவைப் பார்த்து திருப்பி வைத்து, கழுத்தில் இருந்த குண்டு காயத்தை மறைத்தவாறே வழக்கமான புன்னகையுடன் போஸ் கொடுத்தார். (இங்கே பிரசுரமாகி இருப்பது அப்போது எடுத்த படம்தான்) அதன் பின் அமைச்சர்களை எம்.ஜி.ஆருடன் நிற்க வைத்துப் படங்கள் எடுத்தேன். பின்னர் அந்தப் புகைப்படங்களை எம்.ஜி.ஆர் ரசித்துப் பார்த்தார்.

தடய அறிவியல் நிபுணருக்குப் புகைப்படங்கள் எடுப்பது; அதை ஆராய்வது போன்றவற்றில் நல்ல பயிற்சி இருக்க வேண்டும். ஒரு படத்தைப் பார்த்த உடனேயே அது அசலா, அல்லது ஏதாவது ஒட்டு வேலையா, உல்டாவா, கோல்மாலா என்று கண்டுபிடிக்கத் தெரிய வேண்டும். ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் அவருக்கு மிகவும் தலைவலி கொடுத்துக்கொண்டிருந்தார் சுப்பிரமணியசாமி. அவரை எப்படியாவது தடா சட்டத்தின் கீழ் சிறையில் போட வேண்டும் என்று ஆளும்கட்சி திட்டம் போட்டது. திடீரென்று ஒருநாள், அம்மாபேட்டை குண்டு வழக்கில் தேடப்பட்டு வந்த தடா ரவி என்பவரோடு, சுப்பிரமணியசாமியும் சேர்ந்திருப்பது போல ஒரு புகைப்படத்தை வெளியிட்டார் ரவியின் வழக்கறிஞர். அதைத் தொடர்ந்து சுப்பிரமணிய சாமியின் மீது 'தடா' கோர்ட்டில் வழக்குப்பதிவு செய்யப்பட்டது. சாமி தில்லிக்குத் தப்பி ஓடினார். ஓய்வு பெற்ற உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் என்னைத் தொடர்பு கொண்டார். "ரவியைப் பார்த்ததே இல்லை என்று சாமி சொல்கிறார். தடய அறிவியல் அடிப்படையில் நீங்கள் அந்தப் புகைப்படத்தை ஆராய்ந்து அறிக்கை கொடுக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்!

(தொடரும்)

முண்டா பதவி
ஏற்க மறுப்பு...



2000 நவம்பர் 19
விக்ரம கார்த்திகை 4
மலர் : 59
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சாதுப் பிரதமருக்குச் சங்கடங்கள்!

ஹிந்துத்வா கொள்கைகளைப் பொறுத்தவரை வாஜ்பாய் ஒரு மிதவாதி; அத்வானி அளவுக்குத் தீவிரம் காட்டுபவர் அல்ல. எனவேதான் பிரதமர் பதவிக்கு அவர் அத்வானியைக் காட்டிலும் உகந்தவராகிறார். அவரது சீனியாரிட்டி மட்டுமின்றி, இந்த குணாம்சத்தையும் உத்தேசித்துத்தான் பி.ஜே.பி. வாஜ்பாயைப் பிரதமராக்கியது.

ஆனால், இந்த 'மிதவாத' கோட்பாட்டைப் பிரதமர் நாட்டு நிர்வாகத்தில் கடைப்பிடிப்பது துளியும் உதவாது.

நாட்டின் தலைவர், அரசின் தலைவர் என்கிற முறையில், உறுதியான, இறுதியான முடிவுகள் எடுத்து, அவற்றை நிலை நிறுத்தவும் செயல்படுத்தவும் பிரதமர் வேகம் காட்டியாக வேண்டும்.

அத்தகைய வேகமும் உறுதியும் போக்ரன் விவகாரம் நீங்கலாக வேறெதிலும் இதுவரை பிரதமர் வெளிப்படுத்தவில்லை.

சமீபத்திய அமைச்சரவை விரிவாக்கம்கூட பிரதமரின் பலத்தைக் காட்டிலும் பலவீனத்தைத்தான் அதிகமாகப் பறை சாற்றுகிறது.

'கேட்டது கிடைக்கவில்லை' என்ற கோபத்தில் 'அரசியல் துறவறம்' மேற்கொள்வதாக அறிவித்த உமாபாரதியைச் சமாதானப்படுத்த அவருக்கு காபினெட் அமைச்சர் பொறுப்பு




ஒதுக்கப்பட்டிருக்கிறது. உமாபாரதியும் துறவைத் துறந்துவிட்டு, பதவியை ஏற்றுக் கொள்ள ஓடோடி வந்திருக்கிறார். அது மட்டுமல்ல, 'இனிமேல் அடம் பிடித்து ரகளை செய்ய மாட்டேன்; ஒழுங்காகப் பதவி வகிப்பேன்' என்று பத்திரிகையாளர்களிடம் அறிக்கை வேறு கொடுத்திருக்கிறார்!

இந்த அப்பட்டமான, சிறுபிள்ளைத்தனத்தைத் தூக்கிச் சாப்பிடும் வகையில் அமைந்திருக்கிறது முண்டாவின் நடத்தை.

புதிதாக நிறுவப்பட்டுள்ள ஜார்கண்ட் மாநிலத்தின் முதல்வராக்கப்படுவதற்காக மத்திய அமைச்சர் மரான்டியைப் பதவி விலகும்படி கேட்டுக் கொண்ட பிரதமர், முண்டாவுக்கு மத்திய அமைச்சரவையில் இடம் ஒதுக்கினார்.

முண்டாவுக்கோ ஜார்கண்ட் முதல்வராக வேண்டும் என்று ஆசை. பிரதமரின் அறிவிப்புக்குப் பதில் எதுவும் கூறாததோடு, அமைச்சர்கள் பதவியேற்பு வைபவத்துக்கு வராமலே இருந்துவிட்டார் முண்டா!

'ஒரு மாநில முதல்வராகச் செயல்பட நான் லாயக்கில்லை என்றால் மத்திய அமைச்சராக மட்டும் நான் எவ்வாறு பொறுப்பு வகிக்க முடியும்?' என்று வாதிடுகிறார் முண்டா!

மத்திய அமைச்சர் பதவியைக் காட்டிலும் ஒரு மாநிலத்தின் முதல்வராகப் பொறுப்பு வகிப்பது கூடுதல் அதிகாரத்தைக் கைகளில் வழங்குகிறது. தாமே ஓர் அமைச்சரவையை உருவாக்கி, சுயமாக இயங்கும் அதிகாரம். அதுவும் ஒரு புதிய மாநிலத்தின் முதல்வர் என்கிற பெருமையும் சேர்ந்துகொள்கிறபோது அப் பதவியின் கவர்ச்சியும் வசீகரமும் ஈர்க்கின்றன.

எதிர்பார்த்த அப்பதவி கிடைக்கவில்லை என்பதற்காகத்தான் முண்டா மத்திய அமைச்சர் பொறுப்பை நிராகரிக்கிறார்.




ஒழுங்கு நடவடிக்கை எடுக்கத்தக்கதான இந்த நடத்தையைக் கண்டிப்பதற்குப் பதிலாக, பிரதமர் அதை நியாயப்படுத்திப் பேசுகிறார்: 'முண்டாவுக்கு மாநில அரசியலில் பணியாற்றத்தான் விருப்பம் போலிருக்கிறது' என்று நிருபர்களிடம் பிரதமரே சொல்கிறார்.

'ஸ்திரபுத்தியின்றி அடிக்கடி ராஜினாமா நாடகம் நடித்து வரும் உமாபாரதிக்கு ஏன் இத்தனை முக்கிய பொறுப்பு?' என்று பிரதமரிடம் நிருபர்கள் கேட்கிறார்கள்.

"அவரிடமே கேளுங்களேன்" என்று தமக்குப் பின்னால் நிற்கும் அமைச்சரைச் சுட்டிக் காட்டிவிட்டுப் பேசாமலிருக்கிறார் பிரதமர்.

அமைச்சர்கள் தங்கள் நடத்தையால், பிரதமருக்குச் சங்கடம் ஏற்படுத்தக் கூடாது; அவர்கள் அத்துமீறல்களில் ஈடுபடும்போது பிரதமரும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்கலாகாது.

கூட்டணி அமைச்சரவையில், பிரதான கட்சியைச் சேர்ந்த பிரதமரிடம் பிற கட்சிக்காரர்கள்தான் பொதுவாக அதிருப்தி தெரிவிப்பார்கள். ஆனால் இங்கோ, பிரதான கட்சியான - பிரதமரின் கட்சியான பி.ஜே.பியைச் சேர்ந்தவர்களே தகராறு செய்வதோடு ஒழுங்கு மீறலிலும் ஈடுபடுகிறார்கள். அப்புறம் கூட்டணி கட்சிகள் அடம் பிடிக்கக் கேட்பானேன்!

கட்சிக்கு மட்டுமின்றி, ஆட்சிக்கும் நாட்டு நலனுக்கும் ஒவ்வாத சூழல் இது. பி.ஜே.பி ஒரு கட்டுக்கோப்பான கட்சி என்ற பெயர் மீண்டும் நிலை நிறுத்தப்பட வேண்டும்.

தகுதி அடிப்படையிலும் நாட்டு நலன் கருதியும்தான் அமைச்சரவை நிறுவப்பட வேண்டுமேயொழிய, தயவு-தாட்சண்யத்துக்காக அல்ல. அத்தகைய அமைச்சரவையைத் தமது செயல் திட்டத்துக்கேற்ப நிறுவுவது என்பது பிரதமர் பதவிக்குரிய முக்கிய உரிமைகளுள் ஒன்று. அந்த அதிகாரத்தை நிலை நாட்டவும் அவ்வுரிமையை மதிக்காதவர்களை நிராகரிக்கவும் பிரதமர் தயங்கலாகாது. ஒழுங்கு மீறல்களைச் சகித்துக் கொண்டிருப்பது பலவீனத்தின் அடையாளம்.

**பாரதீய ஜனதா கட்சியின் தலைவர் பங்காரு லட்சுமண் கடந்த வாரம் சென்னை வந்திருந்தார். கட்சி அலுவலகத்தில் கல்கிக்கு அவர் அளித்த பிரத்யேகப் பேட்டி:**

**கடந்த ஓராண்டுகால தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசின் முக்கியமான சாதனை என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?**

நிலையான ஆட்சியைத் தரமுடிந்துள்ளது. இன்று, இந்த ஆட்சி எத்தனை நாள் நீடிக்கும் என்று நாட்டில் யாரும் கேள்வி எழுப்புவதில்லை. அடுத்து அகில உலக அளவில் எண்ணெய் விலை ஏற்றம் பெரும் பாதிப்புகளை ஏற்படுத்தியிருக்கிறது. ஆனால், இந்தியப் பொருளாதாரம், இதனால் பெரிய பாதிப்பு ஏதுமில்லாமல், தாங்கிக் கொண்டது. தாராளமயமாக்கல் தொடர்கிறது. முதல் முறையாக,



விவசாயம் குறித்த தேசியக் கொள்கை அறிவிக்கப்பட்டுள்ளது. நதி நீர்ப் பங்கீட்டுப் பிரச்னைகள்–உள்நாட்டிலும் சரி, அண்டை நாடு களுடனும் சரி– சுமுகமாய்த் தீர்க்கப்பட்டுள்ளன. விவசாயிகளுக்காக 'கடன் அட்டை'கள் வழங்கப்படுகின்றன. உணவு உற்பத்தியில் அபரிமிதமான சாதனை. உணவைச் சேமிக்கப் போதிய அடிப்படை வசதிகள் இல்லாத காரணத்தால், மிக மலிவுவிலையில் ஏழைகளுக்கு வழங்க அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

**இன்னொரு தேர்தலைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்கிற பயம்தான் உங்கள் கூட்டணிக் கட்சிகளையெல்லாம் சிதறாமல் வைத்திருக்கிறதா?**

இதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். தேர்தலுக்கு முன்பாகவே கூட்டணி அமைத்துத்தான் வாக்கு கேட்டோம். கூட்டணி ஆட்சிக்குத்தான் மக்கள் வோட்டுப் போட்டு ஆட்சியில் அமர்த்தியிருக்கிறார்கள். இந்தத்

தடவை, கூட்டணியில் உள்ள கட்சிகளிடையே அண்டர்ஸ்டாண்டிங் நன்றாக இருக்கிறது. இன்றுள்ள சூழ்நிலையில் கூட்டணி ஆட்சிதான் சாத்தியம் என்பதை மக்களும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஏன், மே.வங்காளத்தில், பல வருடங்களாக கூட்டணி ஆட்சிதானே நடந்து கொண்டிருக்கிறது. அங்கேயும், கூட்டணிக் கட்சிகளுக்குள் கருத்து வேறுபாடுகள் இருக்கத்தானே செய்கின்றன. அதையும் மீறி ஆட்சி நடக்கிறதே!

**ஆனாலும், கூட்டணிக் கட்சிகளுக்குள்ளே மோதல்கள் அதிகமாய் இருக்கிறதே? குறிப்பாக தமிழ்நாட்டில் வாழப்பாடி ராமமூர்த்தி-ராமதாஸ் மோதலைப் பார்க்கிறபோது கூட்டணிக் கட்சிகள் தானா என்று சந்தேகம் வருகிறதே?**

பல கட்சிகளும், தங்களுக்குள் குறைந்த பட்ச பொதுக் கொள்கை ஒன்றை வகுத்துக் கொண்டு, அதன்படி ஆட்சி நடத்தினாலும், அந்தந்த கட்சிகளுக்குக் கருத்துச் சுதந்தரம் இருக்கிறது. ஆனாலும், தேசிய ஜனநாயகக் கூட்டணியின் நன்மதிப்பைக் குறைக்கும் விதமான மோதல்களைத் தவிர்க்கும்படி, இடைவிடாமல் கூட்டணிக் கட்சிகளுக்கு வலியுறுத்திக் கொண்டுதான் இருக்கிறோம். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை தி.மு.க. இந்தப் பிரச்னையை சுமுகமாக சமாளிக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

**பிரச்னைகளுக்குத் தீர்வு காண முயற்சி செய்யாமல், அண்டை நாடுகளால் தீவிரவாதம் தூண்டப்படுகிறது என்றும் கூட்டணி தர்மம் கருதிச் செயல்படுகிறோம் என்றும் புதுப்புது காரணங்களைச் சொல்லி சப்பைக் கட்டுக் கட்டுவது, பா.ஜ.க. மூத்த தலைவர்களுக்கு வழக்கமாகிவிட்டதே?**

# "முஸ்லிம்களுக்கு அழைப்பு விடுப்பது ஆதாயத்தோடுதான்!"

பாகிஸ்தானில் தீவிரவாதிகளுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு இந்தியாவுக்குள் அனுப்பப்படுவது உலகறிந்த விஷயம்தானே! எந்த அரசாங்கமும் தர்ம நியாயத்துக்குக் கட்டுப்பட வேண்டும். கூட்டணி ஆட்சியில், கூட்டணி தர்மத்தைக் கடைபிடிக்க வேண்டிய கடமை கூட்டணியில் இடம் பெற்றுள்ள அனைத்துக் கட்சிகளுக்கும் உண்டு. அதை எப்படிச் சொல்லாமல் இருப்பது?

**பா.ஜ.க. முஸ்லிம்களுடன் நெருக்கமாகச் செல்ல வேண்டும் என்று பேசுவது, வோட்டு வங்கியை மனத்தில் வைத்துக் கொண்டுதானே?**

எங்களுக்கு அது அரசியல் ரீதியில் பயன்தரும் என்பது வாஸ்தவம்தான். ஆனாலும், அதனால் ஒட்டுமொத்த பலன் இந்த நாட்டுக்குத்தான். பா.ஜ.க. இந்த நாட்டின் மிகப் பெரிய கட்சி. முஸ்லிம்கள் இந்த நாட்டில் உள்ள மிகப் பெரிய மைனாரிடி சமூகம். இந்த

## பங்காரு லட்சுமண் பேட்டி



## சங்கீத 'சிக்னல்'கள்...

அகமதாபாத்தில் மட்டும் சுமார் 20,000 கண்பார்வை அற்றவர்கள் உள்ளதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. இவர்களுக்காக, இங்கு நடக்கும் ஒரு பிரத்யேக தொழிற் பள்ளியில் படிக்கும் மாணவ மாணவியர் பள்ளி அருகே காலையும் மாலையும் சாலையை கடக்க மிகவும் சிரமப்படுகிறார்கள்.

இந்தப் பள்ளியிலேயே வேலை செய்யும் ஆர்தி பரிவார் என்பவர் தாமே முன் வந்து டிராபிக் சிக்னல்களிலிருக்கும் சிவப்பு, மஞ்சள், பச்சை போன்ற நிறங்களிலிருந்து பேச்சும், சங்கீதமும் வரும்படி அமைத்துள்ளார். இந்த இசை சுமார் மூன்று நிமிடம் ஒலிக்கும். இதைத் தொடர்ந்து 30 வினாடிகள் ஹிந்தியிலும் குஜராத்தி மொழியிலும் அறிவிப்புகள் ஒலிக்கும். இதன் மூலம் பார்வை அற்றவர்கள் மற்றவர்களின் துணையின்றி தாங்களாகவே சாலையை எளிதில் கடக்க முடியும்.

– அகமதாபாத் பாண்டு

இருவரும் உணர்வு பூர்வமாக ஒன்று படவேண்டியது முக்கியமல்லவா? அதற்கு, முஸ்லிம்களுக்குச் சலுகைகளை வழங்குவதைவிட, ஒருவரையொருவர் இன்னும் சிறப்பாகப் புரிந்து கொள்ளுவது சிறந்த வழி என்று நாங்கள் நினைக்கிறோம்.

பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால், முஸ்லிம்கள் இரண்டாம்தரக் குடிமக்களாக நடத்தப்படுவார்கள்; மதக் கலவரங்கள் நடக்கும் என்றெல்லாம் பிரசாரம் செய்யப்பட்டது. கடந்த இரண்டரை வருடங்களாக நடக்கிற பா.ஜ.க. ஆட்சியில் அப்படி ஏதும் நடக்கவில்லையே!

**ஆனாலும், முஸ்லிம்களுக்கு பா.ஜ.க. மீது நம்பிக்கை முழுமையாக ஏற்பட்டு விட்டதாகத் தெரியவில்லையே?**

நாட்டின் பல்வேறு பகுதிகளிலும், முஸ்லிம்கள் பா.ஜ.க.வைப் புரிந்து கொண்டு, கட்சியில் சேர்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். அவ்வாறு சேருவோர் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது என்றாலும் நாங்கள் எதிர்பார்க்கும் வேகத்தில் அதிகரிக்கவில்லை. அதற்காகத்தான், அவர்களுக்கு மீண்டும் மீண்டும் அழைப்பு விடுக்கிறோம். வாருங்கள்! நாம் இருவரும் கைகோத்துக் கொண்டு நடப்போம். நடக்கிறபோது நான் நல்லவன் என்று புரிந்து கொள்ளுவீர்கள். அப்படியில்லாமல், என் நேர்மை மீது சந்தேகம் வந்தால், அந்த நிமிடமே தாராளமாய் விலகிச் சென்று விடலாம் என்றுதான் நாங்கள் கூறுகிறோம்.

**பாபர் மசூதியை இடிக்காமல் இருந்திருந்தால், பா.ஜ.க.மீது முஸ்லிம்களுக்கு நம்பிக்கை ஏற்படுவது சுலபமாக இருந்திருக்கும் அல்லவா?**

பாபர் மசூதி இடிக்கப்பட்ட உடனேயே, எங்கள் தலைவர்கள், அச்சம்பவம் மிகவும் எதிர்பாராதது; துரதிர்ஷ்டமானது என்று கூறினார்கள். ராம ஜன்மபூமி சர்ச்சைக்கு, மசூதியை இடிப்பதுதான் ஒரே வழி என்று பா.ஜ.க. என்றைக்குமே சொன்னது இல்லை. ராம ஜன்ம பூமி இந்துக்களின் உணர்வு சம்பந்தப்பட்ட நம்பிக்கை. எனவே, அது விஷயத்தில் அனைத்துப் பிரிவினரும் ஒன்று கூடி கலந்து ஆலோசித்து ஒருமித்த கருத்து ஏற்படுத்தி அதன் அடிப்படையில் பாராளு மன்றத்தில் சட்டம் இயற்றுவது, சர்ச்சைக்குரிய பாபர் மசூதியை முஸ்லிம்களின் ஒத்துழைப்புடன் வேறு இடத்துக்கு மாற்றுவது, என இரண்டுவிதமான தீர்வுகளைத்தான் பா.ஜ.க. கூறி வந்தது. அந்த இரண்டுமில்லாமல், மூன்றாவதாக ஒரு விஷயம் நடந்து விட்டது என்பது துரதிர்ஷ்டவசமானது. இந்தச்

சூழ்நிலையில், உச்சநீதிமன்றத்திடம் விஷயத்தை விட்டுவிடுவதுதான் சரி என்பது பி.ஜே.பியின் கருத்து.

**உ.பி. விவகாரத்தைப் பார்க்கிறபோது, பி.ஜே.பி. தன் தனித்துவத்தை இழந்து, இன்னொரு காங்கிரஸ் கட்சியாக மாறி வருகிறது என்று கூறும்படி உள்ளதே! முதல்வர்களை மாற்றுவது காங்கிரஸ் கலாசாரமில்லையா?**

ராம் பிரகாஷ் குப்தா, கட்சியின் மூத்த தலைவர்களில் ஒருவர். உ.பி. முதல்வர் பதவிக்கு வேறு ஒருவரை நியமிக்கலாம் என்று அவரே கருதினார். கட்சி மத்தியக் குழுவின் கருத்தும் அதுவே. எனவே, இன்னொரு தலைவர், அவருக்குப் பதிலாக முதல்வராகியிருக்கிறார்.

**கட்சி மேலிடம், முதல்வர்களை மாற்றுவது என்பது உ.பி.யில் மட்டும் இல்லையே! டெல்லி சட்டசபைத் தேர்தலுக்குச் சில மாதம் முன்பாக, சுஷ்மா ஸ்வராஜ்ஜ முதல்வர் பதவியில் திணித்தீர்களே?**

கட்சி மேலிடம், தன் சொந்த விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் முதல்வர்களை மாற்றுவது ஜனநாயகம் இல்லை. இப்போதுகூட அதை நாங்கள் எதிர்க்கிறோம். ஆனால் மாநில நலனுக்காக, கட்சி நலன் கருதி, அவசியம் கருதி முதல்வர்களை மாற்றுவதில் தவறில்லை.

**ஆந்திர முதல்வர், மத்திய மந்திரி சபையில் சேருவது குறித்து பரிசீலிப்பதாகக் கூறியுள்ளாரே! அது தேசிய ஜனநாயகக் கூட்டணி ஆட்சியின் ஸ்திரத் தன்மைக்கு எந்த அளவுக்கு உதவும்?**

தெலுங்கு தேசம் கட்சியை, மந்திரி சபையில் சேரும்படி ஆரம்பம் முதலே வற்புறுத்தி வருகிறோம். அவர்களும் மந்திரி சபையில் சேருவதை வரவேற்கிறோம்.

**இன்னும் எத்தனை காலம், பா.ஜ.க. பிராந்தியக் கட்சிகள் என்கிற குதிரைகள் மீது சவாரி செய்தபடி ஆட்சி செய்து கொண்டிருக்கும்?**

பிராந்தியக் கட்சிகளை, எங்கள் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டு, பின் விலக்கி விடுவது எங்கள் கொள்கை இல்லை. வரும் தேர்தல்களில், பா.ஜ.க. தனித்தே முந்நூறு சீட்கள் பெற்றாலும்கூட, எங்கள் கூட்டணியில் உள்ள பிராந்தியக் கட்சிகள் எங்களுடன்தான் இருப்பார்கள்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **சௌரா**

---

*"மாமியாரைக் கண்டு ரெண்டு நாளா ரொம்ப பயப்படுறியே, ஏன்?"*

*"குழாயடிச் சண்டைல எந்த கோமதி கிட்ட நா தோற்றேனோ, அவளை மாமியார் ஜெயிச்சுட்டு வந்துருக்காளே!"*

*– அம்பை தேவா*





**"பெண்டாட்டிதான் கேக்கறான்னா, நீயும் 15 பவுன்ல செயின் வாங்கிக் கொடுத்திருக்கியே, அவளுக்குக் கழுத்து உறுத்தாதாப்பா...?"**

**"நானும் இதைத்தான் கேட்டேன்... உங்க அம்மாவுக்குக் கண் உறுத்துமே தவிர எனக்குக் கழுத்து உறுத்தாதுன்னு சொல்லிட்டா!"**

**– சீர்காழி வி. ரேவதி**

சென்னை நகரத்து இளம் அழகிகள், மிஸ் சென்னை கிரீடம் பெறுவதற்காக, செட்டிநாடு வித்யாஷ்ரம் பள்ளி அரங்கில், பூனை நடை நடந்துகொண்டிருந்தபோது, சென்னை அடையாரில் ஆனந்த்நாயர் வீட்டில் அவரது மகன், பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தான். அரங்கில், இரவு பதினோரு மணிக்கு, அந்தப் பையனின் அக்கா பூஜாவின் தலையில் மிஸ். சென்னை கிரீடத்தை 'அலைபாயுதே' மாதவன் சூட்ட, நடிகை ஷாலினி விருதை வழங்க, அரங்கமே கைதட்டிக் கொண்டிருந்தபோது, வீட்டில் அவன் தூங்கிக் கொண்டிருந்தான்.







மிஸ் சென்னை பூஜாவுக்கு வானத்தில் மிதப்பது போன்ற சந்தோஷம். காரணம், தான் மிஸ் சென்னை ஆவோம் என்று துளியும் எதிர்பார்க்கவில்லையாம். பூஜா, மகளிர் கிறிஸ்தவக் கல்லூரியில் இரண்டாம் வருடம் பி.சி.ஏ படிக்கிறார். சென்ற மாதம் மிஸ் அடையாறு அழகிப் போட்டியில் வெற்றி பெற்றவர். அது கொடுத்த உற்சாகம்தான் என்னை மிஸ் சென்னை போட்டியில் கலந்து கொள்ள வைத்தது'' என்று சந்தோஷமாகச் சொல்கிறார்.

"மிஸ் அடையாறு போட்டியில் கலந்து கொள்ளும் ஐடியா எப்படி வந்தது பூஜா?"

"தோழிகள்தான் காரணம். சும்மா ஒரு ஜாலிதானே?" என்று சொன்னார்கள். எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல், கேஷுவலாகக் கலந்துகொண்டேன். மிஸ் அடையாறு ஆனேன். மிஸ் சென்னை அறிவிப்பு வந்தவுடன், விண்ணப்பித்தேன்... ஆனால் நிஜமாய்ச் சொல்லுகிறேன். மிஸ் சென்னை ஆவேன் என்று கனவிலும் எதிர்பார்க்கவில்லை.

# போட்டிக்கு வந்த

"இறுதிச் சுற்றில் பங்கேற்கும் ஆறு பேரில் ஒருவராக பூஜா தேர்ந்தெடுக்கப்பட்டால் நன்றாக இருக்கும் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆறு பேரில் ஒருவராக அவள் பெயர் அறிவிக்கப்பட்டதும், சந்தோஷம் அடைந்தேன். மிஸ் சென்னையாக வருவாள் எனக்கு இது நூற்றுக்கு இருநூறு பர்சன்ட் இனிய ஆச்சரியம்" என்று பூஜா சொல்லும்போதே உற்சாகம் பொங்குகிறது.

"நான் மாடர்ன் பெண்தான். ஆனால் நம் பாரம்பரியமான விஷயங்களையும் விட்டு விடாதவள். இதற்கு உதாரணமாக என் பெயரையே சொல்லலாம். மேலோட்டமாக மாடர்ன் பெயராய்த் தெரிந்தாலும் பூஜா, முழுக்க முழுக்க இந்திய கலாசாரத்துடன் சம்பந்தப்பட்ட ஒரு பெயர்தானே?"

என்று நான் துளியும் எதிர்பார்க்கவில்லை" என்கிறார் பூஜாவின் அப்பா முன்னாள் கர்னல் ஆனந்த் நாயர். இப்போது, தனியார் நிறுவனம் ஒன்றில் உயர் பொறுப்பில் இருக்கிறார்.

"பூஜா அழகிப் போட்டியில் கலந்து கொள்ள நீங்கள் எந்த அளவுக்கு ஊக்கம் கொடுத்தீர்கள்?"

"எனக்கு ஆபீசில் பொறுப்புகள் அதிகம். பூஜா அழகிப் போட்டியில் கலந்து கொள்ளுவது அவளாக எடுத்த முடிவு. நான் அதை ஆட்சேபிக்கவில்லை. தட்ஸ் ஆல். அவளைத் தயார்ப்படுத்தி, ஊக்கம் கொடுத்தது எல்லாம் என் மனைவிதான்" என்று தம் மனைவி ஷீலா பக்கம் கைகாட்டினார் கர்னல் ஆனந்த் நாயர்.

"பூஜாவுக்குப் பரிசு கிடைக்கவில்லை என்றாலும் பரவாயில்லை; பரிசு கிடைக்கவில்லையே என்ற வருத்தம் அவளுக்கு ஏற்பட்டு விடக்கூடாது என்பதில் நான் குறியாக இருந்தேன். எனவே, ஜெயித்தால் சந்தோஷம்; இல்லையெனில், இது ஒரு நல்ல அனுபவம். கவலைப்பட வேண்டாம்' என்கிற ரீதியில் தான் அவளை நான் தயார் பண்ணினேன். எதிர்பார்ப்பு மிகக் குறைவு என்பதால் வெற்றி எங்களுக்கு இரட்டை சந்தோஷத்தைக் கொடுக்கிறது!" என்கிறார் ஷீலா.

"பிறகென்ன வழக்கம் போல் சினிமா, மாடலிங்தானா?"

பதில் சொல்லத் தயங்குகிறார் பூஜா. அதற்குள் அவரது அம்மா, முந்திக்கொண்டு "இப்போது, இரண்டாவது வருடப் படிப்பு நடக்கிறது. இன்னும் ஒரு வருடம் முடிந்து குறைந்த பட்சம் ஒரு கிராஜுவேட் ஆக வேண்டும். படிப்புதான் என்றைக்கும் நிரந்தரம். படிப்பின்கூடவே மாடலிங்கில் ஈடுபட விருப்பம்தான். சினிமா

# மலர்!

பற்றியெல்லாம் துளிகூட யோசிக்கவில்லை" என்கிறார்.

**மி**ஸ். சென்னை போட்டிக்குத் தன்னைத் தயார் செய்துகொண்ட ரகசியத்தைச் சொன்னார் பூஜா.

"விபா'வின் வித்யா, ஷோபா இருவரும் நடைப்பயிற்சி அளித்தார்கள். பிரத்யேக டிசைனர் மூலம் உடை வடிவமைக்க ஏற்பாடு செய்தார்கள். இறுதிச் சுற்றில் கேள்வி கேட்பார்களே! அது என்ன மாதிரியாக இருக்கும் என்று முந்தைய இந்திய, உலக அழகிப் போட்டிகளின் பாணியில் யோசித்து கேள்விகளையும், பதில்களையும் ரெடி பண்ணி வைத்திருந்தேன்.

"என்ன மாதிரி கேள்விகள்?"

"மறுபிறவி எடுத்தால் யாராக பிறக்க விருப்பம்? உங்களைக் கவர்ந்த ஆண்/பெண்? இந்தியாவின் மிக முக்கிய பிரச்னை என நீங்கள் நினைப்பது எது? மிஸ் சென்னையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் என்ன செய்வீர்கள்? என்று நிறைய கேள்விகள். ஆனால், அதில் எதையும் கேட்கவில்லை.

"சரி! இப்போது சொல்லுங்கள். மிஸ் சென்னையானால் என்ன செய்வீர்கள்? என்பதற்கு என்ன பதில் ரெடி பண்ணி வைத்திருந்தீர்கள்?"

"என்னைப் பார்த்தாலே தெரியவில்லையா? நான் யோசித்து வைத்திருந்த பதில்: "மகிழ்ச்சியில் துள்ளிக் குதிப்பேன். நிஜத்திலும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன் என்று சொன்னவர், தம்பியை நள்ளிரவில் எழுப்பி, தாம் தேர்வானதைச் சொல்ல, அவரும் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்திருக்கிறார்.

**— எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப் படங்கள்: **யோகா**



இதை வாசகர்கள் நம்பித்தான் ஆகவேண்டும். கடந்த நான்காம் தேதி சென்னை, அண்ணாசாலையில் உள்ள தேவநேயப்பாவாணர் நூலக அரங்கில் மாலை ஆறு மணிக்குத் தொடங்கியது இந்த அதிசயம். ஒரு மாலை நேரத்தில் ஐந்நூறு பேர் ஓரிடத்தில் கூடி இரவு பத்துமணி வரை 'தமிழகக் கல்வி முறைப்பற்றி கோபாவேசமாகப் பேசியதும், பார்வையாளர்களும் வெகுண்டு மைக்பிடித்தனர். "குமாஸ்த்தாக்களை உருவாக்கும் இந்தக் குப்பை கல்வி முறைக்குக் குட்பை சொல்ல வேண்டும்"என்று கொட்டித்தீர்த்தார்கள். அதற்குக் காரணமாக இருந்தது மனோன்மணியம் சுந்தரனார் பல்கலையின்



• பிரபஞ்சன்

# காலேஜ் நடத்து; கட்சி ஆரம்பி!

முன்னாள் துணை வேந்தர் வசந்தி தேவி. 'தமிழகத்தில் கல்வி' பற்றி காரசாரமாக உரையாடியிருக்கும் நூல். அந்நூலின் விமர்சன அரங்கில் வெடித்துக் கிளம்பிய உண்மைகள் உங்கள் பார்வைக்கு...

**எம்.அனந்த கிருஷ்ணன், துணைத் தலைவர்-தமிழக உயர் கல்வி ஆய்வு மன்றம்**

"நீ இதைத்தான் படிக்க வேண்டும், இப்படித்தான் படிக்க வேண்டும். இத்தனை மணி நேரம் படிக்க வேண்டும் என்று மாணவனைத் துன்புறுத்துகிற துயரம் இங்கு மட்டும்தான். நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கப்பட்டு, இன்றையச் சூழலுக்குக் கொஞ்சம் ஒத்துவராத இந்தக் கல்வி முறைக்கு நாம் என்று காரியம் செய்கிறோமோ, அன்றுதான் விடிவு. அது இப்போதைக்கு நடக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. கல்வியை விலை கொடுத்து வாங்கும் நுகர்வோராக மாணவர்களை மாற்றியிருக்கும் தனியார் கல்வி, இந்தச் சமூகத்தின் மிகப் பெரிய சாபக்கேடு. கல்வி என்பது பணம் பண்ணும் ஸ்தலமாகிவிட்டது. மாணவர்களிடம் ரசீது கொடுக்காமல் சுரண்டப்பட்ட பணத்தைக் கொண்டு பலர் கட்சி தொடங்கி இருக்கிறார்கள். சமீபத்தில் தொடங்கப்பட்ட கட்சிகளின் பின்னணியில் இரண்டு டஜன் தொழில் நுட்பக் கல்லூரிகள் பணம் காய்க்கும் மரங்களாக இருக்கின்றன. இது நான் கண்கூடாகக் காணும் கசப்பான உண்மை.

• மு. அனந்த கிருஷ்ணன்

**பேராசிரியர் ஏ. ஜேம்ஸ் வில்லியம்**

(மதுரை காமராசர், மனோன்மனியம் பல்கலை ஆசிரியர் சங்கத் தலைவர்.)

சுயநிதிக் கல்லூரி ஒவ்வொன்றும் ஒரு ஆண்டிற்கு ஒரு கோடி ரூபாய் லாபம் ஈட்டுகிறது. செனட் குழு என்ற முறையில் சுயநிதிக் கல்லூரிகளுக்கு ஆய்வு செய்யச் சென்றபோது பல அதிர்ச்சியூட்டும் தகவல்கள் கிடைத்தன.

சர்ப்ளஸ் ஒவர் இன்கம் என்ற பிரிவில் கணிசமான தொகை கறுப்புப் பணமாக மாற்றப்படுகிறது. தேய்மானம் இருபது சதவீதம் காட்டுகிறார்கள். ஆசிரியர்களுக்கு அதிக சம்பளம் கொடுப்பதாகக் கணக்கு காட்டிவிட்டு தெரிந்தே அவர்களை ஏமாற்றுகிறார்கள்.



• ஞானி



• வசந்திதேவி

இளங்கலை தமிழ்ப்பாடத்திற்குக் கூட நன்கொடை வாங்கும் அவலம் தமிழகத் தனியார் கல்லூரிகள் பலவற்றில் இருக்கிறது. நாங்கள் நடவடிக்கை எடுக்கக் கூறி அறிக்கை கொடுத்த கல்லூரிகளின் மீது இதுவரை எந்த நடவடிக்கையும் கிடையாது.

**பேரா. அ. மங்கை**

யாரோ தயாரித்து அனுப்பும் பாடத்தை மாணவர்கள்மீது திணிக்கும் ஒரு புள்ளியாகத்தான் இன்று ஆசிரியர்கள் இருக்கிறார்கள். எனவே ஆசிரியர்களை மட்டும் குற்றம் சொல்வது தவறு. அதே நேரம் அவர்களிடமும் குறைபாடுகள் இல்லாமல் இல்லை. ட்யூசன் என்ற பெயரில் ஏழை மாணவர்களைப் பாதிக்கும் கலாசாரத்திற்கு எப்படியோ அடிமையாகி விட்டார்கள். வகுப்பறையில் கேள்வி கேட்கக் கூடாது என்று சொல்கிற ஆசிரியர்களும் அதிகம் பெருகியிருக்கிறார்கள். அதற்குக் காரணம் கல்வி முறைதான்.

**ஞாநி - பத்திரிகையாளர்**

ஒரு சமூகத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சியில் ஆரம்பக் கல்விக்குத்தான் அதிக பங்கு இருக்கிறது. நூலக அமைப்பு என்பது ஆரம்பக் கல்வியிலேயே வந்துவிட வேண்டும். புதிய கல்விமுறை, கல்வி நிறுவனங்களில் மாற்றம் குறித்து ஒருவர் உருவாக்கும் முன் முயற்சிகளை அவர், மாற்றலாகி அல்லது ஓய்வு பெற்றுச் சென்றவுடன், விட்ட இடத்திலிருந்து வளர்த்தெடுக்க முடியாமல் போய் விடுகிறது. இது சாத்தியமாக சிந்தனையுள்ள நிறைய பேர் தேவை.

**பேராசிரியர் அரசு**

கல்வி ஒரு மதமாகிவிட்டது. எனவே மதச் சார்பின்மை பற்றிய பாடத்திட்டம் தேவை. சமகால சமூகக் கூறுகளை சொல்லித் தர நம் கல்வியில் இடமில்லை. பெண்ணியம், தலித்தியம், பற்றி அவர்கள் எங்கு போய் படிப்பது. இவற்றைத் தெரிந்து கொள்ள மீடியாதான் ஒரே வழி என்றால், மீடியாவில் ஒருநிலை எங்கே இருக்கிறது. சமூகம் பற்றித் தெளிவான பார்வையில்லாத ஒரு மாணவர் சமூகம், எப்படி சரியான பொதுக் கருத்தைப் பிரதிபலிக்க முடியும். பிறகு எப்படி அவர்கள் மக்கள் சக்தியின் ஒரு அங்கமாக அந்தஸ்து பெறமுடியும். முதலில் அரசியல்வாதிகள் அவர்களை பயன்படுத்துவதை அடியோடு நிறுத்த வேண்டும்.

**பிரபஞ்சன்**

புதுவை அரவிந்தர் ஆசிரமம் நடத்தி வரும் இண்டர்நேஷனல் யுனிவர்சிட்டியில் வகுப் பறைகளே கிடையாது. இயற்கையான சூழலில், குறைந்த எண்ணிக்கையில்தான், ஒவ்வொரு ஆசிரியருக்கும் மாணவர்கள் ஒதுக்கப்படுகிறார்கள். வகுப்பின் முடிவில் 'கேள்வி நேரம்' உண்டு. அப்போது எல்லோரும் கேள்வி கேட்க வேண்டும்.

இந்த முறையைப் பரவலாக்க வேண்டும். பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பு அரசுத் தேர்வில் தோற்றுப்போகும் மாணவர்களில் பெரும்பாலானவர்கள், ஆங்கிலத்தில் பெயில் மார்க் வாங்கியிருப்பார்கள். ஆங்கிலம் ஒரு மொழியாக இருக்க வேண்டுமே தவிர அது தேர்ச்சியை நிர்ணயிக்கக் கூடியதாக இருக்கக் கூடாது. கவிதை, நாடகத்தை, படைப்புகளை விமர்சனம் செய்வதுபோல கல்வியையும் விமர்சிக்கவேண்டும்.

**டாக்டர் வசந்திதேவி**

உடல் உழைப்பை அடிப்படையாகக் கொண்ட கல்விதான் இந்த நாட்டுக்கு அவசியம். அதேபோல், பணமுள்ளோர் குழந்தைகளுக்கு ஒரு பள்ளியும், ஏழைகளுக்கு ஒரு பள்ளியும் என்ற இரட்டைமுறை ஒழிய வேண்டும். அவரவர் வசிப்பிடப் பகுதியிலேயே, ஒரே கல்வித் தரத்தில் இருகுழந்தைகளும் படிக்க வேண்டும். அப்போதுதான் அமைதியான சமூகம் உருவாகும். பேதங்களை- வளர்க்கும் கல்வி இந்த நாட்டுக்குத் தேவையில்லை. இதை உடைத்தெரிய ஆசிரியர்களுக்கும் நம்பிக்கை இல்லை. மரபை உடைக்க பயப்படும் அல்லது நமக்கென்ன என்று இருக்கும் செக்குமாடுகள் அவர்கள்.

தொகுப்பு - **ஜெயன்**

# அமைச்சர் பங்களாவில்



* ராஜசேகர்

**பசுமைப் புரட்சிக்கு வித்திட்ட சி. சுப்ரமண்யம் பற்றிய நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறார் அவரது மகன் ராஜசேகர் :**

தில்லியில் 8, ஹேஸ்டிங்ஸ் சாலை (இப்போது கிருஷ்ணமேனன் சாலை) என்ற முகவரியில் அப்பாவுக்குப் பங்களா ஒதுக்கப்பட்டிருந்தது. தில்லியை உருவாக்கிய நகரமைப்பு வல்லுனர்கள் அந்தப் பங்களாவில்தான் தங்கியிருந்தார்களாம். ஐந்து ஏக்கர் நிலம் பங்களாவைச் சுற்றி இருந்தது. காலி இடத்தில் நாங்கள் கிரிக்கெட் விளையாடுவோம். உணவுப் பஞ்சம் தலைவிரித்தாடிய காலம். 'நமது நாட்டில் நிலம் இருக்கிறது; உழைக்க விவசாயிகள் இருக்கிறார்கள்; வளரும் மக்கள் தொகைக்கு ஏற்ப உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றால் வீரிய விதைகளைப் போட்டு அமோக விளைச்சலைக் காண வேண்டும்; அது ஒன்று மட்டுமே பஞ்சத்தைப் போக்கும்' என்பது அப்பாவின் திடமான நம்பிக்கை. மெக்ஸிகோவிலிருந்து வீரிய கோதுமை விதைகளை இறக்குமதி செய்து பயிரிடலாம் என்று முடிவெடுக்கப்பட்டது. விஞ்ஞானிகள் சிலர் அது போன்ற வீரிய விதைகள் நமது மண்வளத்தைப் பாழாக்கிவிடும்; எதிர்காலத்தில் மண் எதற்கும் பயனற்றுப் போய்விடும் என எதிர்ப்பு தெரிவித்தார்கள். பிரதமர்களாக இருந்த லால் பகதூர் சாஸ்திரியும், பின்னர் இந்திராகாந்தியும் அப்பாவின் ஐடியாக்களுக்கு கிரீன் சிக்னல் கொடுத்தாலும், எதிர்க்கட்சிகள் வீரிய விதை இறக்குமதிக்கு எதிர்ப்பு தெரிவித்தன.

இந்த நிலையில் திடீரென்று ஒரு நாள் பங்களாவைச் சுற்றியிருந்த நிலம் அப்பாவின் மேற்பார்வையில் உழப்பட்டது. ஒரு பக்கம் இந்திய விவசாயிகள் பயன்படுத்தும் கோதுமை விதைகள்; மற்றொரு பக்கம் மெக்ஸிகோவில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட வீரிய கோதுமை விதைகள் போடப்பட்டன. சர்ச்சை



* சி.எஸ். உரையாற்ற, அருகே அமர்ந்திருப்பவர் அன்றைய தமிழக முதல்வர் பக்தவத்ஸலம். முதல்வரின் பக்கத்தில் - இன்றைய எம்.பி. ஜெயந்தி நடராஜன்!



* காமராஜருடன் சி.சுப்ரமண்யம்

களுக்கு முற்றுப் புள்ளி வைக்கும் முறையில் தாமே நேரிடையாகப் பயிர் செய்து பார்க்கத் துவங்கி விட்டார் அப்பா. சிறிது காலத்தில் ஒரே பரப்பளவில் போடப்பட்ட அந்தப் பயிர்கள் அறுவடை செய்யப்பட்டன. இந்திய விதைகள் கொடுத்த உற்பத்தியை விட இருமடங்கு விளைச்

சல் கொடுத்தது மெக்ஸிகோ வீரிய விதைகள். மண்ணைப் பரிசோதனை செய்ததில் எந்தவிதமான சேதங்களும் நுண் சத்துக்களுக்கு இல்லை. எல்லோரையும் வெற்றிகரமாக சமாளித்து விட்டு பஞ்சாப் விவசாயிகளுக்கு வீரிய கோதுமை விதை வினியோகிக்கப்பட்டது. அடுத்த வருடம் அமோக விளைச்சல். அதுவே தொடர் கதையாகி உணவுப் பஞ்சம் ஒழிந்தது. இன்று பஞ்சாப் விவசாயிகள் குளிர்சாதன வசதி செய்யப்பட்ட டிராக்டரை உபயோகித்து வளமாக இருக்கிறார்கள் என்றால் அந்த வளர்ச்சிக்கு விதை போடப்பட்டது அப்பாவின் காலத்தில் தான்.

வீரிய விதைகளை ஆராய்ந்து கண்டு பிடித்தவர் டாக்டர் நார்மன் போர்லாங் என்ற விவசாய விஞ்ஞானி. அவருக்கு நோபல் பரிசு கிடைத்தது. அப்போது அந்த விஞ்ஞானி "நான் கண்டு பிடித்தாலும் களத்தில் அதைப் பரிசோதித்து வெற்றி



• இந்திரா காந்தி அமைச்சரவையில் நிதியமைச்சராக...



இது. இறந்து போவதற்கு இரு நாட்களுக்கு முன்பு கூட இது சம்பந்தமாகப் பேச அப்துல்கலாம் வந்திருந்தார்.

பசுமைப் புரட்சியின் வித்தகர் மட்டுமல்ல; வெண்மைப் புரட்சிக்கும் வழி காட்டியவர் அவர். மத்திய விவசாய இலாகாவின் கீழ், தேசிய பால் பொருட்கள் வளர்ச்சி வாரியம் துவக்கப்பட்டபோது அதிகாரிகள் அந்த வாரியத்துக்கு அப்பாவைத் தலைவராக இருக்கச் சொன்னார்கள். ஆனால் அப்பாவோ "இதற்காக பாடுபடும் விஞ்ஞானி

# கோதுமை அறுவடை!

தேடித் தந்தவர் சி. சுப்பிரமணியம்தான்." என்றார் பெருந்தன்மையாக.

இறுதி மூச்சு விடும் வரை அப்பாவின் எண்ண ஓட்டம் விவசாயிகளைப் பற்றியே இருந்தது. நகரை நோக்கி ஓடிவரும் கூட்டத்தைக் கிராம அளவில் நிறுத்தி வேலை வாய்ப்புக்களை உருவாக்கவேண்டும்; அதற்கு விவசாயம் தான் கைகொடுக்கும்' என்பது அப்பாவின் அழுத்தமான நம்பிக்கை. அந்த அடிப்படையில் தமது தொண்ணூறாவது பிறந்தநாளின் போதுகூட தேசிய விவசாய நிறுவனம் என்ற அமைப்பைத் துவங்கினார் அப்பா. வீரிய விதைகள், உருவாக்குவது, மண்ணிலுள்ள சத்துக்களைக் காப்பாற்றுவது, நீர்வளத்தைப் பெருக்குவது போன்ற ஆக்கபூர்வமான செயல்களில் ஈடுபடும் அமைப்பு களைத்தான் தலைவராகப் போட வேண்டும் என்று வலியுறுத்தி, டாக்டர் குரியனைப் போட்டார். அவருக்கு முழு சுதந்தரம் கொடுத்துச் செயல்பட வைத்தார்.

பொதுவாழ்வில் தூய்மைக்குப் போராடிய அவர், தம்மை நோக்கி எந்த குற்றச்சாட்டும் வீசப்படக்கூடாது என்பதில் குறியாக இருந்தார். இப்போது நாங்கள் வசிக்கும் இடத்தை 1958ல் 2500 ரூபாய்க்கு வாங்கினார். வீடுகட்ட ஊரிலிருக்கும் நிலங்களை விற்றார். எல்ஐசியிலும் கடன் வாங்கினார். இது சம்பந்தமாக ஒரு பைசா கூட விடாமல் கணக்கெழுதி வைத்திருக்கிறார். நாங்கள் எப்படி வாழ வேண்டுமென்று வாழ்ந்து காட்டிவிட்டுப் போய்விட்டார்.

சந்திப்பு: ப்ரியன்
படம்: ராஜன்

"மர்மதேசம் - பாப்புலரானபோது திகில் தொடர்கள், சொந்தம் - புகழ் பெற்ற போது குடும்பம், பாசம், கடைசி எபிசோட் வரை கண்ணைக் கசக்கிக் கொண்டேயிருக்கும் ஒரு பாவப்பட்ட பெண் பாத்திரம் கொண்ட செண்டிமெண்ட் தொடர்கள். ரமணி Vs ரமணி வெற்றியடைந்தபோது அதே பாணி, காமெடித் தொடர்கள். சின்னத் திரையையும் தொற்றிக்கொண்டு விட்ட இந்த பார்மூலா ஜுரத்தில் சிக்கி விடக் கூடாது என்பதில் தீர்மானமாக இருந்தோம். அந்த நேரத்தில்தான் 'சாவித்ரி' பெண்களுக்கு நீங்கள் என்ன நன்மை செய்கிறீர்கள்...? அதுவும் பெண் இயக்குனர்களாக இருந்துகொண்டு இப்படியொரு கதையை நீங்கள் எப்படித் தேர்வு செய்தீர்கள்?'' என்று கேட்டதும்... கொதித்தெழாமல் ''இந்தக் கேள்வியை எதிர்பார்த்தோம்'' என்றார்கள்.

''நாங்கள் பெண்கள் என்பதால்தான் இந்தக் கதையைத் தேர்வு செய்தோம்... அதற்காகத் தீவிரப் பெண்ணியம் என்பதில் உடன்பாடு இல்லை. அதிக பலாத்காரக் குற்றங்கள் நடைபெறும் ஆசிய நாடுகளில் இந்தியாவுக்குப் பெரிய இடமுண்டு. தேசிய

# சாவித்ரி



• லக்ஷ்மி - சரஸ்வதி

கதை கிடைத்தது" என்று தொடங்கினார்கள் அந்தத் தொடரை இயக்கி வரும் லக்ஷ்மி-சரஸ்வதி இருவரும்.

''சாவித்ரி கதையில் அப்படியென்ன புதுமை இருக்கிறது. சாவித்ரி பெரிதும் நம்பிய நண்பர்கள்கூட அவளை ஏமாற்றி விடுகிறார்கள். கூட்டுப் பலாத்காரத்தால் உருகுலைந்து போகிற சாவித்ரி பழி வாங்கப் புறப்பட்டு விடுகிறாள். பாதிக்கப்படும் பெண்கள் பொதுவாகப் பழிக்கு பழி வாங்குவதுதான் தீர்வு என்று புறப்படுவதில்லையே! பழி வாங்குவதுபோல காட்டுவதன் மூலம், அடுத்த தலைமுறை மகளிர் கமிஷன் அறிக்கையே இதற்கு சாட்சி. பாலியல் பலாத்காரத்திற்கு ஆளாகிற ஆயிரம் பெண்களில் வெறும் ஆறு பேர் மட்டுமே அதை வெளி உலகத்திற்குச் சொல்கிறார்கள். நீதிமன்றப் படிக்கட்டு ஏறி நியாயம் கேட்பவர்கள் அதில் இரண்டு பேர்தான். இந்த நிலைக்குக் காரணம் கல்வி அறிவு, தன்னம்பிக்கை இரண்டிலும் நமது பெண்கள் பின்தங்கி இருப்பதுதான். பெண்களைப் பெரிதும் கவர்ந்திருக்கிற தொலைக்காட்சி வழியாக அவர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுகிற தொடர்கள் தமிழில் குறைவு. இங்கே பெரிய திரையின் வியாபார ரீதியான தாக்கத்தைச் சின்னத் திரை உள்வாங்

கிக் கொண்டிருக்கிறது. அதற்குக் காரணம் சினிமாவுக்கும், சின்னத் திரைக்குமான நேரடித் தொடர்பு இங்கே இருக்கிறது. தனியார் தொலைக்காட்சிகளுக்கு இடையேயான வியாபாரப் போட்டிக்கும் ஒரு பெரிய பங்கு உண்டு. இந்த இரண்டு விஷயங்களைத் தாண்டித்தான் ஒரு நிகழ்ச்சி தயாரிப்பாளரோ, இயக்குனரோ இங்கே முடிவு வெடுக்க முடியும். அதிர்ஷ்டவசமாக எங்களைப் போன்ற இளைய தலைமுறை இயக்குனர்களுக்குச் சுதந்தரம் இருக்கிறது. அதைச் சரியான கோணத்தில் பயன்படுத்திக் கொள்ளவே இந்தக் கதையைத் தேர்ந்தெடுத்தோம்.

"நீங்கள் நினைப்பதைப் போல சாவித்ரி பாத்திரம், இயந்திரத் துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டு உயிர் வேட்டையாடும் விஜய சாந்தி போன்று கிடையாது. அவள் வேட்டையாடமாட்டாள். மென்மையான ஒரு பெண்ணைப் பாராட்டுவதற்குப் பதில் கட்டுப்படும். எங்களைப் பொறுத்தவரை சுற்றியிருக்கும் எல்லோருமே நண்பர்கள்.

"எல்லாம் சரி... உங்கள் இருவருக்குள்ளும் ஈகோ வெடித்து பயங்கர ரகளையாக வேண்டுமே?"

"நல்லவேளையாக இருவருக்கும் ஒரே மாதிரி ரசனை இருக்கிறது. எப்போதாவது எதிர்படுகிற முரண்பாடுகளை வீட்டிலேயே பேசித் தீர்த்துக் கொண்டுதான் ஃபீல்டுக்கு வருவோம்."

"சின்னத்திரைத் தொடர்கள் மீது பெண்கள் கொண்டிருக்கும் மோகம் சினிமாவை விடவும் அதிகமாகி விட்டதற்கு உங்களைப் போன்ற சீரியல் இயக்குனர்கள் தானே பெரிய காரணம்?" என்றதும் 'உண்மைதான்' என்கிறார்கள். "தொலைக் காட்சி அறிவியல் வளர்ச்சியின் முக்கியமான அவுட்புட். அறிவியல் வளர்ச்சி மூலம் கிடைக்கும் நன்மை போல அதன்மூலம்

# வேட்டையாடமாட்டாள்!

அவளை கசக்கி, குப்பைக் கூடையில் போடுகிறவர்களை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதுதான் கதை" என்று சொல்லும் லக்ஷ்மி - சரஸ்வதி இருவரும் உடன்பிறந்த சகோதரிகள். "அப்பா எஸ்.வி. ரமணன்தான் எங்களது மீடியா குரு. வானொலியில் வர்த்தக ஒலிபரப்பு தொடங்கிய கால கட்டத்தில் அதில் அவரது பங்கு அதிகம். ஐந்து வயது சிறுமிகளாக இருந்த எங்களை, வாய்ஸ் டெஸ்ட்டில் தேர்ச்சி பெறச் செய்து, வானொலி நாடகங்களில் நடிக்க வைத்தார். சென்னை தொலைக் காட்சி நிலையத்தில் இருபத்தைந்து வருடத்திற்கு முன்பே அம்மா தயாரிப்பு நிர்வாகி. கல்லூரியில் வணிகவியலும், இயற்பியலும் படித்த எங்களை இந்தக் குடும்பச் சூழல்தான் மீடியா பக்கம் அனிச்சையாக இழுத்து வந்தது என்கிறார்கள்.



• சாவித்ரி ஷூட்டிங்கில்

ஆண்களின் தலையீடு அதிகமிருக்கும் இந்தத் துறையில் உங்களுக்கு ஒத்துழைப்பு எப்படி? என்றோம். "ஆண்களை பிரச்னைக் குரியவர்களாகப் பார்த்துக் கொண்டே இருந்தால் பிரச்னைதான். ஆனால் இயக்கம் என்று வந்துவிட்டால் கேப்டனுக்கு இந்தத் துறையில் மட்டும் யூனிட்டே கிடைக்கும் ஒரு தீமையையும் நாம் ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும். ஆனால் டி.வி மீடியத்தைப் பொறுத்தவரை நேயர்களே தணிக்கை அதிகாரிகள்... குப்பை என்று தோன்றுகிற எந்த நிகழ்ச்சியையும் பார்க்கிற அல்லது ஒதுக்குகிற ஆயுதம் அவர்களிடமே இருக்கிறது. எனவே தேர்வு செய்ய வேண்டியது அவர்களே தான்!"

— விஷ்வல்தாசன்




# அழைக்கிறது அமெரிக்கா!

# கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

## குவிஸ் போட்டி—2

**போ**ன வாரம் (12.11.2000) கல்கியில் இடம்பெற்ற கூப்பனை, விடைகள் எழுதி பத்திரப்படுத்தியிருப்பீர்களே?

இதோ குவிஸ் கூப்பன் – 2.

இதையும் பூர்த்தி செய்து பத்திரப்படுத்தி வையுங்கள். இதேபோல் 26 வாரங்களுக்குக் கூப்பன்கள் வெளியாகும். **26x6=156** கேள்விகள். அனைத்துக்குமே ஒரு சொல் அல்லது எண்தான் பதில்.

26 வாரங்களின் முடிவில் நீங்கள் விடையெழுதியுள்ள அனைத்து கூப்பன்களையும் சேர்த்து, நாங்கள் குறிப்பிடும் கடைசி தேதிக்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும். ஜெராக்ஸ் எடுக்கக் கூடாது. கல்கியில் வெளியாகும் கூப்பனில்தான் எழுத வேண்டும்.

மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான விடைகளை எழுதுபவருக்கு

அமெரிக்கப் பயணம் பரிசு

ஐரோப்பா பயணம் – இரண்டாவது பரிசு

மலேஷியா – சிங்கப்பூர் பயணம் – மூன்றாவது பரிசு

மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதியிருந்தால் பரிசு பெறுபவர் குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்படுவார். மற்றவர்களுக்கு அமரர் கல்கியின் புத்தகம் பரிசாக வழங்கப்படும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

### குவிஸ் கூப்பன்—2

1) ரோமன் எண் வகையில் V என்பது '5' என்ற எண்ணையும், X என்பது '10' என்ற எண்ணையும் குறிக்கிறது அல்லவா, அதேபோல் D என்ற எழுத்து குறிக்கும் எண் எது?

2) சந்திரனில் மனிதன் முதன்முதலில் காலடி வைத்த ஆண்டு எது?

3) ஒரே ஓவரில் பிரபல கிரிக்கெட் வீரர் காரி சோபர்ஸ் எடுத்த அதிகபட்ச ரன்கள் எவ்வளவு?

4) பாக்யராஜ்-அம்பிகா நடித்த திரைப்படம் பெயரில் இடம் பெற்ற எண் எது?

5) 1948 ஜனவரியில் காந்திஜி எந்த தேதியில் இறந்தார்?

6) சிட்னி ஒலிம்பிக்ஸ், அட்லாண்டா ஒலிம்பிக்ஸ் இரண்டிலுமாகச் சேர்த்து இந்தியா பெற்ற பதக்கங்களின் எண்ணிக்கை எவ்வளவு?

**விடைகள்:**

1) ........................................

2) ........................................

3) ........................................

4) ........................................

5) ........................................

6) ........................................



# இது நகைக் காலம்!

"நாங்கள் எல்லாம் நகைச்சுவை விற்பனையாளர்கள்; ஆனால் இவரோ நகைச்சுவை உற்பத்தியாளர்'' என்று தமிழக நகைச்சுவைப் பேச்சாளர்கள் வட்டாரத்தில் குறிப்பிடப்படுபவர் இளசை சுந்தரம். பாரதி பிறந்த எட்டையபுரம்தான் இவர் பிறந்த ஊர். இப்போது ஊட்டி அகில இந்திய வானொலி நிலையத்தில், இயக்குனராகப் பணிபுரிகிறார். ஆழ்ந்த ஆன்மீக, இலக்கிய அறிவு கொண்டவர் என்றாலும் இளசை சுந்தரத்தின் தனிச் சிறப்பு நகைச்சுவைதான்.

"இயந்திரங்களைத் தனது சௌகரியத்துக்காக மனிதன் கண்டுபிடித்தான். ஆனால் இன்று அவனுடைய வாழ்க்கையே இயந்திரத்தனமாகிவிட்டது. இந்தப் பரிதாபமான நிலையிலிருந்து மீள ஒரே வழி நல்ல நகைச்சுவைதான். மனம் விட்டுச் சிரித்தால் மன அழுத்தம் குறையும்; இயந்திரத்தனம் போய் மனிதனாவான்;'' என்கிறார் இளசை சுந்தரம்.

இவர் திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் ஞாயிற்றுக்கிழமைகளில் பதினைந்து நிமிடங்கள் வழங்கிய நிகழ்ச்சி நகைச்சுவை அரங்கம். இது பெற்ற அமோக வரவேற்பு காரணமாக ஆறு ஆண்டுகள் இடைவிடாது ஒலிபரப்பானது.

இவரின் நகைச்சுவை அனுபவங்கள் ஏராளம். சிலவற்றைப் பகிர்ந்து கொள்ளுகிறார்:

அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் ஒரு படைப்பிலக்கிய கருத்தரங்கம். 'வானொலியில் படைப்பிலக்கியம்' என்பது எனக்கு அளிக்கப்பட்ட தலைப்பு. நேரமின்மை காரணமாக, என் பேச்சை மிகச் சுருக்கமாக முடித்துக் கொள்ள வேண்டிய கட்டாயம். நான் என் பேச்சை இப்படி ஆரம்பித்தேன்; நான் ஏராளமான கட்டுரைகள் வாசித்திருக்கிறேன். ஆனால் இன்றுதான் முதல் முறையாக, கட்- உரை வாசிக்கப் போகிறேன். ஆம்! என் நீண்ட கட்டுரையை ஆங்காங்கே 'கட்' பண்ணி உரையாற்றப் போகிறேன். அவையினர் என் வார்த்தை விளையாட்டை மிகவும் ரசித்தனர்.

● ஒரு நிகழ்ச்சியில் வாரியார் சுவாமிகள் முன்னிலையில் பேச வாய்ப்பு கிடைத்தது. நான் பேசும்போது, வாரியார் சுவாமிகள் பெரிய கடை; நான் சிறிய பெட்டிக்கடை' என்றேன். ஆனால் என் நகைச்சுவை உரையை மிகவும் ரசித்த சுவாமிகள், 'கடை பெரியதா? சிறியதா? என்பது முக்கியமில்லை. அங்குள்ள சரக்கு எப்படி என்றுதான் பார்க்க வேண்டும். இளசை சுந்தரத்தினுடையது பெட்டிக்கடையானாலும், சரக்கின் தரம் உயர் தரம்' என்று வாழ்த்தினார். பின்னர் வாரியார் சுவாமி

களின் கரங்களால், 'நகைச்சுவை மன்னர்' என்ற பட்டம் எனக்கு வழங்கப்பட்டது. அது எனக்குக் கிட்டிய பெரும் பாக்கியம்.

● வானொலிக்காக, ஒரு துணை வேந்தரின் உரையைப் பதிவு செய்ய வேண்டியிருந்தது. அவர் உரை எழுதிய தாள்களை குண்டூசி குத்தி எடுத்து வந்திருந்தார். நான் ஒலிப்பதிவு மரபு கருதி, 'பின்'னை எடுத்திடுங்க'' என்றேன். அவர் ஏன் என்றார் நான் சொன்னேன். 'இல்லைன்னா 'பின்னால' இடைஞ்சல் வரும்.



**பு**லிட்சர் பரிசு பெற்ற இந்தியப் பெண் எழுத்தாளர் ஜும்பா லஹிரிக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது. வரும் ஜனவரி பதினைந்தாம் தேதி கல்கத்தாவில் முகூர்த்தம். ஆம்! பாரம்பரிய பெங்காலி முறைப்படி திருமணம் நடக்கப் போகிறது. மணமகன், டைம் பத்திரிகையின் துணை ஆசிரியரான ஆல்பெர்டோ வார்வாலியஸ். இரண்டாண்டு காலமாக ஜும்பாவின் ஸ்நேகிதன்!

— சி.எம்

● தஞ்சையில் ராஜராஜசோழன் சதய விழாவை ஒட்டி ஒரு பட்டி மன்றம். ராஜராஜ சோழனைப் பெரிதும் பாதித்தவர் குந்தவையா? வந்தியத்தேவனா? என்று வாதிட ஒருபுறம் பெண் பேச்சாளர்கள். மறுபுறம் ஆண் பேச்சாளர்கள். நான்தான் நடுவர். ஒரு பெண் பேச்சாளர் ராஜராஜனைப் பெரிதும் பாதித்தவர் குந்தவைதான். அவர் தன் பெண் குழந்தைக்குக் 'குந்தவை' என்று பெயரிட்டதே இதற்கு அத்தாட்சி என்று ஒரு போடு போட, அவையினர் கைத்தட்டி ரசித்தனர். அடுத்து இணைப்புரை வழங்கிய நான் ''அம்மையாரின் கருத்தை அவையினர் மிகவும் ரசித்தார்கள். ஆனால் இங்கே நான் ஒரு கேள்வி எழுப்ப விரும்புகிறேன். ராஜராஜனுக்குப் பிறந்தது பெண் குழந்தை என்பதால், அதற்கு குந்தவை என்று பெயரிட்டான். ஒருவேளை அது ஆண் குழந்தையாக இருந்திருந்தால், வந்தியத்தேவன் என்று பெயரிட்டிருக்க லாமில்லையா? என்றதும் அரங்கமே கைதட்டலில் அதிர்ந்தது.

● பிறந்த ஊர் எட்டையபுரம் என்பதாலோ என்னவோ, பாரதி மீது மிகுந்த பற்று. எனவே பாரதி நூல்களை ஆழமாய்ப் படித்திருக்கிறேன். பாரதியைப் பற்றி யார் என்ன குற்றம் சொன்னாலும் என்னால் தாங்கிக் கொள்ள இயலாது. ஒரு நிகழ்ச்சியில் ஒருவர், என்னதான் கவிதை என்றாலும் மிகைப்படுத்தலுக்கு ஒரு வரைமுறை இல்லையா? பிஜித் தீவில் இந்தியப் பெண்கள் படும் துன்பத்தைக் கூறுகையில் விம்மி... விம்மி... விம்மி... விம்மி... என நாலுமுறை எதற்காகச் சொல்ல வேண்டும்? என்று கேட்டார். நான், 'மூன்று முறை சொல்வது இலக்கணத்துக்குட்பட்டது தான். பாரதி உணர்ச்சிப் பொங்க, கடல் கடந்து போன நம் தேசப் பெண்கள் படும் துன்பங்களைப் பற்றிச் சொல்கிறபோது, விம்மி... விம்மி... விம்மி... என்றார். அவருக்குத் துக்கம் தாளவில்லை – விம்முகிறார். அதுதான் நாலாவது 'விம்மி' என்றேன்!

**பே**சிக் கொண்டிருக்கிறபோதே, வெகு சரளமாக நகைச்சுவை வந்து விடுகிறது இளசைக்கு: ''யானைக்கு ஒரு காலம் வந்தால், பூனைக்கு ஒரு காலம் வரும் என்பது பழமொழி. அது இன்று சரியாகி விட்டது. இது பூனை காலம்! அன்று மன்னர்கள் பாதுகாப்புக்கு, யானைப்படை வைத்திருந்தார்கள். இன்று நம் தலைவர்கள் தங்கள் பாதுகாப்புக்கு வைத்துக் கொண்டிருப்பது பூனைப்படைதானே!''

சந்திப்பு: **மெளலி**

அந்தப் 'பார்சல்' குறித்து நிறைய யூகங்கள். கால்கள் இலேசாய்ப் பின்னலிட ஹரிஹரன் அதனைத் தூக்கி வருகையிலேயே சூர்யா கவனித்துவிட்டான். கிரிக்கெட் பந்தைத் தூக்கி வீசிவிட்டு ஓடி வந்து,

"உனக்கு 'பர்த்டே பிரசன்ட்' கொடுக்கக் கூட ஆளிருக்காப்பா" என்றான், மூச்சிறைக்க.

"யார் கொடுத்தா?" என்றவாரே அதனைப் பிரிக்கத் தொடங்கினாள் மீனலோசனி.

"சௌத்ரி" என்றான் ஹரிஹரன்.

"யாரு... அந்த ஜோல்னாப்பை பார்ட்டியாப்பா?"

மேற்புறம் முழுக்கப் பிரிக்கப்பட்டதுமே விசையில் இருந்து விடுபட்ட அம்பு போல ஒரு பச்சைக் கீற்று விடுபட்டு நிமிர்ந்து நின்று ஆடியது.

"ஏதோ பிளாஸ்டிக் செடியா?"

முற்றிலுமாகப் பிரித்துப் பார்த்தபின் மீனலோசனியின் முகம் ஒரு நொடிக்கு ரத்தம் பூராவும் வடிந்தது போல உயிரற்று இருந்தது. பின் பேசாமல் டீ.வி.யைப் போடப் போய் விட்டாள். சூர்யாவுக்கு மிகவும் வித்தியாசமாய்ப் பட்டிருக்க வேண்டும்.

"நிஜத் தேங்காச் செடியாப்பா..." என்றான், மண்ணுக்குள் புதைந்து கொண்டு இலேசாய் முகங்காட்டிய அந்தத் தென்னம்பிள்ளையைப் பார்த்தபடி.

## எஸ். பாலகுமார்

"தென்னம்புள்ளைன்னு சொல்லுடா..."

"ப்ச்! ரெண்டும் ஒண்ணுதாம்பா..."

ஹரிஹரனுக்குக் கவலை தொற்றிக் கொண்டது. மண் வாசனை அறியாத இந்தக் காங்க்ரீட் காடுகளுக்குள் – அதுவும் நான்காவது ஃப்ளோரில் இருந்து கொண்டு தொலைக்காட்சி வெளிச்சத்தில் வயிறு வளர்க்கும் 'ஹை-டெக்' வாழ்வில் இந்தத் தென்னம்பிள்ளையை எங்கே வளர்க்க?

"'ஷோ கேஸ்'லதான் வைக்கணும்..." என்று உள்ளிருந்து குரல் கொடுத்தாள் மீனலோசனி. 'ஏர் கூலர்' கனவைப் பொசுக்கிய அந்தத் தென்னம்பிள்ளையை சபிக்கும் தொனியில்.

சௌத்ரிக்கு அலுவலகத்தில் கொஞ்சம் 'ஒரு மாதிரி ஆள்' என்ற பெயர் இருப்பது உண்மைதான். அலுவலகக் கட்டடம் முன்பு 'கார் ஷெட்' கட்ட ஏற்பாடாகி இருந்தது. அந்த இடத்தில் குறுக்கிட்ட வேப்ப மரத்தை வெட்ட வெறும் 'அன்டிராயரும்' சிற்சில வன்முறை ஆயுதங்களோடும் வந்த இரண்டு பேரை ஏதோ தன்னையே வெட்ட வந்தவர்கள் போல அடிக்கப் போனான் சௌத்ரி.

"என்னை வெட்றா முதல்ல...." என்று குறுக்கே நின்று



கொண்டான். தலைமை அலுவலகத்தில் இருந்து ஆள் வந்து 'கார்ஷெட்' கட்ட வேறு இடம் தீர் மானித்தபின்தான் ஒய்ந் தான். பையில் எப்போதும் ஏதேனும் விதைகள் வைத் திருப்பானாம். மழை வந் தால் அலுவலகம் வர மாட் டான். ஏதேனும் சாலை யோரங்களில் கையில் ஒரு 'போர்ட்டபிள்' மண் வெட்டியோடு பார்க்கலாம்.

"மரம் இல்லாத ரோடு 'ந்யூடு'சார்..." என்பான், சௌத்ரி அடிக்கடி.

எங்கள் அபார்ட்மெண்டின் எதிர் வரிசையில் கொஞ் சம் இடம் காலியாக இருப்பது நினைவுக்கு வந்தது.

சூர்யா உடனே போய் அந்த இடத்தைப் பார்வையிட்டு விட்டு வந்தான்.

"சூப்பர் எடம்பா..." என்றான்.

"யாரு எடமோ... என்னமோ..." என்றாள் மீனலோசனி.

இந்த அபார்ட்மெண்டின் ஆர்வக் கோளாறு என்று பரவ லாக அறியப்படும் காலனி செயலாளர் வைத்தியைப் போய்ப் பார்த்தான் ஹரிஹரன்.

# மரங்களும் மனிதர்களும்

போட்டிக் கதை — 13

"நம்ப சம்பந்த முதலி இடம்தான் அது... வைங்க வைங்க... அன்பளிப்பா வந்ததைத் தூக்கி எறியவா முடியும்... நான் சொல்லிடறேன்... இப்பவே ஃபோன் போட்டு டறேன். ஆனா ஒரு விஷயம். பின்னாடி காய்க்கற தேங்காய்லே முதலியார் பங்கு கேட்டாக்க நான் 'கியாரண்டி' கொடுக்க முடியாது."

"பங்கெல்லாம் வேண்டாம் வைத்தி. மரம் வைக்க இடம் இருந்தா போதும்..."

"அட..... தென்னஞ்செடிதானே. அதுவும் ஒண்ணு தானே. வைங்க சார்..."



மறுநாள் சூர்யா ஒரு சிறிய மண்வெட்டியோடும், (அவனுக்கென்று எங்கேதான் கிடைக்குமோ?) பெப்ஸி, பிஸ்கட்ஸ் மற்றும் சிநேகிதப் பையன்கள் ஆகியோரோடும் அந்த இடத்துக்குச் சென்றான்.

இரவு ஏழரை வரை டார்ச் வெளிச்சம் துணை கொண்டு வெட்டி முடித்துவிட்டு வந்து டி.வி.யெல்லாம் பார்க்காமல் சுற்றும் ஃபேனைப் பார்த்துக் கொண்டே,

"மணலுக்கு என்ன பண்ணலாம்?" என்றான், கவலை தொனிக்க.

அந்த சௌத்ரிக்கு அறிவுக் கொழுந்து அடையாளமாய் ஜோல்னாப்பை இருந்தாலும் அடுத்தவனை அற்பப் பார்வை யெல்லாம் பார்க்க மாட்டான். உதடு பிரிக்காமல் பேசும் வித்தை தெரிந்தவன். உடை விஷயங்களை ஒரு

பொருட்டாக மதிக்க மாட்டான். பட் டன் இல்லாத சட்டை, சட்டைக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் நீள சிகரெட் மாதிரி சுருண்ட பனியன். எப் போதும் காற்றில் அலையும், எப்போதாவது எண்ணெய் காணும் தலை. அவன் தலை யைக் கையால்தான் சீவுவானாம்.

"என்ன 'சார் ஆச்சு தென்னம்புள்ள?'' என்று கேட்டான் சுருக்கமாய்.

"இந்த 'வீக்'ல எப்படியாச்சும் வச்சிடு வோம்..''

"என்ன சார் ஜி.எம்.கிட்டே சொல்ற மாதிரி சொல்றீங்க?''

"அது என்னாச்சின்னா...''

'' 'லேட்' பண்ணாதீங்க... புள்ள காய்ஞ்சிடும்.''

ஹரிஹரனுக்குத் தென்னம்பிள்ளை வைக்க இடம் தேடி அலைந்த விஷயம் சொல்ல வெட்கமாய் இருந்தது.

"என் பையன் சூர்யா இதில ரொம்ப இன்ட்ரெஸ்டு...''

"வரட்டும் சார்... அழிக்கிற தலைமுறை போய் ஆக்கற தலைமுறை வரட்டும்'' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

சூர்யா தன் மாலை நேரங்களைத் தென்னம்பிள்ளையோடு பிணைத்துக் கொண்டான். மணல் கொட்டி பள்ளத்தை நான்கு நாட்கள் ஆற வைத்தான்.

"நாளைக்கி சாயந்திரம் தேங்காச் செடி வைக்கிறம்... வந்திடுப்பா...'' என்றான் சூர்யா.

கடைசி வரைக்கும் அவனுக்கு 'தென்னம் பிள்ளை' என்ற பெயரில் இஷ்டமே இல்லை.

அன்று மாலையே ஒரு பாட்டி மற்றும் நண்பர்களுடன் வந்து,

''அம்மா... ஆறு காப்பி ப்ளீஸ்...'' என்றான்.

"அப்பா! பாட்டிதான் எனக்குத் தேங் காச்செடி வைக்கிறது எப்படின்னு சொல்லிக் கொடுத்தது. இன்னிக்குச் செடி வைக்கப் போறதும் அவங்கதான்...''

மணல் நிரப்பப்பட்டு இருந்த அந்தப் பள்ளத்தைச் சுற்றி அனைவரும் கைகளை 'V' போல் முன்புறம் கட்டி நிற்க, பாட்டி கையில் தென்னம்பிள்ளையைக் கொடுத் தான் சூர்யா. பாட்டி தன்னாடியபடி பள் ளத்தில் தென்னம்பிள்ளையை வைத்து நிமிர, யாரும் சொல்லாமலே பையன்கள் கைதட்டினர். மீனலோசனிக்கு தன் பிள்ளை உள்ளூர் 'அன்டர்-19'ல் அரை சதம் அடித்த உச்சக்கட்ட சந்தோஷத்தை இந்தத் தென் னம்பிள்ளை முறியடித்து விட்டதாய் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

எல்லாம் முடிந்து வட்ட வடிவ வேலி, போட்டு வெளியே வருகையில் சூர்யா நின்று திரும்பி அந்தத் தென்னம்பிள்ளை யைப் பார்த்தான். அது அவனைப் பார்த்து சிரித்தாற்பால இருந்தது. ஒரு அம்மாவுக்கும், பையனுக்குமான பரிமாற்றமாய்த் தோன்றி யது அது.

நான்காவது தளத்தில் இருந்து கொண்டு தரைத் தளத்தின் எதிரே உள்ள தென்னம் பிள்ளைக்குத் தண்ணீர் ஊற்றுவது அவ் வளவு எளிதான செயல் இல்லை. சூர்யா அதைச் சாதித்தான்.

அந்தப் பிள்ளை புதுசாக வெளிர் பச்சை யில் சாம்பல் பூத்த மாதிரி ஒரு மெல்லிய துளிர்விட்ட அன்று சூர்யா வீட்டுக்கு ஓடி வந்து '...ய்யே!' என்று முஷ்டியை மடக்கி னான்.

அவன் கூட்டாளிகள் வரும்போதெல் லாம்.

"நான் வச்ச செடி...'' என்று அப்பா, அம்மாவுக்கு இணையான ஓர் உயர்திணை மரியாதையை அதற்குக் கொடுப்பான்.

ஒரு நல்ல அடை மழைநாளில் குடை பிடித்துக் கொண்டு நான்கைந்து பேர் கீழே நிற்க, சூர்யா ஓடி வந்தான்.

"முதலியார்ப்பா... சுத்தறார்... சீக்கிரம் வா...'' என்றான்.

---

**''பத்து தொகுதியிலயாவது நின்னு ஜெயிக்கிறோமா இல்லையா பார்னு சவால் விட்டுட்டு வந்த தலைவர் எதுக்காக இப்ப வருத்தப்படறார்?''**

**''கட்சியிலேயே ஆறு பேர்தான் இருக்காங் களாம்!''**

**– சக்தி. சரவணன்**



ஹரிஹரன் அங்கே சென்றபோது அவர்கள் அந்தத் தென்னம்பிள்ளையை சுற்றி நின்றிருந்தனர்.

"நீங்கதானா சார் அது? ஏன் சார் படிச்சவங்கதானே நீங்க!"

"அது என்னாச்சின்னா..."

"ஒரு இடத்த வாங்கிப் போடுங்க. அதிலே தென்னம்புள்ளயோ, எந்தப்புள்ளயோ வைங்க..யார் வேண்டாம்னு சொன்னா..."

"நம்ப வைத்திகிட்ட சொல்லி... அவர் கூட ஃபோன் பண்ணினாரே..."

"யார்ரா அந்த வைத்தி" என்று அருகில் இருந்தவனைப் பார்க்க, அவன்,

"அந்த எல்.ஐ.சியில் இருக்கானே... இவங்க செக்ரட்டரி அந்த ஆள்..."

"பட்டா அந்த செக்ரட்டரி பேர்லயா இருக்கு?" என்று முதலியார் குரலை உயர்த்தினார்.

சூர்யா பயந்து ஒண்டிக் கொண்டான்.

"இப்படித்தான் செடிய வக்கிறது. கம்பை நட்டு வைக்கிறது. அப்புறம் கோர்ட்டுக்குப் போக வேண்டியது. நான் என்ன இளிச்சவாயனா..."

"மன்னிச்சுக்கங்க...நான் உங்களை நேர்ல பார்த்துச் சொல்லியிருக்கணும்?.."

"நேர்ல பாத்துச் சொன்னாலும் இதாங்கிறேன்" என்று சொல்லிவிட்டு குனிந்து அந்தத் தென்னம்பிள்ளையை இரு கைகளாலும் அணைத்து ஒன்றாக்கி இறுக்கி ஒரு விசிறு. புத்தம்புதிய பால் நிற வேர்களுடன் மண்ணில் இருந்து விடுபட்டு துள்ளி வெளியே வந்து விழுந்தது அந்தப் பச்சைக் குழந்தை. இந்த உலகத்தைப் புதுசாய் வேடிக்கைப் பார்க்கத் தொடங்கிய புது உயிர். இயற்கை அன்னையின் மற்றுமோர் குட்டி தேவதை.

வீறிட்டு அழுத சூர்யாவை அழுத்தி அணைத்துக் கொண்டான் ஹரிஹரன்.

முதலியார் போகும்போது சூர்யாவின் தலையைத் தடவி,

"புள்ள ரொம்ப அழுவறான் பாருங்க... கூட்டிக்கிட்டுப் போங்க..." என்று சொல்லிச் சென்றார்.

வீட்டில் துக்கம் விழுந்த அமைதி. வெளியே வந்தால் பள்ளத்தில் மிச்சமிருக்கும் சிதைந்த வேர்கள். வெறிச்சிட்ட மண் வெளி. காய்ந்து சுருண்ட இலைகள்.

"சாவறதுக்குள்ளே ஒரு பிடி மண்ணாவது சொந்தமா வாங்கிடணும்ங்க..." என்



**"அவர் இருந்தாலும் பயங்கர ஜோசிய பைத்தியம்..."**

**"எப்படி?"**

**"ஜோசியர்கிட்ட போறதுக்கு இது நல்ல நேரமான்னு இன்னொரு ஜோசியர் கிட்ட கேட்டுட்டுப் போறாரு!"**

**– வந்தவாசி பா. ஜெயக்குமார்**

றாள் மீனலோசனி.

லட்சோபலட்சம் மக்களின் கனவு.

அதன்பின் வந்த நாட்களில் மனதெங்கும் இழப்பின் வலி இம்சித்தது.

மற்றுமோர் இருள் விலகாத விடியற் காலையில் அபார்ட்மெண்ட் வாசலில் ஒரு டெம்போ வந்து நின்றது. முதலியார் சத்தம் தெளிவாய்க் கேட்டது.

"எவனோ என்னடா வைக்கிறது...நான் வக்கிறேன்டா என் இடத்தில்..."

இரண்டு மூன்று பேர் டெம்போவில் இருந்து வரிசையாய்த் தென்னம்பிள்ளைகளை இறக்கிக் கொண்டிருந்தனர்.

"இவ்வளவு புள்ளைங்க வரணும்னுதான் உன் தேங்காச்செடி செத்துப் போயிருக்கு" என்றான் ஹரிஹரன் சூர்யாவிடம்.

நல்லது. வீட்டுக்கு எதிரே பசுமை பொங்கும் ஒரு தென்னந்தோப்பு. இந்த நகருக்கு, தக்க சிறு பிறை நுதலாய் ஒருபசுமைக்காடு. இங்கே நிறைய காக்கைகள் சிறகடிக்கலாம். எந்நேரமும் பறவைகளின் ஒலி இதமாய்ப் பரவலாம். இந்த இயந்திர வாழ்க்கையின் மாலை நேரங்களைத் தென்னங்காற்று இனிதாக்கலாம். இந்தப் பூமியில் எங்கோ, யாருக்கோ பெய்யப்போகும் ஒரு சில மழைத்துளிகளுக்கு இவை காரணமாகலாம்.

அந்த ஜோல்னாப்பை சௌந்திரியிடம் இவற்றையெல்லாம் சொன்னால் அவன் உதடு பிரிக்காமல் சிரிக்கக் கூடும். சந்தோஷமாய்த்தான். ●

# பொன்னியின் செல்வன்

நாற்பதாம் அத்தியாயம்

## "நான் கொன்றேன்!"

திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் சோழ வம்சாவளியை விவரிக்கும் போது, "வானுலகைப் பார்க்கும் ஆசையினால் ஆதித்தன் அஸ்தமனத்தை அடைந்தான். உலகில் கலி என்னும் காரிருள் சூழ்ந்தது!" என்று கூறப்பட்டிருக்கிறது. வீரபாண்டியன் தலை கொண்ட வீராதி வீரனாகிய சோழ சாம்ராஜ்யத்துப் பட்டத்து இளவரசன் ஆதித்த கரிகாலன் அகால மரணமடைந்தது பற்றித்தான் அவ்வாறு திருவாலங்காட்டுச் செப்பேட்டில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

ஆதித்த கரிகாலன் மரணமுற்றுக் கிடந்த கடம்பூர் அரண்மனையின் அறையில் அப்போது உண்மையாகவே காரிருள் சூழ்ந்திருந்தது.

காளாமுகத் தோற்றங் கொண்டவனால் கழுத்து நெறிபட்டுத் தரையில் தடாலென்று தள்ளப்பட்ட வல்லவரையனுடைய உள்ளத்திலும் அவ்வாறே சிறிது நேரம் இருள் சூடி கொண்டிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அந்த உள்ளத்தில் ஒளி தோன்றியபோது, நினைவு வரத் தொடங்கியபோது அவன் கண்களும் விழித்தன. ஆனால் அவனைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த இருளின் காரணத்தினால் அவனுடைய கண்ணுக்கு எதுவும் கோசரம் ஆகவில்லை. ஆதலின், அவன் எங்கே இருக்கிறான், என்ன நிலைமையில் இருக்கிறான் என்பதும் அவன் உள்ளத்தில் புலப்படவில்லை.

மண்டையை வலித்துக்கொண்டிருந்த

அமரர் கல்கி

உணர்ச்சி முதலில் ஏற்பட்டது. கழுத்து நெறிபட்ட இடத்திலும் வலி தோன்றியது. மூச்சு விடுவதற்குத் திணற வேண்டியிருந்ததை அறிந்தான். இந்த மண்டை வலி எப்படி வந்தது? இந்தக் கழுத்து வலி எதனால் ஏற்பட்டது? மூச்சு விடுவதற்கு ஏன் கஷ்டமாயிருக்கிறது? ஆகா! அந்தக் காளாமுகன்! அவனைத் தான் கண்டது உண்மையா? அவன் தன் கழுத்தை நெறித்துக் கொல்ல முயன்றது உண்மையா? எதற்காகக் கழுத்தை நெறித்தான்? தான் சத்தம் போடுவதைத் தடுப்பதற்காகவா? ஏன்? ஏன்? அவனுடைய இரும்புப் பிடியை மீறிக் கொண்டு தான் போக விரும்பியது எங்கே? ஆகா! நினைவு வருகிறது! ஆதித்த கரிகாலரிடம் போவதற்காக! ஐயோ! அவர் கதி என்ன ஆயிற்று? நந்தினி என்ன ஆயினாள்? ரவிதாஸன் என்ன செய்தான்? தன்னைத் தடுக்கப் பார்த்துத் தரையில் தள்ளிய காளாமுகன் பிறகு என்ன செய்திருப்பான்...? தான் இப்போது இருப்பது எங்கே? பாதாளச் சிறையிலா? சுரங்கப் பாதையிலா? கண் விழிகள் பிதுங்கும்படியாக வந்தியத்தேவன் சுற்றுமுற்றும் உற்றுப்பார்த்தான். ஒன்றுமே தெரியவில்லை! கடவுளே! இப்படியும் ஓர் அந்தகாரம் உண்டா...? தான் விழுந்த இடம் நந்தினியின் அந்தப்புற அறையில், யாழ்க் களஞ்சியத்தின் அருகில் என்பது நினைவு வந்தது. அங்கேயே அவன் கிடக்கிறானா? அல்லது வேறு எங்கேயாவது தூக்கிக்கொண்டு போய்ப் போட்டு விட்டிருக்கிறார்களா? இதை எப்படித் தெரிந்து கொள்வது?

இரண்டு கைகளையும் நீட்டித் துழாவிப் பார்த்தான். ஒரு பொருள் கைக்குத் தட்டுப்பட்டது. அது என்ன? கத்தி போல் அல்லவா இருக்கிறது? ஆம்! கத்திதான்! திருகுமடல் உள்ள கத்தி! சாதாரணக் கத்திகளை விட மிகச் சக்தி வாய்ந்தது! எவன் பேரிலாவது பாய்ந்தால் அவன் செத்தான்! இம்மாதிரி விசித்திரமான கத்தியை எங்கேயோ பார்த்தோமே? அது எங்கே? யார் கையில் பார்த்தோம்...! ஆம்! இடும்பன் காரியின் கையில் அல்லவா பார்த்தோம்! அன்று முன்னிரவில் நடந்தவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன! இந்தக் கத்தி இங்கே எப்படி வந்தது? ஓ! இதன் மடல் ஈரமாயிருக்கிறதே! ஈரம் எப்படி வந்தது? தண்ணீரா? இல்லை! எண்ணெயா? அதுவும் இல்லை! இரத்தமாகத்தான் இருக்க வேண்டும்! ஐயோ! யாருடைய இரத்தம்? ஒருவேளை தன்னுடைய இரத்தமே தானோ? வந்தியத்தேவன் தன் பின் மண்டையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். அங்கேயெல்லாம் வலித்ததே தவிர, இரத்தம் வந்ததாகத் தெரியவில்லை. உடம்பில் வேறு எங்கும் கத்திக் காயத்தின் வலி இல்லை...! பின், இந்த முறுக்குக் கத்தியின் மடல் யாருடைய இரத்தத்தைக் குடித்து விட்டு இங்கே நம் அருகில் கிடக்கிறது? இதனால் அவன் யாரையும் காயப்படுத்தவில்லை. இதற்கு முன் அவன் கையினால் அதை எடுத்ததும் இல்லை! பின்னே யார் அதை உபயோகித்திருப்பார்கள்? இடும்பன்காரியாயிருக்குமோ? அவன் யார் மேல் இதைப் பிரயோகித்திருப்பான்? ஒருவேளை இடும்பன் காரிதான் அந்தப் பயங்கரத் தோற்றங் கொண்ட காளாமுகனின் வேடத்தில் வந்தானா? இல்லை! இல்லை! அப்படியிருக்க முடியாது! இடும்பன்காரி அவ்வளவு நெடுதுயர்ந்த உருவம் கொண்டவன் அல்ல...

இது என்ன? காலடிச் சப்தமா? யாராவது வருகிறார்களா? பேசாமல் இருக்கலாமா? குரல் கொடுக்கலாமா? வருகிறவர்கள் கையில் விளக்குடன் வரக் கூடாதோ? எங்கே இருக்கிறோம் என்றாவது தெரிந்து கொள்ளலாம் அல்லவா? இருட்டில் தெரியாமல் தன்னை மிதித்து விடப் போகிறார்களோ...?

இந்த எண்ணம் தோன்றியதும் வந்தியத்தேவன் சட்டென்று எழுந்து உட்கார்ந்தான். கையில் அந்தச் சிறிய கத்தியை ஆயத்தமாக

வைத்துக்கொண்டு ''யார் அங்கே?'' என்று கேட்டான்.

அவனுடைய குரல் ஒலி அவனுக்கு அளவில்லாத வியப்பை அளித்தது. அதை அவனாலேயே அடையாளங் கண்டு கொள்ள முடியவில்லை. அவனுடைய குரலாகவே தோன்றவில்லை. அந்தக் காளாமுகன் பிடித்த பிடியினால் அவனுடைய தொண்டைக்கு இந்தக் கேடு நேர்ந்திருக்கிறது. சப்தம் வெளியில் வருவதே கஷ்டமாயிருக்கிறது.

மறுபடியும் ஒரு தடவை, ''யார் அங்கே?'' என்று உரக்கச் சப்தமிட்டுக் கேட்க முயன்றான்.



ஏதோ அதுவும் ஓர் உறுமல் சப்தமாக வந்ததே தவிர, குரல் ஒலியாகவே தோன்றவில்லை.

மீண்டும் காலடிச் சப்தம் விரைவாகக் கேட்டு நின்றது. வந்தவர் அவனுடைய குரலைக் கேட்டுப் பேயோ பிசாசோ என்று பயந்து வந்த வழியே திரும்பிப் போய்விட்டார் போலும்.

இதை எண்ணி வந்தியத்தேவன் சிரிக்க முயன்றான். சிரிப்புக் குரலும் அம்மாதிரி உருத்தெரியாமலேதான் ஒலித்தது.

சரி; இனி உட்கார்ந்திருப்பதிலோ, காத்திருப்பதிலோ பயனில்லை. எழுந்து நடந்து எங்கே இருக்கிறோம் என்று சோதித்துப் பார்க்க வேண்டியதுதான்.

எழுந்து நின்றான்; கால்கள் தள்ளாடின. ஆயினும் சமாளித்துக் கொண்டு நடந்தான். கைகளை எவ்வளவு நீட்டினாலும் ஒன்றும் தட்டுப்படவில்லை.

தூரத்தில் ஏதோ சிறிது பளபளவென்று தெரிந்தது. ஆகா! அது நிலைக் கண்ணாடி போல் அல்லவா இருக்கிறது? அதில் எங்கிருந்தோ மிக மெல்லிய ஒளிக்கிரணம் ஒன்று பட்டதினால் அது பளபளக்கிறது. ரவிதாஸன் கையில் புலியின் உடலை எடுத்துக்கொண்டு நுழைந்த தோற்றம் அந்த நிலைக் கண்ணாடியிலே பிரதிபலித்தது வந்தியத்தேவனின் நினைவுக்கு வந்தது. சரி, சரி! நந்தினியின் அந்தப்புர அறைக்குள்ளேதான் இன்னமும் இருக்கிறோம். ஆனால் ஏன் இங்கே இப்படி இருள் சூழ்ந்திருக்கிறது? ஏன் நிசப்தம் குடிகொண்டிருக்கிறது? இந்த அறையில் சற்று முன்னால் இருந்தவர்கள் அத்தனை பேரும் என்ன ஆனார்கள்?

இவ்விதம் எண்ணமிட்டுக் கொண்டே வந்தியத்தேவன் இருட்டில் தடுமாறிக்கொண்டு நடந்தான். வாசற்படிக்கருகில் போனால் ஒருவேளை வெளிச்சம் இருக்கலாம், – அல்லது அங்கிருந்து வெளியேறி யாரையாவது கேட்டு நடந்ததைத் தெரிந்து கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு சென்றான்.

ஏதோ காலில் தடுக்கவே மறுபடியும் தடால் என்று விழுந்தான். ஆனால் இம்முறை ஏதோ மிருதுவான பொருளின் மீது விழுந்தபடியால் பலமாக அடிபடவில்லை. அந்த மிருதுவான பொருள் புலியின் தோல் என்று தெரிந்தது. ரவிதாஸன் கையில் எடுத்துக்கொண்டு வந்து எறிந்த புலித்தோல் மீது அவன் விழுந்திருக்க வேண்டும்...

தடுமாறி விழுந்தபோது கையிலிருந்த கத்தி நழுவிவிட்டது; அதைக் கண்டுபிடித்து எடுத்துக்கொள்வதற்காகக் கையை நீட்டித் துழாவினான். கையில் மிருதுவாக ஏதோ தட்டுப்பட்டது. வந்தியத்தேவனுடைய உடம்பெல்லாம் நடுங்கியது. ரோமங்கள் குத்திட்டு நின்றன; நெஞ்சில் பீதி குடிகொண்டது.

அப்படியும் இருக்க முடியுமா என்று எண்ணிக்கொண்டே மறுபடியும் தடவிப் பார்த்தான்.

ஆம்; அது ஒரு மனித உடல்தான்! அவன் கையில் தட்டுப்பட்டது அந்த மனிதனின் உள்ளங்கை! புலித்தோலை உடனே அகற்றித் தூர எறிந்தான். பிறகு உற்றுப் பார்த்தான். கண்ணாடியில் விழுந்த இலேசான ஒளி பிரதிபலித்துக் கீழே கிடந்த உடலையும் சிறிது புலப்படுத்தியது. ஐயோ!

இளவரசர் ஆதித்த கரிகாலர் அல்லவா கிடக்கிறார்? அவர் அல்ல! அவருடைய உயிர் அற்ற உடல்தான் கிடக்கிறது?

வந்தியத்தேவனுடைய நெஞ்சு விம்மித் தொண்டையை அடைத்துக்கொண்டது. கண்களில் அவனை அறியாமல் கண்ணீர் ததும்பியது.

நடுநடுங்கிய கைகளினால் கரிகாலருடைய உடம்பின் பல பகுதிகளையும் தொட்டுப் பார்த்தான். சிறிதும் சந்தேகத்துக்கு இடம் இல்லை. உயிர் சென்று விட்ட வெறுங்கூடுதான்!

அந்த உயிரற்ற உடம்பின் விலாப் பக்கத்திலிருந்து பெருகிப் பக்கத்தில் வழிந்திருந்த இரத்தம் அவனுடைய கைகளை நனைத்தது.

அச்சமயம் அவனுக்குக் குந்தவைப் பிராட்டியின் நினைவு உண்டாயிற்று. அந்த மாதரசி அவனை எதற்காக

அனுப்பி வைத்தாளோ, அந்தக் காரியத்தில் அவன் வெற்றி அடையவில்லை. முழுத் தோல்வி அடைந் தான்! இனி அவள் முகத்தில் விழிப்பது எங்ஙனம்?

அவனால் எவ்வளவு பிரயத்தனம் செய்ய முடியுமோ, அவ்வளவும் செய்தாகி விட்டது. ஆனாலும் பயன்படவில்லை. விதி வென்றுவிட்டது.



இளவரசரின் உயிரற்ற உடலை எடுத்து தன்னுடைய மடியிலே போட்டுக்கொண்டான். மேலே என்ன செய்வது என்று தெரியவில்லை. சிந்திக்கும் சக்தியையே இழந்து விட்டான். சப்தம் போட்டு அலறுவதற்குத் தொண்டையிலும் சக்தி இல்லாமற் போய்விட்டது.

''இளவரசர் இறந்துவிட்டார்; ஒப்புக்கொண்ட காரியத்தில் நாம் வெற்றி பெறவில்லை; குந்தவையின் முகத்தில் இனி விழிக்க முடியாது!'' என்னும் இந்த எண்ணங்களே திரும்பத் திரும்ப அவன் மனத்தில் வந்துகொண்டிருந்தன.

இவ்வாறு எண்ணிக்கொண்டு அவன் எத்தனை நேரம் அங்கே உட்கார்ந்திருந்தான் என்பது அவனுக்கே தெரியாது.

தீவர்த்தி வெளிச்சத்துடன் மனிதர்கள் சிலர் அந்த அறையை நெருங்கி வருகிறார்கள் என்பதைக் கண்ட பிறகுதான் அவனுக்கு ஓரளவு சுய நினைவு வந்தது.

கரிகாலருடைய உடலைத் தன்னுடைய மடியிலிருந்து எடுத்துக் கீழே வைத்துவிட்டு எழுந்து நின்றான்.

பத்துப் பன்னிரண்டு ஆட்கள் முன் வாசற் பக்கமிருந்து வந்தார்கள். அவர்களில் இருவர் தீவர்த்தி பிடித்துக்கொண்டிருந்தார்கள். மற்றும் சிலர் வேல் ஏந்திக்கொண்டு வந்தார்கள்.

எல்லாருக்கும் முன்னால் கந்தமாறனும் அவனுக்கு அடுத்தாற்போல் பெரிய சம்புவரையரும் வந்தார்கள்.

வந்தவர்கள் எல்லாருடைய முகங்களும் பயப்பிராந்தியைக் காட்டின. தீவர்த்தி வெளிச்சத்தில் பேயடித்தவர்களைப் போல் காணப்பட்டார்கள்.

கந்தமாறனுடைய முகத்திலே மட்டும் கோபமும் ஆத்திரமும் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

அவன் வந்தியத்தேவனைப் பார்த்ததும் ''அடே பாதகா! கொலைகாரா! சிநேகத் துரோகி! இராஜத் துரோகி! நீ தப்பித்துக் கொண்டு ஓடவில்லையா! போய் விட்டாய் என்றல்லவா நினைத்தேன்?'' என்று கர்ஜனை செய்தான்.

பின்னர் பெரிய சம்புவரையரை நோக்கி, ''தந்தையே! அதோ பாருங்கள் கொலைகாரனை! சிநேகிதன் போல் நடித்துப் பாதகம் செய்த பழிகாரனைப் பாருங்கள்! நம்முடைய வம்சத்துக்கு அழியாத களங்கத்தை உண்டு பண்ணிய சண்டாளனைப் பாருங்கள்! அவன் முகத் தோற்றத்தைப் பாருங்கள்! அவன் செய்த பயங்கரக் குற்றம் அவன் முகத்திலேயே எழுதியுள்ளதைப் போல் பிரதிபலிப்பதைப் பாருங்கள்!'' என்றான்.

சம்புவரையர் அதற்கெல்லாம் மறுமொழி ஒன்றும் சொல்லாமல் கீழே கிடந்த ஆதித்த க்ரிகாலனுடைய உடலை அணுகினார். அதன் தலைமாட்டில் உட்கார்ந்து, சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''ஐயோ! விதியே! இது என் வீட்டிலா நேர வேண்டும்? விருந்துக்கு என்று அழைத்து வேந்தனைக் கொன்ற பழி என் தலையிலா அமர வேண்டும்?'' என்று புலம்பிக்கொண்டே தமது தலையில் படார், படார் என்று அடித்துக்கொண்டு புலம்பினார்.

கந்தமாறன், ''தந்தையே! நம் குலத்துக்கு அந்தப் பழி ஒரு நாளும் வராது! இதோ கொலைகாரனைக் கையும் மெய்யுமாகப் பிடித்திருக்கிறோம்! இவன் இளவரசரைக் கொல்வதற்கு உபயோகித்த கத்தி அதோ கிடப்பதைப் பாருங்கள்! அதில் இரத்தம் தோய்ந்திருப்பதைப் பாருங்கள்! முன்னால் நான் வந்து பார்த்தபோது இவன் இல்லை. கத்தியும் இல்லை. ஓடப் பார்த்து முடியாமல் திரும்பி வந்துவிட்டான்! ஒருவேளை இளவரசர் உடம்பில் உயிர் ஒட்டிக்கொண்டிருக்கிறதோ என்று பார்க்க வந்தான் போலும்! தந்தையே! இப் பேர்ப்பட்ட மகா பாதகனுக்கு - சதிகாரத் துரோகிக்கு, - என்ன தண்டனை கொடுப்பது? எது கொடுத்தாலும் போதாதே?'' என்று கந்தமாறன் பேசிக்கொண்டே போனான்.

வந்தியத்தேவன் ஏற்கெனவே தொண்டை நெறிந்து பேச முடியாதவனாயிருந்தான். கந்தமாறனுடைய வார்த்தைகள் அவனைத் திக்பிரமை கொள்ளச் செய்தன. தன்னைப் பிறர் கொலைகாரனாகக் கருதக்கூடிய

நிலையில் அவன் இருப்பது அப்போது தான் அவனுக்குத் தெரிய வந்தது. இளவரசனைக் குத்திக் கொன்ற குற்றத்தையல்லவா இந்தக் கந்தமாறன் தன்மீது சுமத்துகிறான்? முன்னே இவன் முதுகில் நான் கத்தியால் குத்தியதாகச் சொன்னான். இப்போது இளவரசரை நான் கொன்றுவிட்டதாகவே சொல்கிறான்! நம் நிலை அப்படி இருக்கிறது! யாரும் சந்தேகிக்கக்கூடியதாக இருக்கிறது! ஆகா! அந்தப் பழுவூர் மோகினி, - அழகே வடிவான விஷப் பாம்பு, - இதற்காகவே திட்டமிட்டிருந்தாள் போலும்! இதற்காகவே தன்னைச் சில முறை காப்பாற்றினாள் போலும்! குந்தவைப் பிராட்டியின் பேரில் இவளுக்கு உள்ள குரோதத்தை இவ்விதம் தீர்த்துக் கொண்டாள்! ஆகா! அந்தச் சௌந்தரிய வடிவங் கொண்ட பெண் பேய் எங்கே? எப்படித் தப்பித்தாள்? காரியம் முடிந்ததும் மந்திரவாதி ரவிதாஸன் முதலியவர்களோடு சுரங்க வழியில் தப்பி ஓடிவிட்டாள் போலும்...!

இவ்வாறு எண்ணமிட்ட வந்தியத்தேவன் சிந்தனை சட்டென்று இன்னொரு பக்கம் திரும்பியது! ஆதித்த கரிகாலரைத் தான் கொல்லவில்லையென்பது நிச்சயம். ஆனால் வேறு யார் கொன்றிருப்பார்கள்? நந்தினியா? அல்லது ரவிதாஸனா? அல்லது காளாமுகனா? - ஒருவேளைதான் நினைவு மறக்கும் தறுவாயில் ஒரு கணம் தோன்றி மறைந்த மணிமேகலையாகத்தான் இருக்குமோ? அல்லது இந்த முறுக்குக் கத்தியை எடுத்து வந்தவனான இடும்பன்காரியாக இருக்குமோ? ஒருகால், கந்தமாறனே தான் நந்தினி மேல் கொண்ட மோகத்தினால் இந்தப் படுபாதகத்தைச் செய்துவிட்டு நம் பேரில் பழியைப் போடுகிறானா? அல்லது நந்தினி சொல்லிய அதிசயமான இரகசியத்தைக் கேட்டுவிட்டுத் தன்னைத் தானே நொந்து கொண்ட ஆதித்த கரிகாலர் தற்கொலை செய்து கொண்டு இறந்தாரா?

கந்தமாறன், தன் பக்கத்தில் நின்ற ஆட்களைப் பார்த்து, "தடியர்களே! ஏன் சும்மா நிற்கிறீர்கள்? இந்தக் கொலைகாரனைப் பிடித்துக் கட்டுங்கள்!" என்று கத்தியதுந்தான் வந்தியத்தேவனுக்குத் தனது இக்கட்டான நிலைமை மறுபடியும் ஞாபகத்துக்கு வந்தது.

கந்தமாறனை அவன் இரக்கமும் துயரமும் ததும்பிய கண்களினால் பார்த்தான். ஒரு பெரு முயற்சி செய்து தொண்டையில் ஜீவனைத் தருவித்துக் கொண்டு, "கந்தமாறா! இது என்ன? நான் இத்தகைய கொடுஞ் செயலைச் செய்திருப்பேன் என்று நீ நம்புகிறாயா? எதற்காக நான் செய்ய வேண்டும்? எனக்கு என்ன லாபம் இதனால்? நண்பா...!" என்பதற்குள் கந்தமாறன், "சீச்சீ! நான் உன் நண்பன் அல்ல. அவ்விதம் கூறிய உன் நாவை அறுக்க வேண்டும். உனக்கு என்ன லாபம் என்றா கேட்கிறாய்? ஏன் லாபம் இல்லை? நந்தினியின் கடைக்கண் கடாட்சத்தைப் பெறலாம் என்ற ஆசைதான்! அடே! அந்தப் பழுவூர் மோகினி இப்போது எங்கே?" என்றான்.

"கந்தமாறா! உண்மையில் எனக்குத் தெரியாது. நான் இங்கே நினைவிழந்து கிடந்தேன். நீங்கள் வருவதற்குச் சற்று முன்புதான் நினைவு பெற்றேன். நந்தினி என்ன ஆனாள் என்று எனக்குத் தெரியாது. ஒருவேளை சுரங்கப்பாதை வழியாக வெளியேறியிருக்கலாம். வேட்டை மண்டபத்தில் அவளுடைய ஆட்கள், - வீரபாண்டியனுடைய ஆபத்துதவிகள், - நாலு பேர் காத்திருந்தார்கள். அவர்களுடன் நந்தினி போயிருக்கலாம்!"

கந்தமாறன், "ஓகோ! உன்னையும் ஏமாற்றிவிட்டுப் போய் விட்டாளாக்கும். ஆனால் உனக்கு ஒன்றும் தெரியாது என்று சாதிக்க வேண்டாம். அதை யார் நம்புவார்கள்? நீ அவளுடைய மோக வலையில் விழுந்திருந்தாய், காலால் இட்ட காரியத்தைத் தலையினாலே முடிப்பதற்குத் தயாராய் இருந்தாய் என்பது எனக்குத் தெரியாதா? ஆதித்த கரிகாலரே சொல்லியிருக்கிறார். நந்தினியும் அவரிடத்தில் உன்னைப் பற்றிய உண்மையைச் சொல்லியிருக்கிறாள். அவள் தூண்

டியோ, அவனுக்குத் திருப்தி தரும் என்று நினைத்தோ, நீ இந்தக் கொலை பாதகத்தைச் செய்து விட்டாய்! உன்னுடைய முகத்தில் விழித்தாலும் பாவம்!'' என்றான்.

''கந்தமாறா! சத்தியமாகச் சொல்லு கிறேன். நான் இளவரசரைக் கொல்ல வில்லை. அவர் உயிரைக் காப்பாற்றும் பொறுப்பைப் பழுயாறை இளைய பிராட்டியிடம் நான் ஏற்றுக்கொண்டு வந்தேன்...''

''இவ்விதம் சொல்லித்தான் இள வரசரை ஏமாற்றினாய்! பிறகு வஞ்சகம் செய்து குத்திக் கொன்றாய்! இல்லா விட்டால், இந்த அறைக்குள் எப்படி வந்து சேர்ந்தாய்? எதற்காக வந் தாய்?''

''கந்தமாறா! இளவரசருக்கு ஆபத்து வரப் போவதையறிந்து அவரைப் பாது காக்க வந்தேன். அந்த முயற்சியில் தோற்றுப் போனேன். ஆனால் அது என் குற்றம் இல்லை. உன் தங்கை மணி மேகலையை வேணுமானால் கேட்டுப் பார்! அவள்தான் என்னை...''

''சிச்சி! என் தங்கையைப் பற்றிப் பேசாதே! அவள் பெயரையே சொல் லாதே! ஜாக்கிரதை! இனி அவள் பேச்சை எடுத்தால் தெரியுமா? உன் கழுத்தைப் பிடித்து நெறித்து இப்பொ ழுதே கொன்றுவிடுவேன்!''

இவ்விதம் கூறி விட்டுக் கந்தமாறன் வந்தியத்தேவன் மீது பாய்ந்து அவன் மார்பையும் தோள் களையும் சேர்த்துப் பிணைத் திருந்த கயிறுகளைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினான்.

பின்னர், கீழே ஆகித்த கரிகாலன் உடலுக்கருகில் உட்கார்ந்து வேதனை யில் ஆழ்ந்திருந்த சம்புவரையரைப் பார்த்து ''தந்தையே! இவனை என்ன செய்கிறது என்று சொல்லுங்கள்! நம் குலத்துக்கு அழியா அபகீர்த்தியை உண்டு பண்ணிய இந்தக் கொலை பாத கனை என்ன செய்கிறது என்று சொல் லுங்கள்! தாங்கள் அநுமதி கொடுத்தால் இவனை இந்த நிமிடமே கண்ட துண்ட மாக்கிப் போடுகிறேன்! தந்தையே சொல்லுங்கள்!'' என்று கத்தினான்.

கரிகாலனுடைய உடலைத் தடவிப் பார்த்துக்கொண்டு பிரமை பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்த சம்புவரையர் கந்தமாறனுடைய கூச்சலைக் கேட்டு அண்ணாந்து பார்த்தார்.

அவருடைய பார்வை கந்தமாற னுக்கு அப்பால் சென்றது. அந்த அறையிலேயிருந்த கட்டில் திரைச்சீலை அசைந்ததைக் கண்டார். மறுகணம் அத் திரைச் சீலையை விலக்கிக் கொண்டு ஓர் உருவம் வெளிப்படுவதைப் பார்த் தார். கண்களில் நீர் ததும்பியிருந்த காரணத்தினால் திரைச் சீலையிலிருந்து வெளிப்பட்டு வந்தது யார் என்பதை அவர் உடனே தெரிந்து கொள்ள வில்லை. இன்னும் சிறிது அருகில் அந்த உருவம் வந்ததைக் கண்டதும் அவள் தனது செல்வக் குமாரி மணிமேகலை என்பதை அறிந்துகொண்டார். அத னால் அவருக்கு ஏற்பட்ட வியப்பும் அருவருப்பும் வேதனையுடன் கலந்து முகத்தில் தோன்றின.

''மணிமேகலை! நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்று அவர் கேட்ட வார்த் தைகள், கந்தமாறனையும் திரும்பிப் பார்க்கும்படி செய்தன.

''அப்பா! நான் இங்கேயே தான் இருந்தேன். அவரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று அண்ணனுக்குச் சொல்லுங்கள். அவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை!'' என்றாள்.

கந்தமாறன் ''அப்பா! பார்த்தீர்களா? இந்தப் பாதகன் எப்படி என் தங்கை யின் மனத்தைக் கெடுத்திருக்கிறான், பார்த்தீர்களா? இவன் பேரில் குற்றம் ஒன்றும் இல்லையோமே?'' என்று சீறிக் கொண்டே சிரித்தான்.

''ஆம், அண்ணா! நிச்சயமாக இவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை!'' என்று மணிமேகலை உறுதியாகக் கூறினாள்.

கந்தமாறனை ஒரு பக்கம் ஆத்திரமும் இன்னொரு பக்கம் வெட்கமும் சேர்ந்து பிடுங்கித் தின்றன.

''தங்காய்! வாயை மூடிக் கொள்! உன்னை யார் இங்கே அழைத்தார்கள்? நீ இங்கே வந்திருக்கவே கூடாது. உன் புத்தி சுவாதீனத்தில் இல்லை. உடனே

முன் கட்டுக்குப் போ!'' என்று கத்தினான் கந்தமாறன்.

''இல்லை, அண்ணா! என் புத்தி சுவாதீனத்திலேதான் இருக்கிறது. உன் புத்திதான் கலங்கிப் போயிருக்கிறது. இல்லாவிட்டால் இவர் இளவரசரைக் கொன்றதாக நீ குற்றம் சாட்டியிருக்க மாட்டாய்!'' என்றாள் மணிமேகலை.

கந்தமாறன், ''அறிவு கெட்டவளே! இந்தக் கொலை பாதகனுக்கு நீ ஏன் பரிந்து பேசுகிறாய்?'' என்றான்.

''அவர் கொலை பாதகர் அல்ல; அதனால்தான்!'' என்றாள் மணிமேகலை.

கந்தமாறன் ஆத்திரச் சிரிப்புடன், ''இவன் கொலைபாதகன் இல்லை என்றால், பின்னே யார்? இளவரசரைக் கொன்றது யார்? நீ கொன்றாயா?'' என்றான்.

**''ஆம்! நான்தான் கொன்றேன்! இந்த வாளினால் கொன்றேன்!''** என்றாள் மணிமேகலை.

இந்த வார்த்தைகளைக் கேட்ட அங்கேயிருந்தவர்கள் அவ்வளவு பேரும் திகைத்துப் போனார்கள். அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் வியப்புடன் பார்த்துக்கொண்டார்கள்.

ஒரு கணநேரத் திகைப்புக்குப் பிறகு கந்தமாறன் வந்தியத்தேவனை விட்டு விட்டு மணிமேகலையண்டை பாய்ந்து ஓடினான். அவள் கையிலிருந்த வாளைப் பிடுங்கிக் கொண்டான். அதன் நுனியை உற்றுப் பார்த்தான்.

''அப்பா! இதைக் கேளுங்கள். இவளால் இந்த வாளைத் தூக்கவே முடியவில்லை. இவள் இதனால் இளவரசனைக் கொன்றதாகச் சொல்லுகிறாள். இது இளவரசர் உடம்பில் பாய்ந்திருந்தால், திரும்ப இவளால் எடுத்திருக்க முடியுமா? இதன் நுனியில் பாருங்கள்! சுத்தமாய்த் துடைத்தது போலிருக்கிறது! வல்லவரையனைக் காப்பாற்றுவதற்காக இப்படிச் சொல்லுகிறாள்! இவன் பேரில் இவளுக்கு ஏன் இவ்வளவு அக்கறை? அவ்வளவு தூரம் இவளுடைய மனத்தை இந்தப் பாதகன் கெடுத்து விட்டிருக்கிறான். மாய மந்திரம் போட்டு மயக்கி விட்டிருக்கிறான்! அவனுடைய முகத்தைப் பாருங்கள்! அவன் செய்த குற்றம் அவன் முகத்திலேயே எழுதியிருப்பதைப் பாருங்கள்!'' என்றான்.

உண்மையிலேயே வந்தியத்தேவன் முகத்தில் வியப்பும் திகைப்பும் வேதனையும் குடிகொண்டிருந்தன. இத்தனை நேரம் மௌனமாயிருந்தவன் இப்போது வாய் திறந்து, ''கந்தமாறா! நீ சொல்வது உண்மைதான்! நான்தான் குற்றவாளி. உன் சகோதரி என்னைக் காப்பாற்றுவதற்காகவே இப்படிக் கற்பனை செய்து சொல்லுகிறாள்! இளவரசி! தங்களுக்கு நன்றி! என் உடலிலிருந்து உயிர் பிரிந்த பிறகும் தாங்கள் என்னிடம் வைத்த சகோதர பாசத்தை மறக்க மாட்டேன். ஆனால், தங்கள் தமையன் சொல்வதை இப்போது கேளுங்கள்! அந்தப் புரத்துக்குப் போய் விடுங்கள்!'' என்றான்.

இதைக் கேட்ட கந்தமாறனுடைய குரோதம் சிகரத்தை அடைந்தது. முன்னமே சிவந்திருந்த அவன் கண்கள் இப்போது அனலைக் கக்கின.

''அடே! எனக்காக நீ சிபாரிசு செய்யும் நிலைமைக்கு வந்து விட்டதா? நான் சொல்லிக் கேட்காதவள் நீ சொல்லித்தான் கேட்பாளா? இவள் உன்னிடம் அவ்வளவு சகோதர வாஞ்சை வைத்திருக்கிறாளா? இவள் என்னுடன் பிறந்தவளா? உன்னோடு பிறந்தவளா? என்னைக் காட்டிலும் உன்னிடம் இவளுக்கு மரியாதை அதிகமா? அது ஏன்? என்ன மாய மந்திரம் செய்து இவள் மனத்தை அவ்விதம் கெடுத்து விட்டிருக்கிறாய்? உன்னை நான் கொல்லுவதற்கு இதுவே போதுமே! இதோ, உன்னை யமனுலகம் அனுப்பி விட்டு மறு காரியம் பார்க்கிறேன்! உன் அருமைச் சகோதரி கையில் வைத்திருந்த வாளினாலேயே உன்னைக் கொல்லுகிறேன்; அது உனக்கு மகிழ்ச்சி தரும் அல்லவா?''

இவ்வாறு கத்திக் கொண்டே கந்தமாறன் வாளை ஓங்கிக் கொண்டு வந்தியத்தேவன் மீது பாய்ந்தான்.

(தொடரும்)



# ஜிஞ்சர் கொடுக்கிறார் ஜிடி பாய்!

தெரிந்தவர்களாலும், தொண்டர்களாலும் 'ஜிடி பாய்' என்று செல்லமாக அழைக்கப்படும் ஜிதேந்திர பிரசாதாவின் முன்னோர்கள் சமஸ்தானத்து மன்னர்கள்! ஷாஜஹான்பூர் சமஸ்தானத்திலிருந்து வந்தவரானதால் அடி, உதை வழங்கும் தெருப் பாலிடிக்ஸ் அவருக்கு அறிமுகமில்லாத ஒன்று. மற்றவர்கள் மரியாதை கொடுக்கும் லெவலில் இருந்ததால், திரைமறைவில் ஆட்டுவிப்பவராகத்தான் மாநில அரசியலில் அவர் இருக்க முடிந்தது. மாநில காங்கிரஸ் தலைவராகவும் இருந்திருக்கிறார். ராஜீவ் காலத்தில் தில்லி அரசியலில் கால் வைத்த பிரசாதா, நரசிம்மராவ் காலத்தில் நன்றாக அங்கு காலூன்றி விட்டார். ராவின் அரசியல் செயலாளராக உயர்ந்தார். சோனியாவுக்கெதிரான காய்களை அப்போதே நகர்த்தியவர் அவர். பின்னர் சீதாராம் கேசரி காலத்தில் பிரசாதாவின் செல்வாக்கு கிடுகிடுவென உயர்ந்தது. கேசரி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, அவருக்கு ஆதரவாக பல தில்லுமுல்லுகளைப் பிரசாதா செய்தார் என்று குற்றம் சாட்டப்பட்டது. பின்னர் கேசரி தலைவரானவுடன் பிரசாதாவைத் துணைத் தலைவராக நியமித்துக் கொண்டார். கட்சி சோனியாவின் கைக்குச் சென்றவுடன் பிரசாதாவின் அரசியல் பயணம் தடைபட்டது. இன்று சோனியாவைச் சுற்றி இருக்கும் அர்ஜுன்சிங், ஆஸ்கார் பெர்னாண்டஸ், ஜார்ஜ் ஆகியோர்தான் கட்சியை ஆட்டிப் படைக்கிறார்கள் என்று குற்றம் சாட்டும் ஜிதேந்திர பிரசாதா, கேசரி காலத்தில் இதே போன்று அவர்களின் குற்றச்சாட்டுக்கு ஆளானவர்தான்.

பெரும்பாலான மாநிலங்களின் முறைப்படி கட்சித் தேர்தலே நடக்கவில்லை. சோனியாவின் தளபதிகளின் ஆலோசனைப்படி கமிட்டி உறுப்பினர்கள் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்கள். "தமிழ்நாடு காங்கிரஸைப் பொறுத்தவரை தில்லி, கேரள பாணியில் உட்கார்ந்து கொண்டு, தலைமையின் ஆலோசனைப்படி பிரதேச காங்கிரஸ் உறுப்பினர்கள் லிஸ்ட் தயாரிக்கப்பட்டு ஒப்புதல் கொடுக்கப்பட்டது. இதே போன்று வேறு மாநிலங்களிலும் நடந்துள்ளது. எல்லா மாநிலங்களிலும், முறையாக தேர்தல் நடத்தி தலைவர் தேர்தலை நடத்த வேண்டும். அப்போதும் சோனியா வெற்றி பெறுவார். ஆனால் அந்த நம்பிக்கை அவருக்கு இல்லை. எனவே இப்போது நடந்திருப்பது அழுகுணி ஆட்டம். இது போன்ற போக்குகள், காங்கிரஸை இன்னும் அழிவுப் பாதைக்கே இட்டுச் செல்லும்" என்று சொல்கிறார் தமிழக காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

சோனியாவின் தலைமைக்கு ஒரு நிரந்தர அதிருப்தியாளராக பிரசாதா எதிர்காலத்திலும் இருப்பார் என்பது தீர்மானிக்கப்பட்டு விட்டது. அவர் பின்னாலும் ஒரு கூட்டம் அணி வகுக்கும் வாய்ப்பிருக்கிறது!

உட்கட்சி ஜனநாயகத்துக்கு வலிமை சேர்ப்பதற்காகவும், கடைத் தொண்டனுக்கும் கட்சியில் மரியாதைப் பெற்றுத் தருவதற்காகவும் காங்கிரஸ் தலைவர் தேர்தலில் தாம் போட்டியிடுவதாகச் சொல்லியிருக்கிறார் ஜிதேந்திர பிரசாதா. சோனியா வெற்றி பெறுவது உறுதி என்றாலும் பிரசாதாவின் போட்டி சோனியா தாசர்களுக்கு ஜிஞ்சர் கொடுத்து அசர வைத்துள்ளது. பிரசாதாவை களத்திலிருந்து நீக்குவதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகள் பலனளிக்காமல் போன நிலையில் "போட்டியை வரவேற்கிறேன்" என்று சொல்லும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார் சோனியா!

— ப்ரியன்

படம்: ராஜன்

படங்கள்: யோகா

# டாக்டர் க.வே. அபிராமி

# மிளகில் இருக்குது

ரோமானிய அரச சபையில் ஒரு நாள் பெரிய விவாதம்.

ரோமானிய தேசத்து கஜானாவிலிருந்து, வருடந் தோறும் கணிசமான பொன் நாணயங்கள், தென்னிந்தியாவுக்குப் போய்ச் சேருகிறது. இதைக் குறைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது ஒரு தரப்பினரது வாதம். இதற்கு அரசாங்கத்தின் சார்பில் அளிக்கப்பட்ட விளக்கம்: நம் கஜானாவிலிருந்து பசும்பொன், நாணயம் போவது வாஸ்தவம்தான். ஆனால், அதற்குப் பதிலாக நமக்குக் கிடைப்பது கரும்பொன். ஆம்! தங்கத்துக்கு இணையான கருமை நிறமான மிளகு!

ரோமானிய நாட்டுக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே, நம் நாட்டு மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்ததும், அதை அவர்கள் எவ்வளவு மதிப்பு வாய்ந்ததாகக் கருதினார்கள் என்பதையும் இதன் மூலம் அறியலாம்.

இந்தியாவில், மிளகு விளையும் பகுதிகள் தமிழ் நாடும், கேரளாவும்தான். உலக அளவில் மிகத் தரமான மிளகு விளைவது இந்தியாவிலும் மலேசியா போன்ற இன்னும் சில தென்கிழக்கு ஆசிய நாடுகளில் மட்டுமே. எனவே இங்கு விளையும் மிளகுக்கு உலக அளவில் வரவேற்பு இருக்கிறது. மிளகின் பெருமையைப் புரிந்துகொண்ட அமெரிக்கர்கள், தங்கள் நாட்டிலும் மிளகை உற்பத்தி செய்ய பெரிதும் முயன்று வருகிறார்கள். ஆனாலும் அவர்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை.

எகிப்திய பிரமிடுகளில், இறந்த மனித உடல்கள் கெடாமல் பதப்படுத்துவதற்கு உப்பையும், மிளகையும்தான் பயன்படுத்தினார்களாம்!

நம் உடம்பில், நாளுக்கு நாள் ஏராளமான செல்கள் அழிந்துகொண்டிருக்கின்றன; புதுப்புது செல்கள் உற்பத்தியாகிக்கொண்டிருக்கின்றன. ஒரு கட்டத்தில் பழைய செல்களின் அழிவு வேகமாகவும், புதுச்செல்களின் உற்பத்தி மெதுவாகவும் நிகழ்கிறது. இதனால்தான் முதுமை என்பது ஏற்படுகிறது. மிளகு, செல்களின் அழியும் தன்மையைத் தாமதப்படுத்துகிறது. மனிதர்களின் இளமையை நீட்டிப்பதில் முக்கியப்பங்கு வகிக்கிறது. அதனால்தான் நமது முன்னோர்கள் உணவில், மிளகுக்கு ஒரு முக்கிய இடத்தைக் கொடுத்தார்கள்.

முன்பெல்லாம், வீட்டில் வெண் பொங்கல் செய்தால், அதில் கட்டாயமாக மிளகு இருக்கும். வடை செய்தால் அதில் மிளகு இருக்கும். இப்போதும் பொங்கலிலும், வடையிலும் பல வீடுகளில் மிளகு பயன்படுத்துகிறார்கள். ஆனால், சாப்பிடுகிறபோது, சிறுவர்கள் மட்டுமில்லை, பல பெரியவர்கள்கூட, மிளகு, காரம் என்று சொல்லி, அதை எடுத்து எறிந்து விடுகிறார்கள். மிளகின் பயன் நமக்குக் கிடைக்காமலேயே போய்விடுகிறது. ஆகவே, குடும்பத் தலைவிகளே! மிளகைப் பயன்படுத்தும் போது, நன்கு உடைத்து அல்லது பொடி செய்து பயன்படுத்துங்கள். அப்போதுதான் மிளகின் முழுப்பயனையும் பெற முடியும்.

இன்னொரு முக்கியமான விஷயத்தையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். மிளகை, சித்த வைத்தியத்தில் பயன்படுத்துகிறபோது, நல்ல சூர்ய வெளிச்சத்தில் ஒரு நாள், காய வைத்த பின்னர்தான் பயன்படுத்துவோம். அது போலவே, வீட்டிலும் நீங்கள் மிளகைப் பயன்படுத்தும்போது, கடையில் வாங்கிக் கொண்டு வந்ததை அப்படியே பயன்படுத்தக் கூடாது. மிளகை இலேசாக வறுத்து, அதன் பின்னரே பயன்படுத்த வேண்டும்.

மிச்சம் மீதி

'மூலிகைமணி' டாக்டர் க. வேங்கடேசன்

# இளமையின் ரகசியம்!

மிளகு மிகச் சிறந்த நஞ்சு முறிப்பான். கிராமப்புறங் களில் 'கானாக்கடி' என்று சொல்லுவார்கள். அதாவது வயல்வெளிகளில், வீட்டுத் தோட்டங்களில் நடந்து போகிறபோது, ஏதாவது பூச்சியோ, வேறு ஏதாவதோ கடித்துவிடும். என்ன கடித் தது என்று தெரியாது. ஏதோ ஒரு ஜந்து கடித்துவிட்டது என்று நிச்சயமாகத் தெரி யும். சிறிது நேரம் எரிச்சல் இருக்கும்; இலேசான தடிப்பு ஏற்படும். தானாகவே மறுநாள் சரி யாகி விடும். ஆனால் சில சமயங்களில் கடித்தது விஷ ஜந்துவாகக் கூட இருக்கக் கூடும். இதனால் விளைவு விபரீதமாக இருக்கும். இது போன்ற கானாக்கடி சமயங் களில் உடனடியாக ஒரு சிகிச்சை அளிப்பது வழக் கம். அது என்ன தெரியுமா?

பத்து மிளகைப் பொடி செய்து, அதில் தேன் கலந்து, சாப்பிடுவதுதான். இது கானாக்கடிகளினால் பரவும் நஞ்சை முறித்துவிடும்.

ஒரு விஷயம் சொன்னால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அந்தக் காலத்தில், கிராமத்துப் பெரிய மனிதர்கள் மத்தியில் பங்காளி சண்டை நிலவும். இரண்டு குடும்பத்தாருக்கும் ஒருவர் மீது ஒருவருக்கு வெறுப்பு இருக்கும். ஆனால் வெளிப்படையாக மோதிக் கொள்ள மாட்டார்கள். ஒருவர் வீழ்ச்சியில் அடுத்தவர் சந்தோஷப்படுவார்கள். அடுத்தவருக்குக் கெடுதல் செய்ய மறைமுகமாகத் திட்டமிட்டு, சமயம் வரும்போது செயல் படுத்தி விடுவார்கள்.

இத்தகைய பங்காளிகள் ஒருவர் வீட்டு விசேஷத்துக்கு, மற்றவரைத் தவறாமல் அழைப்பார்கள். அவர்களும், வரா விட்டால் அநாகரிகம் என்று வருவார்கள். ஆனால் பங்காளி வீட்டில் சாப்பிடுகிறபோது, நெடுநாள் உடலில் தங்கி, உயிரைப் பறிக்கும் படி யாய் நஞ்சு வைத்து விடுவார் களோ என்ற சந்தேகம் உள்ளூர இருக்கும்! அது போன்ற சமயங்களில் வெற்றிலையில் பத்து மிளகையும் இரண்டு உப்புக் கல்லையும் வைத்துச் சாப்பிட்டுவிட்டு அதன்பின் விருந்துக்குப் போவார்கள். விருந்தில் பங்காளி நஞ்சு வைத்துவிட்டால்கூட, மிளகு அதை முறித்துவிடும் என்பதே அதற்குக் காரணம்.

சைனஸ், தலைவலி போன்றவற்றுக்கு மிளகு எப்படி மருந்தாகிறது என்பதை அடுத்த வாரம் பார்க்க லாம்.



# ஜோதிபாசுவை எதிர்த்தவர்!

'ஜோதிபாசு ஒரு ஆலமரம். அவரோடு ஒப்பிட்டால், நான் வெறும் செடி' என்று அடக்கமாகச் சொல்லுகிறார் ஐம்பது வயது புத்ததேவ் பட்டாச்சார்யா, 1977ம் ஆண்டிலிருந்து அமைச்சராக இருந்தவர். வங்காள மொழி மீதும், கலை இலக்கியத்தின் மீதும் ஆழமான பற்று கொண்டவர். நந்தன் திரைப்பட வளாகம், சத்யஜித் ரே சினிமா மற்றும் டெலிவிஷன் இன்ஸ்டிடியூட் இரண்டும் இவரது சாதனைக்குச் சான்று. கல்கத்தாவில் சிறிய அளவில் ஆரம்பித்த புத்தகக் கண்காட்சி, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வருகிறது. இன்று அகில உலக அளவில் பிரசுரகர்த்தர்களை ஈர்க்கும் அளவுக்கு வளர்ந்துள்ளது.

மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்த



இன்றைய மேற்கு வங்க முதல்வர், படித்தது பெங்காலி மீடியம் ஸ்கூலில்தான். கல்லூரி நாட்களில் நுனி நாக்கு ஆங்கிலம் பேசும் மாணவர்களைக் கண்டால் எரிச்சல் வருமாம்! ஆனால், நாளடைவில் ஆங்கிலத் திறமையை வளர்த்துக் கொண்டார். பல ஆங்கிலக் கவிதை இலக்கியங்களை வங்க மொழியில் மொழி பெயர்த்திருக்கிறார்.

புத்ததேவ் ஒரு போராளி. 1993ல் ஜோதி பாசுவுக்கு எதிராகக் குரல் கொடுத்தவர். பாசுவால், அரசாங்கத்தில் லஞ்சத்தை ஒழிக்க முடியவில்லை என்று மந்திரிசபையிலிருந்து ராஜினாமா செய்தவர்தான் இந்த புத்ததேவ் பட்டாச்சார்யா. உடல்நலம் காரணமாகத்தான், புத்ததேவ் ராஜினாமா செய்தார் என்று பாசு தரப்பில் விளக்கம் கொடுக்கப்பட்டது. பிறகு எல்லாம் சமாதானமாகி விட்டார்கள். ஏழு வருடம் கழித்து இப்போது பாசு அமர்ந்த நாற்காலியில் இவர் அமர்ந்து விட்டார்.

பாசுவைப் போலவே மிகவும் எளிமையானவர். இன்றுவரை, ஒரு அடுக்குமாடிக் கட்டடத்தின் தரைத்தளத்தில் உள்ள பிளாட்டில் வசிக்கிறார். சின்ன குடும்பம். அம்மா, மனைவி, மகள். இவர்களைத் தவிர இரண்டு நாய்கள். இன்னமும் வாடகை வீடுதான்.

எப்போதாவது பட்டாச்சார்யா பீடி பிடிப்பார். கேட்டால், "என் வசதிக்குப் பீடிதான் கட்டுப்படியாகும். சிகரெட் பணக்காரர்களுக்குத்தான்' என்று சொல்லிச் சிரிப்பார்.

பட்டாச்சார்யா இன்னொரு விதத்தில் வித்தியாசமான மனிதர். அவருக்கு ஒரு கண்ணில் பிரச்னை வந்த சமயத்தில் மற்ற வி.ஐ.பி.கள் போல டிரீட்மென்ட்டுக்காக அமெரிக்காவுக்குச் செல்லாமல், கியூபாவுக்குப் போனார். மறுபடி இரண்டாவது டோஸ் சிகிச்சைக்கும் கியூபாதான் போகவிருக்கிறார்.

முதல்வர் ஆன பிறகும் இதே வீட்டில் இருக்க முடியாதே! வேறு பெரிய வீடு பார்க்கலாமா? என்று அதிகாரிகள் கேட்டால், "வரும் தேர்தலில், எங்கள் ஆட்சி போய் விட்டால், மறுபடி இந்த வீட்டுக்குத்தானே வர வேண்டும். ஆகவே, ஆறு மாதத்துக்கு, இங்கேயே இருந்துவிட்டுப் போகிறேனே!" என்று விளக்கம் தருகிறார்.

எவ்வளவு வேலை இருந்தாலும், மத்தியான வேளையில், வீட்டுக்குச் சாப்பிட வந்து விடுவார். பள்ளிக் கூடத்திலிருந்து வரும் மகளுடன்தான் தினமும் லஞ்ச். வேட்டி, ஜிப்பாதான் பிடித்த உடை. தலைமைச் செயலகத்துக்கு அருகில் உள்ள காலேஜ் தெரு காபி ஹவுஸிலிருந்து அடையும், காபியும் வாங்கி வரச் சொல்லி சாப்பிடுவது இவருக்கு ரொம்பப் பிடித்த விஷயமாம்!

— எம்

முகம் பார்க்கிற கண்ணாடி ஒன்று நல்லதாய் வேண்டும் என்று அம்மா சொல்லிக் கொண்டிருந்தாள்.

வீட்டில் இருந்தது பின்புறம் ரசம் போய், அதுவுமின்றி வெவ்வேறு முகங்களைக் காட்டிக் கொண்டிருந்தது.

சரோஜினி அக்காவுக்குத் தினசரி காலை அதனுடன் மல்லுக்கு நிற்பதே வேலை. சுவரில் கண்ணாடி அதன் போக்கில் தொங்கிக் கொண்டிருக்க, அக்கா தன் முகத்தை அதற்கு ஏற்றாற் போல அனுசரிப்பாள்.

இடுப்பு கூன் போட்டு, எல்லாத் திசைகளிலும் திரும்பி, கடைசியில் குறிப்பிட்ட இடம் தப்பி பொட்டு விழுந்திருக்கும்.

எரிச்சலில் ஒரு தடவை கீழே வீசி எறிய அதன் ஆயுள் கெட்டி என்பதால் இலேசான விரிசல்களுடன் பிழைத்து விட்டது!

பிறகுதான் கோளாறுகள் அதிகப்பட்டன. முன்பு சுமாராய்த் தெரிந்த முகம் இப்போது ஏழெட்டு விதங்களில் தெரிய ஆரம்பித்தது.

அக்காதான் முதலில் பொருமினாள்.

"இதைத் தூக்கி எறியணும். சனி!"

அம்மா குளித்துவிட்டு ஈரம் சொட்டிய உடம்புடன் புடைவையைச் சுற்றிக் கொண்டு வந்து நின்றாள்.

"இங்கே கொண்டா..."

கையில் வாங்குவது கூடாது என்கிற சாஸ்திரப்படி சரோஜினி இன்னொரு தரம் அதைக் கீழே வீசி எறிய நினைத்த போது, அம்மாவின் உள்ளுணர்வு கண்டுபிடித்துவிட்டது.

"வேணாம்டி.. வெள்ளிக்கிழமை."

அக்கா மனமிரங்கிக் கண்ணாடியைக் கீழே வைத்தாள். அம்மாவுக்குக் கண்ணாடி அனாவசியம். ஒரு ரூபாய் அகல குங்குமப் பொட்டு நெற்றி நிறைக்கப் போகிறது. பிறகு சமையல் வேலைகளில் அதன் அழகு சிதைந்து தீற்றல் மட்டும் அம்மாவின் சுமங்கலித் தன்மைக்கு சாட்சியாய் நிற்கும்.

'ஜெய ஜெய தேவி... துர்க்கா தேவி...'

அம்மாவின் குரல் நடுங்கி ஒலித்தது. இனி ஸ்லோகம் முடியுமோ, சமையல் முடியுமோ என்கிற போட்டி. எதுவாயினும் அம்மா பக்தியாய் சமைத்தால் அதன் சுவையே தனி.

இன்று தீர்மானம் நிறைவேறிவிட்டது: 'இது நாள் வரை சமாளித்தது போதும். புதுக் கண்ணாடி வாங்கிவிட வேண்டியதுதான்.'

எங்கள் மாநாட்டில் அப்பா சேரவில்லை. அவர் பிறவியிலேயே அதிர்ஷ்டக்காரர். இல்லாவிட்டால் அம்மாவைப் போல ஓர் அருமையான மனுஷி மனைவியாய் வாய்த்திருப்பாளா?

எல்லோர்க்கும் எல்லா வீட்டிலும் முதல் தேதி சம்பளம் என்றால் வீடே குதூகலிக்கும். எங்கள் வீட்டில் அப்படி இல்லை. அப்பா எப்போது சம்பளம் கொண்டு வந்து தருவார் என்று எங்களுக்குத் தெரியாது. ஏன், அப்பாவுக்குமே தெரியாது.

ஆனால் சிறு முனகல் கூடக் காட்டாமல் அம்மா தன் சாம்ராஜ்யத்தை நடத்தி வந்தாள். பட்சண டப்பா என்றுமே காலியாய் இருந்ததில்லை. குறைந்த பட்சம் பொட்டுக் கடலை, வெல்லம் வைத்து இடித்த மாவு மட்டுமாவது நிரப்பப்பட்டு இருக்கும்.

மாநாட்டில் அப்பா கலந்து கொள்ளாததற்கு அவருடைய இன்னொரு அதிர்ஷ்டமும் காரணம்- அவருடைய வழுக்கை.




தலை சீவிக் கொள்ள அவருக்குக் கடந்த பத்து வருடங்களில் இயற்கை வாய்ப்பே தரவில்லை.

பிறந்த போதே அப்படித்தான் இருந்திருப்பாரோ என்ற எங்கள் சந்தேகத்தை அம்மா தான் தீர்த்து வைத்தாள்.

அப்பா, அம்மா இணைந்து எடுத்துக் கொண்ட ஒரே புகைப்படத்தைக் காட்டினாள்.

கருகருவென்று பெண்கள் லஜ்ஜைப் படுகிற நீளத்தில் முடியுடன் அப்பா. கருமையான, அடர்த்தி மீசை வேறு.

"நாப்பது வயசுன்னு சொல்லுவியா?" என்றாள் கிசுகிசுப்பாய்.

**ரிஷபன்**



முடியாதுதான். அப்பா லேட் மேரேஜ். 'வேண்டாம்' என்று மறுத்துக் கொண்டிருந் தவர் அம்மாவைக் கல்யாணம் செய்து கொண்டது தன் பூர்வ புண்ணியம் என் றாள்.

வேலைவெட்டி இல்லாத மனுஷனுக்கு எவர் பெண் தரப் போகிறார்கள்? அம் மாவின் குடும்பம் ஏழ்மைக்கும் சற்று கீழே. அப்பா கரை சேர்க்க வந்தவராய்க் கருதப் பட்டதில் அதிசயம் என்ன.

பின் எப்படி முடி கொட்டியது. சரோஜினி அக்கா பிறந்து நாலைந்து வருடங்களுக்குப்பின் நான் பிறந்தேனாம். ஒரு குழந்தைதான் என்கிற தீர்மானத்தில் இருந்தார்களாம். எனது வரவு எதிர்பாராதது.

"நீ பொறந்தப்புறம்தான் அவர் முடி கொட்ட ஆரம்பிச்சுது. ஒரே வருஷம்... முழுக்கக் கொட்டிருச்சு..." என்றாள் அம்மா, பாதி வசவாய்.

நான் மௌனமாயிருந்தேன். என் பெயரை அகாரணமாய் இழுத்ததில் எனக்கு அத்தனை உடன்பாடு இல்லை. மேலும் அப்பா எனக்கு அறிமுகமானது முதல் இதே தோற்றம் தான். அதனால் பெரிதாய் இழப்பு தோன்றவில்லை.



"நவீன டீ.வியா? அப்படி என்ன விசேஷம் இதுல?"

"மெகா தொடர் வந்தா மட்டும் தானா ஆஃப் ஆகும்!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

சரோஜினி அக்கா தன் நெடுநாள் தீர்மானத்தை வெளிப்படுத்தினாள்.

"ஆளுயரக் கண்ணாடி வாங்கணும். புடைவை கட்டினா... முழு உருவம் தெரியற மாதிரி."

கண்கள் ஆசையில் மின்னிக் கொண்டிருந்தன. மானசீகமாய் கண்ணாடி முன் நின்றாள். சிண்ட்ரெல்லா போல சட்டென்று அக்கா உருவம் மாறிப் போனது. அழகு மெருகிட்டுக் கொண்டு ஜொலித்தது.

"அய்ய- இது என்ன வீடா... ஷோ ரூமா?" என்றேன்.

அம்மாவுக்கும் விருப்பம் இல்லை.

"வீட்டுல வச்சுக்க முடியாதுடி..." என்றாள் மெல்ல ஆனால் அழுத்தமாய்.

சரோஜினியின் முகம் இறுகியது.

"எனக்குப் புடிச்சதைச் சொல்லிட்டேன். அப்புறம் ஒங்க இஷ்டம்."

அம்மாவுக்கு அவள் மனத்தை நோகடிக்க விருப்பம் இல்லை.

"விலை ரொம்ப அதிகமா இருக்குமோ?" என்ற சந்தேகத்தை வெளியிட்டாள்.

"இருக்கும். இருக்கும்" என்றேன்.

அக்கா என்னை முறைத்தாள். தனது ஆசைக்கு எதிரி என்ற பாவனையில்.

"போய் விசாரிச்சுப் பார்ப்பம். அப்புறம் முடிவு பண்ணலாம்."

அம்மாவுக்கு இதில் உடன்பாடுதான். "விலை அதிகம்" என்று தெரிந்தால் அக்கா மனசு மாறக் கூடும்.

அப்பா பிரஸ்ஸில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். வீட்டுக்கு வருவதற்கு ஒன்பதரை மணி ஆகிவிடும். மாலையில் எல்லோருமாய்ச் சேர்ந்து கடை வீதிக்குப் போய் வரலாம் என்று நிச்சயித்தோம். அக்கா கீழே கால் பதியாமல் அலை பாய்ந்து கொண்டிருந்தாள்.

சேமிப்பு என்று அம்மாவிடம் சொல்லிக் கொள்கிற மாதிரி எதுவும் இல்லை. கண்ணாடி பத்து, இருபது ரூபாய்க்குள் அடங்கி விடும் என்பதால் அம்மாவின் மனசில் படபடப்பு இல்லை.

ஆனால் அக்கா எந்த துணிச்சலில் ஆள் உயரக் கண்ணாடி தேடினாள் என்று எனக்குப் புரியவில்லை.

டவுனில் கடை வீதி பரந்து விட்டது. எது தேவையானாலும் அது கிடைக்கிற, அதற்கே உரித்தான பகுதி என்று டவுனின் கடை வீதி ஜாலக்கோடு இருந்தது.

ஜவுளி என்றால் வரிசையாய் இருபது ஜவுளிக் கடைகள். தங்கம் என்றால் பதினைந்து ஜுவல்லரி மார்ட். பாத்திரம் என்றால் வரிசையாய் முன் வாசலில் கட்டித் தொங்க விடப்பட்டு மின்னும் எவர்சில்வர், பித்தளைப் பாத்திரங்கள். ஒரு தூக்கு வேண்டுமென்றாலும் ரக வாரியாய்த் தூக்கி விடப்பட்ட தூக்குகள் நிரம்பிய பாத்திரக் கடல்! கடை இல்லை; கடல்!

பிரமிப்புடன் கூட்டத்தோடு கூட்டமாய் நகர்ந்து கொண்டிருந்தோம். எதையாவது வாங்க அல்லது வாங்கிக் கொண்டு, ஆனந்தம் மற்றும் கவலை தோய்ந்த முகங்கள் எங்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தன.

தனி வரிசையாய்க் கண்ணாடி கடைகள். முதல் கடை திருப்தி தரவில்லை. சின்னச் சின்னதாய்க் கண்ணாடிகள். அடுத்ததில் வாஷ் பேசின் மேல் வைக்கிற மாதிரி கண்ணாடிகள்.

அம்மா மிரண்டிருந்தாள். 'கையில் பணமின்றி ஏன் கடை வீதிக்கு வந்தாய்'

என்று கடை முதலாளிகள் சங்கம் மிரட்டுகிற மாதிரி சுருண்டு காட்சி தந்தாள். நான் கூட தைரியமாய் நிமிர்ந்து நடந்தேன்.

அக்காவின் மனோரதம் நின்றது ஒரு கடை வாசலில். கண்ணாடிக் கடல். பெரிய ஹால் போல கடை அமைப்பு. யார் யாரோ உள்ளே போய் வெளியே வந்தார்கள். யார் ஓனர் என்று புரியாதபடி நின்றவர்கள் அத்தனை பேருமே எங்களை வெறித்தார்கள்.

அக்காவின் காலடிக்கு இணையாய் நானும் வைத்துப் பின் தொடர்ந்தேன். அம்மாவை இலேசாய் இழுத்துக் கொண்டு.

"என்ன வேணுங்க" என்றான் ஒருவன்.

"கண்ணாடி" என்றாள் அக்கா.

குரல் பிசிறியது.

"என்ன மாதிரி?"

"பெரிய சைஸ்ல... ஆள் உயரம்.."

"மாடிக்குப் போங்க..." என்றான்.

இதற்கு மேல் மாடியா, பிரமிப்புடன் நகர்ந்து எதன் மீதும் இடித்துக் கொள்ளாமல் படியேறினோம். கண்ணாடி பேக்கிங் செய்து வந்த வைக்கோல், காகித ஜல்லி, அட்டை என்று சிதறிக் கிடந்தன. ஹாலில் ஏதோ வாசனை அடித்து மூச்சு முட்டியது.

மேலே போனால்... அதிசயம்!

எங்கு திரும்பினாலும் சரோஜினி அக்கா. உடன் நான், அம்மா.

அம்மா இப்போது மிரட்சியின் உச்சத்தில். புடைவையை இன்னும் இழுத்துப் போர்த்திக் கொண்டு குறுகினாள்.

அக்கா சவடாலாய் நின்றாள். கைப் பையை ஒரு தரம் சுழற்றி மீண்டும் தோளில் அணிந்தாள்.

என் முகத்தை... அத்தனை கண்ணாடிகளிலும் தேடிக் கண்டுபிடித்து குதூகலத்தின் உச்சத்தில் இருந்தேன். அக்கா என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். எப்படி வேண்டுமானாலும் சமாளிக்கட்டும். இந்த நிமிடம்... சொர்க்கத்தின் ஆதரவு பெற்ற நிமிடம். இதை இழக்கக் கூடாது. இமை கொட்டாமல் என் உருவங்களை ரசித்துக் கொண்டிருந்தேன். எத்தனை விதமாய் 'நான்'கள்.

**ப**ஸ் ஏறிய போது பத்து ரூபாய் பெறுமானமுள்ள சிறிய, இலேசாய் நடுவில் கோடு தெரிகிற கண்ணாடிப் பார்சல் அம்மா கையில் இருந்தது. அடுத்த இருக்கையில் நானும், அக்காவும்– எங்கள் பார்வையில் பரவசம் சற்றும் குறையாமல்.

# அலை உறங்கும் கடல்

நடராஜபுரத்திலிருந்த தானியேல் நாடாரின் கோடவுனுக்குப் போய்விட்டுத் திரும்பும் வழியில் தனுஷ்கோடி காவல் நிலையத்தருகே கூட்டமாக மக்கள் நின்றுகொண்டிருக்கக் கண்டான் அருள்தாஸ்.

எல்லா கடைக்காரர்களும் கூடத் தம் கடையை விட்டு வெளியே வந்து நிற்க, தனுஷ்கோடி நெடுஞ்சாலையில் போக்குவரத்தே சிரம முறும் அளவுக்கு நெரிசல் ஏற்பட்டிருந்தது.

முந்தைய தினம் அதிகாலை இரண்டரை மணிக்கு, நாலாம் திட்டிலொன்றும் ராமகிருஷ்ணா புரத்திலொன்றுமென இரு படகுகள் வந்திறங்கியிருப்பதாகத் தானியேல் நாடார் சொல்லியிருந்தார். கொடவுனுக்குப் போய் சைக்கிளில் மாட்டிக் கொள்ளும்படியான இரு பைகளில் கொஞ்சம் சாமான்களை எடுத்துக் கொண்டு நேரே கேம்ப் வாசலுக்குப் போய்விடச் சொன்னார் நாடார்.

"பாரு, நாம யாவாரஞ் செய்தோம். ஆருக்கு விக்கறமுன்னு பாக்கதில்லை. சரக்கு வித்தா சாக. கடலுக்குள்ள வித்தா என்ன? கேம்புக்காரவளுக்கு வித்தா என்ன?" என்று கேட்டார்.

தர்க்க ரீதியில் இது சரியாகவே இருந்தபோதிலும் மண்டபம் முகாம் வாசலில் வெளி நபர் வியாபாரம் செய்ய இயலுமா என்று அருள்தாஸுக்குக் குழப்பமாயிருந்தது. முகாமைச் சுற்றிப் படர்ந்திருந்த கடைகளின் எண்ணிக்கையும் அடுக்கியிருக்கும் பொருட்களின் வசீகரமும் ஒருபுறமென்றால், அந்தக் கடைக்காரர்களின் கழுகுப் பார்வைக்கு எந்த வெளி நபரும் தப்பி நிற்க முடியாது. முன்னறிமுகமில்லாததொரு புதிய நபர் இரு நிமிடங்கள் அங்கே சுற்றிக் கொண்டிருந்தால் போதும். தோளில் துண்டைச் சுற்றி இழுத்துப் போய் தனியே விசாரிக்கவென்றே ஒரு கூலிப் படை எப்போதும் மறைந்திருந்து கண்காணிக்கும்.

தவிரவும் அரிசி முதல் மருந்துகள் வரை, உடைகள் முதல் உல்லாச பானங்கள் வரை அந்தப் பிராந்தியக் கடைக்காரர்கள் விற்காத வேறெதைத் தாம் இங்கிருந்து கொண்டுபோய்



விற்க முடியுமென தானியேல் முதலாளி நம்புகிறார்?

"இந்தா பாரு அருளு. நீ நல்லவன். ஆனா, கஷ்டப்படுதவன். என் நெனப்பென்னன்னா, உனக்கு உதவணும்னு. யோசிக்காத. கேள்வியே வேணாம். நான் சொல்லுதேன்; நீ செய்யுதே. அம்புடுதான். நாஞ்சொல்ற இடத்துல போயிநில்லு. வாரவன் போற வண்ட 'வெள்ளப்புறா வெலைக்கு வேணுமா'ன்னு கேளு. விசயந்தெரிஞ்சவன் ஆமான்னுவான். நாஞ்சொன்ன வெலையச் சொல்லு. மூச்சு விடாம குடுத்துட்டு வாங்கிப் போவாம்பாரு" என்றார் தீர்மான மாக.

"மொதலாளி, கேக்கறன்னு கோவிச்சுக்கக் கூடாது. போதைப் பவுடருங்களா?" என்று அருள்தாஸ் கேட்டான்.

"ஆருடாவன் வெவரந்தெரியாம பேசத? சைக்கிள்ல எடுத்துட்டுப் போயி நில்லுங் கேன். போதைப் பொடியான்னு கேக் குதியே? மூளையத்தவனா நானு? கள்ள யாவாரந்தான் செய்யு தேன். ஆனாலும் ஒரு தர்மமுண்டில்ல? செலது இல்லண்ணா செலரால உசுரு வாளமுடியாது. சிலோனு காரனுவ உசிரு இதுல இருக்கு. என்னன்னு யோசிக்காத. வித்துட்டு வந்து சேரு. உனக்கும் வேணுமுன்னா ஒரு பாக்கிட்டு கொண்டட்டு போயிடு. என்ன



நாஞ்சொல்லுறது?" என்று கேட்டார்.

"டீத்தூளுமா?" என்றான் அருள்தாஸ்.

தானியேல் நாடார் சிரித்தார்.

"டாப் ஸ்டாரு டீப் பொட்டலம் சிப் படுது மார்க்கெட்டுல. ஆயிரம் ரூவா கொடுத்து இதை வாங் குவனா யாராச் சும்?"

"பின்ன சோப்பா? மருந்துங்களா? எண் ணெய், நெய்யினு ஏதுமா? என்னன்னுதான் சொல்லுங்களேன்?" என்றான் அருள்தாஸ், ஆர்வம் தாங்கமாட்டாதவனாக.

"இப்பம் நாஞ்சொல்லுதாயில்ல" என்று தீர்மானமாகச் சொன்னார் நாடார். "நீ வித்துட்டு வந்து சேருவியாம்; அப்பஞ் சொல்லுதன். நடுவுல பாக்கெட்ட பிரிச்சி டாத. எவனும் பிறவு வாங்க மாட்டான்" என்றும் எச்சரித்தார்.

செயல் நிகழ்ந்த மறு கணம் பணம் வந்து சேர்ந்துவிடுகிறதே என்பதனால் அவனுக்கு மேற்கொண்டு துருவி ஆராய்வதில் விருப்ப மற்றுப் போனது. மேலும் இதுவே தன் பிழைப்பல்ல என்பதிலும் அவன் தெளிவா யிருந்தான். ஒரு படகு வாங்குமளவு- அல் லது மரம் வாங்கிக்கட்டி இஞ்சின் பொருத்து மளவு பணம் சேர வேண்டும் முதலில். நிராதரவாக சிலோன் நேவிக்காரர்கள் தன் லாஞ்சை இழுத்துப் போனபோது உயி ரையே பிடுங்கிப் போவது போல உணர்ந் தான் அருள்தாஸ். அந்தப் படகில் அவன் தந்தையின் நாற்பது வருட வியர்வை இருந்தது. அம்மையின் ஒரு சில நகை களுங்கூடக் கட்டைகளாக உருமாறிக் கிடந் ததைத் தொடும் போதெல்லாம் உணர்வான் அருள்தாஸ்.

அந்தப் படகைக் கட்ட இட்டக்குடிச் சந்தையில் மரம் ஏலம் எடுக்கத் தந்தையுடன் சென்றபோது பெரியதொரு யுத்தத்துக்கே செல்வது போலிருந்தது அவனுக்கு. ஒரு பங்கு தேக்கும் மிச்சத்துக்குக் கருங்காலிக் கட்டைகளுமாக மாட்டு வண்டியில் ஏற்றி வந்து கடலுக்குப் பூசை போட்டுவிட்டுப் படகைக் கட்ட ஆரம்பித்தார் அருள்தாஸின் தந்தை.

சரியாக நான்கு மாதங்கள். அந்தச் சமயத் தில் அவர் மீன் பிடிக்கப் போகவில்லை. அருள்தாஸைத்தான் 'எடுப்பாளாக' வேறொரு தோழனுடன் அனுப்புவார்.

ஒவ்வொரு நாள் காலையும் அவன் கரைக்கு வந்து சேரும் போது படகுக் கட்டு மானப் பணியின் முன்னேற்றத்தைத்தான் முதலில் கவனிப்பான். ஒருநாள் நான்கு

"மறுபடியும் நான் எப்ப வரணும் டாக்டர்?"

"பீஸ் கொடுக்க நூறு ரூபா சேர்ந்த பிறகு வாங்க போதும்!"

– சீர்காழி வி.ரேவதி

கட்டைகள் இணைந்து ஒரு பலகையாகி யிருக்கும். மறுநாள் நிறைய ஆணிகள் அறை யப்பட்டு முட்களாக நீண்டிருக்கும். வேறொரு நாள் எவ்வித முன்னேற் றமுமின்றி, பொருட்கள் வெறுமனே இரைந்து கிடக்கும்.

"என்னாச்சி?" என்று கவலையுடன் விசாரிப்பான் அருள்தாஸ்.

"வேறென்னாவும்? குரங்குக்கு மரமேறி ஆடுற நெனப்பு வந்திச்சின்னா என் னாவுமோ அதான். கோயிலாண்ட போயிப் பாரு" என்பாள் அம்மை.

அங்கே பாட்டில் ஒரு புறமும் தானொரு புறமுமாக உருண்டுகிடப்பார் அப்பா. உயர்ந்து நிற்கும் தேவாலயத்தின் சாளரங் களிலிருந்தொரு அருட்கரம் நீண்டு, தந் தையை எழுப்பி நடக்கச் செய்யாதா என்று அவன் நினைப்பான்.

வெயில் நன்கு ஏறி சுட்டெரிக்கும் பொழுதுதான் அவர் நினைவு மீண்டு, தள் ளாடி எழுந்து வருவார். அந்தச் சமயங்களில் உடன் வரும் அவனுக்கும் மற்றவர்களுக்கும் அர்த்தமற்ற கடும் வசவுகளால் அர்ச்சனை வாய்க்கும்.

சொல்லித் தீராத சோகங்கள் புரிந்த நெஞ்சுடனே இறந்து போனார் அப்பா. படகு அப்போது கால்வாசி கூடக் கட்டி முடிந்திருக்கவில்லை.

பிறகு, தானியேல் நாடார் தான் பொறுப் பேற்றுக் கொண்டு ஆட்களை அனுப்பி வைத்தார்.

ஏழாம் மாதம் படகு தயாராகி பெயின் டுக்கு நின்றது.

பாம்பன், மோகன் ஆர்ட்ஸிலிருந்து ஆள் வரவழைத்து 'மரியே துணை' என்று நான்கு புறமும் எழுத வைத்தான் அருள்தாஸ்.

தானியேல் நாடார் இஞ்சினை இயக்கித் தர, முதல் பயணத்தைக் கச்சத்தீவு வரை மேற்கொண்டான் அருள்தாஸ்.

"இருநூத்தம்பது லிட்டர் டீசல் அடிச் சன்னா ரெண்டு ட்ரிப்பு தாங்கும். ஆனா 'எக்ஸ்ட்ரா' நூறு லிட்டரு எப்பவும் 'ஸ்டாக்' வெச்சிரு. ஒரு ஊசுத்துல தான் சொல்லுதன். பொறவு உதவும், சமயத்துல" என்பார்.

தானியேல் நாடார்.

அவனது வாஞ்ச்சைப் பதிவு செய்து ஆர்.சி. புத்தகம் வாங்கிக் கொடுத்தது முதல் படகின் அடிப்புற சரக்கு அறையை 'ஐஸ் பொட்டி'யாக மாற்றிக் கொடுத்தது வரை அனைத்தையும் அவரேதான் முன்னின்று கவனித்து உதவியது.

அம்மை எப்போதும் நாடாரை மாமன் உறவு வைத்துத்தான் கூப்பிடும். அப்பனுக்குத்தான் அவரைச் சுத்தமாகப் பிடிக்காது.

"ஆறு போட்டு ஓட்டுதான். ஒன்னொனா உளைச்ச காசா? தூ! நாறப்பய, அவங்கதை உனக்குத் தெரியாதுரா மவனே! கிங்கர நாயி. நாற நாயி. வெளங்காத நாயி" என்றெல்லாம் குடித்திருக்கும் நேரத்தில் வானம் பார்த்துக் கத்துவார்.

ஆனால், நேரில் சந்திக்கும் போதெல்லாம் "மொதலாளி, மொதலாளி" என்று கூழைக் கும்பிடு போடவும் தயங்க மாட்டார்.

"வெக்கமாயில்ல?" என்று பாவனையாகக் காறித்துப்புவாள் அம்மை.

"அத நீ சொல்லுதியா?" என்று அவர் முறைக்கும் போதெல்லாம் அற்புத மேரிக்குப் பயம் மிகுந்து உடல் நடுங்கும். அருள்தாஸின் கால்களைக் கட்டிக் கொண்டு ஒடுங்கி நிற்பாள்.

தன் கவனம் பிடிபடாத தினங்களின் சரித்திரம் குறித்து அருள்தாஸுக்கு எப்போதுமே விடையில்லாத வினாக்கள் பல. கடலுக்குள் செல்லும் போது நேரும் தனிமையின் சமயம் எழும். எதையும் நுணுகிப் பிரித்துணரத் தன்னால் ஆகாதென்பதே அவன் வந்து சேரும் இடமாக இருக்கும்.

தானியேல் நாடாரின் வசதி அப்பாவுக்குப் பொறாமை தந்திருக்கலாம். இருவருமே ஒரே சமயத்தில் கடலில் இறங்கியவர்கள்தான். இருவரும் வாலிப வயதுகளில் சேர்ந்து துரத்திய பெண்கள் குறித்து நாடார் எப்போதாவது அவனிடம் விஷமம் தோய, நமுட்டுச் சிரிப்புடன் கூறியதுண்டு.

"ங்கொப்பனுக்குப் பொளைக்கத் தெரியலை பார்த்திக்கிடு. நீ அவனைக் கொண்டிராத. என்ன நாஞ்சொல்லுது?" என்பார் அக்கறையுடன்.



அவன் எப்போதாவது நாடாருடன் பேசிக் கொண்டே மார்க்கெட் பக்கமோ, போட் ஜெட்டியிலிருந்து திரும்பி வருகையிலோ அம்மை எதிர்ப்பட்டுவிட்டால் அவன் முகத்தில் படரும் பரவச வெளிச்சம் அவனுக்கு வியப்பேற்படுத்தத் தவறியதில்லை, ஒருபோதும்.

"இப்படித்தான் நாலு பெரிய மனுசவுக தொடர்பு எப்பவும் வெச்சிக்கிரணும். அவரோட கூட நீ பேசிட்டு வரயில மார்க்கட்டேயில்ல உன்னியத் திரும்பிப் பாக்குது?" என்பாள் வீடு திரும்பிய பிறகு.

"உங்கொப்பனுக்குப் பொளைக்கத் தெரிலைன்னு அவுரு சொல்லுதாகன்னா செரிதேன். பொளைக்கத்தாந் தெரியலை" என்பாள் கசப்பான தன் பிரத்தியேக நினைவுகளை மீட்டுமொருதரம் படரவிட்டபடி.

ஆனால், குடியைத் தவிர தன் தந்தையிடம் வேறு குறையிருப்பதாக அவனுக்குத் தோன்றியதில்லை. குடிக்காத கரையன் உண்டா உலகில்? தானியேல் நாடார் மட்டும் குடிருசி அறியாதவரா என்ன?

அவரது டூரிங் டாக்கிஸ் ஆபீஸ் அறை பீரோவில் பளபளப்பான பல வெளிநாட்டுச் சரக்கு புட்டிகளை அவன் பார்த்திருக்கிறான்.

"சிநேகிதக்காரவுக இங்கிலீசு சரக்கு அடிக்கானேன்னு உங்கப்பனுக்குப் பொறாம. இவுக இருப்புக்குக் கெடா மார்க்குதாஞ்செரி" என்று அம்மை சீண்டுவாள், சற்றே இளகிய தருணங்களில்.

அபூர்வமாகச் சிரித்து, அப்பாவும் அதை ஆமோதித்ததுண்டு. ஆனால் ஒப்பீடுகள் பெரும்பாலும் விரிசலைத்தான் பெரிதுபடுத்தி வந்திருக்கின்றன. தன் பெற்றோருக்கிடையே ஏற்பட்டிருந்த கண்ணுக்குத் தெரியாத விரிசலின் இடைவெளி, அப்பாவின் மரணத்தின் மூலமாகவே கலைக்கப்பட்டதாக உணர்ந்தான் அருள்தாஸ்.

நேர்க்கோடற்ற நினைவுப் பெருக்கினூடே அவன் தனுஷ்கோடி காவல் நிலையத்தைக் கடந்து சைக்கிள் மிதித்த போது இரு ஜீப்புகள் கடந்து போயின.

அழுக்கும் பிசுபிசுப்பும் காற்றுக்குக் கலைந்தாடிய தலைமுடியும் கலவர உணர்வுமாக

அவற்றில் தென்பட்ட அகதிகளைக் கண்டான்.

மண்டபம் சென்றடைந்து சிறப்பு அலுவலர் முன் கணக்கெடுக்கப்பட்டு அவர்களுக்கு அறை ஒதுக்கி முடிவதற்கு எப்படியும் மாலை மூன்று மணியாகிவிடும் என்று தோன்றியது.

பொழுது சாயத்தான் வெளியே வருவார்கள், பெரிய பெரிய கட்டம் போட்ட லுங்கிகள் அணிந்து, புதிய, சுதந்தர பூமியின் தரைப் பரப்பை அங்குலம் அங்குலமாக நடந்து அனுபவிப்பது போன்ற தோற்றத்தில் முகாமைச் சுற்றியுள்ள கடை வீதிகளைக் காலார அளப்பார்கள்.

அருள்தாஸ் பலமுறை கண்ட காட்சிதான் அது. மொத்தமாகப் பொருட்களை வாங்கிக் கொண்டு காசு தரும் வழக்கமில்லை எவரிடமும். ஒரு மளிகைக் கடைக்குச் சென்றாலும் ஒவ்வொரு பொருளாக வாங்கி, ஒவ்வொரு முறையும் தனித்தனியே பணம் எடுத்துக் கொடுப்பதைக் கண்டு குழம்பியிருக்கிறான், முன்பெல்லாம்.

பிறகுதான் காரணம் புரிந்தது. உள் நிஜாரில் பின் போடப்பட்டிருந்த பணத்தை மொத்தமாக வெளியே எடுப்பதிலான நடைமுறைச் சிக்கலை ஒருமுறை நேரில் கண்டபோது அவனுக்குப் பரிதாபம் மிகுந்தது. முகாமில், உயிருக்குக் கிடைத்த பாதுகாப்பு உடைமைக்குக் கிடைப்பதில்லையென்ற விஷயம் தெரியவர, மிகுந்த வருத்தமுற்றான்.

சிறப்பு அலுவலரின் அலுவலக வாசலிலிருந்த சர்பத் கடையருகே அவனை நிற்கச் சொல்லியிருந்தார் தானியேல் நாடார். வியாபாரம் படிந்தால், பஸ் ஸ்டாண்டுக்கு அழைத்துப் போய் அங்கு கட்டணக் கழிப்பிடத்தின் பின்புறம் சென்று பொருளைத் தந்துவிட்டுக் காசை வாங்கிக் கொள்ளச் சொல்லியிருந்தார்.

நிச்சயமாக ஏதோ சட்டவிரோதச் சரக்கு என்பது புரிந்தது அவனுக்கு. மனத்தின் இடைவிடாத உறுத்தலுடனே தான் அதனைச் செய்யவும் முனைந்திருந்தான். பயமும் படபடப்புமாக நீண்டு கழிந்த மணித்துளிகளின் இறுதியில் உயரமான ஒரு பெண். "எங்க வந்தால் தருவே?" என்று கேட்கவும், "வாங்க" என்று சொல்லிவிட்டு, சைக்கிளைத் தள்ளிக் கொண்டு முன்னால் நடந்தான் அருள்தாஸ்.

யாருமற்ற பேருந்து நிலையத்தில் அவன் படபடப்புடன் ஒரு பார்சலை எடுத்து நீட்டவும், சொன்னவிலை கொடுத்து வாங்கிய அப்பெண், பதில் பேசாமல் திரும்பி நடந்தாள்.

பத்தடி தூரம் செல்லும் வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்தவன், இருமுறை அவள் கண்களைத் துடைத்துக் கொள்வது கண்டு குழப்பமடைந்தான்.

முற்றிலும் தன்வயமிழந்தவனாக இன்னது செய்கிறோம் என்று யோசிக்காமலேயே மீதமிருந்த ஒரு பார்சலை வெளியே எடுத்துக் கட்டை அவிழ்த்து, மேல் தாளைப் பிரித்தான்.

ஒரு வேட்டி, துண்டு, ஒரு கைத்தறிப் புடைவை, நூறு ரூபாய் பணம், அரைக்கிலோ அரிசி பாக்கெட் ஒன்று, இரண்டு வாழைக்காய்கள் தவிர சிறியதொரு என் பொட்டலமும் இருக்கக் கண்டு அதிர்ச்சியுற்றான்.

(தொடரும்)

## வான் வழி வந்த அதிர்ஷ்டம்!

**போன** வருடம் ஜூன் மாதம் தொடங்கி, இந்த ஆகஸ்ட் வரை மில்லெனியக் கொண்டாட்டத்தை அமர்க்களப்படுத்தியிருக்கிறது சிங்கப்பூர். இந்த பதினைந்து மாதங்களில், சிங்கப்பூர் வரும் டூரிஸ்ட்களிடம், கூப்பன் ஒன்றைக் கொடுத்து, நிரப்பி, ஏர்ப்போர்ட்டில் உள்ள பெட்டியில் போடச் சொன்னார்கள். தினம் ஒருவர் என்ற அதிர்ஷ்டசாலிகளைத் தேர்ந்தெடுத்து சிங்கப்பூர் சென்றுவர ஒரு பரிசுத் திட்டம் அறிவித்தது சிங்கப்பூர் டூரிசம்! மெகா பரிசாக, ஒரே ஒரு அதிர்ஷ்டசாலியைத் தேர்ந்தெடுத்து, அவர் தன்னுடன் இருபது பேரை சிங்கப்பூர் அழைத்துச் சென்றுவரலாம் என்பது மில்லெனியக் கொண்டாட்டத்தின் சிறப்புப் பரிசுத் திட்டம். இந்த மெகா அதிர்ஷ்டம் அடித்தது மஞ்சு மோகன் ராஜ் என்கிற சென்னை சிறுமிக்கு. தமிழ் நாட்டில் உள்ள இவரது உறவினர்கள் சிங்கப்பூர் இலவச பயணத்துக்கு ரெடியாகிக் கொண்டிருக்கிறார்கள்!



— மௌலி



• பட்டைத் தீட்டும் பெண்கள்

# சேவை, சேமிப்பு, சுயகௌரவம்!

**கோ**ப்பு கிராமத்திலிருந்து வந்திருக்கும் அரும்பாயிக்கு வயது நாற்பத்தி ஐந்து. மணமாகாதவர். வயல்களில் வேலை பார்த்து மரத் தடியில் பொங்கித் தின்று இரவல் திண்ணையில் படுத்துறங்கி இரவைக் கழிப்பவர். "என்னோட சின்ன வயசுலே அம்மா அப்பா ரெண்டு பேரும் செத்துப் போய்ட்டாங்க. பேருக்குத்தான் மூணு அண்ணன்ங்க. ஒரு கைச் சோறு ஒரு வாய்த் தண்ணி குடுக்கலைங்க. வெவரம் தெரிஞ்ச நாள்லேந்து கூலி வேலைக்குப் போய்தான் காலத்த தள்ளுறேன். ஆனா... இப்பப் பாருங்க.. இந்த ராஜேஸ்வரியக்கா (உதவிக்குழுவின் ஊக்குனர்) புண்ணியத்துல நா அனாதை இல்லீங்க. நாளைக்கே நா செத்துப் போனா கூட என்னைய எங்களோட மகளிர் சுய உதவிக் குழு எடுத்துப் போட்டுடும்ங்க!" பேசிக் கொண்டிருக்கும் போது கண்களில் நீர் தளும்புகின்றது.

• மகளிர் சுய உதவிக் குழுவினர் ஒரு விழாவில்...



• கலந்துரையாடல்...

**கா**விரியின் தென் கரையில் திருச்சிக்கு அருகே இருக்கும் அல்லூரில் முற்றிலும் பெண்கள் நல மேம்பாடு கருதி இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் துவங்கப்பட்ட அமைப்பு 'சேவை'!

இங்கிருந்து கிளர்ந்தெழுந்த இந்தச் 'சேவை' இன்று திருச்சி, கரூர், ஈரோடு, தஞ்சை, நாகை ஆகிய ஐந்து மாவட்டங்களில் தனது விழுதுகளை பரவலாகப் படரவிட்டிருக்கிறது.

“**ந**ல்ல சிந்தனை, சிந்திக்கும் உள்ளம், உழைக்கும் கரங்கள், தள ராத மனம்... இவை வெற்றியின் படிகள்!”என சுவரில் எழுதப் பட்டிருக்கும் வாசகங்கள் நம்மை வரவேற்கின்றன.

'சேர்ந்து படிப்போம்!' என்கிற உயர்ந்த நோக்கத்தில் உடல் ஊனமுற்ற இருபது மாணவ, மாணவிகளுக்குச் 'சேவை' சாந்தி மெட்ரிகுலேஷன் பள்ளியில் பாடம் நடத்துகிறது. உணவு, தங்குமிடம், கல்வி இம்மூன்றும் அவர்களுக்கு இலவசம்.



• கோவிந்த ராஜு

தையல் பயிற்சி நிலையம் ஒன்றும் இருக்கின்றது. ஒரே நேரத்தில் முப்பது பெண்கள் தையல் பயிற்சி பெற்று வருகிறார்கள். ஆறுமாத காலத்திற்குள் டெய்லரிங், எம்பிராய்டரி மற்றும் வாழ்த்து அட்டைகள் தயாரித்தல் போன்றவற்றில் தேர்ச்சி பெற்று விடுகிறார்கள் இவர்கள். இதற்குக் குறைந்த கட்டணமே வசூலிக்கப்படுகிறது. தையல் பயிற்சி முடிந்து தேர்ச்சி பெற்று வெளியே செல்லும் ஏழைப் பெண்களுக்குத் தையல் மிஷின் ஒன்றும் சேவை நிறுவனம் மூலமாக இலவசமாகத் தரப்பட்டு வருகிறது.

பாய் நெசவு செய்து தரும் இயந்திரங்கள் மூன்று இயங்கிக் கொண்டிருக்கின்றன. பாயின் நடுவில் விரும்பும் உருவங்களை டிசைன் செய்து நெய்து தரும் நவீன இயந்திரம் ஒன்று. முப்பது பெண்கள் வரை இவற்றில் வேலை செய்து வருகிறார்கள்.

வளாகத்தின் உள்ளே நீண்டு செல்கிறது ஒரு கூடம். அங்கே ரூபி, கார்னெட்ஸ் போன்ற இயற்கை மணிக்கற்களுக்குப் பட்டை தீட்டித் தரும் வேலை முழு மூச்சாக நடைபெற்று வருகிறது. இதிலும் அனைவரும் பெண்களே. புதிதாகக் கற்றுக் கொள்ள வருபவர்களுக்கு இரண்டு மாதம் பயிற்சி தருகிறார்கள். பயிற்சி முடிந்தவுடன் இயற்கை மணிக்கற்களைப் பட்டை தீட்டத் துவங்கி விடுகிறார்கள். அவரவர் சுறுசுறுப்புக்கேற்றவாறு மாதம் ஆயிரம் ரூபாயிலிருந்து இரண்டாயிரம் வரைக்கும் வருவாய் பெற்று விடுகிறார்கள். இங்கு வேலை பார்ப்பதில் அதிவிரைவுப் பெண்ணாக பாலா மணியைத் தான் குறிப்பிடுகிறார்கள் அனைவரும். சராசரியாக மாதம் ஆயிரத்தைந்நூறு முதல் இரண்டாயிரம் வரைக்கும் சம்பாதித்து வரும் பாலாமணி, “இந்த வேலை பாக்கவும்தான் மாசத்துக்கு இவ்வளவு சம்பாதிக்க முடியது. இல்லேன்னா கிராமத்துல வயக்காட்டு வேலையில எவ்வளவு கெடைக்கும்ன்னு நெனைக்கிறிங்க? நல்ல வேளை... இந்த வேலய நானு இங்க வந்து கத்துகிட்டேன்!” என்கிறார்.

**அ**ங்கொன்றும் இங்கொன்றுமாக பத்து ஆண்டுகளுக்கு முன்னர் துவங்கப்பட்ட மகளிர் சுய உதவிக் குழுக்கள். 'சேவை'யின் ஐந்து மாவட்ட எல்லைப் பரப்புக்குள் மாபெரும் ஆலமரமாகச் செயல்படுகின்றன இன்று. விழுதுகள் எனும் அமைப்பின் கீழே ஏறத்தாழ ஐந்தாயிரம் மகளிர் சுய உதவிக் குழுக்கள் இயங்கி வருகின்றன. அதில் ஆயிரத்து எண்ணூறு சுய உதவிக் குழுக்கள் அரசின் மகளிர் நலத் திட்டங்களில் நேரடி உதவி பெறுமளவுக்கு வளர்ச்சி பெற்று செயல்பட்டு வருவதாகக் கூறுகிறார் சேவை நிறுவன பி.ஆர்.ஓ பெ.கேசவன்.

புதிதாக உதயமாகும் மகளிர் சுய உதவிக் குழுக்களுக்கு முறையாக இங்கு பயிற்சியளிக்கப்பட்டு வருகின்றது. எப்படி ஒன்றிணை

வது, எவ்விதம் செயல்படுவது, பிரச்னைகளை எவ்வாறு அணுகுவது, அவற்றிற்கு எப்படித் தீர்வு காண்பது என்பது வரை இங்கு விரிவாக விளக்கம் தரப்படுகின்றது. தினசரி இரண்டு மகளிர் சுய உதவிக் குழுவினர் பயிற்சிக்காக இங்கு வந்து போகிறார்கள். மாதம் ஒரு முறை. வருபவர்களுக்கு மதிய உணவும், போக்குவரத்து செலவும் சேவை மூலமாகத் தரப்பட்டு வருகின்றது.

தங்கள் உறுப்பினர்களிடையே மாதாந்திர சேமிப்பு வழக்கத்தை முதலில் உண்டாக்குகிறார்கள். ஆறு மாதங்களுக்குப் பின்னர் தேவைப்படும் உறுப்பினர்களுக்கு ஐந்து அல்லது ஆறு மாத தவணைகளில் மிகக் குறைந்த வட்டிக்கு அதிலிருந்து கடன் தருகிறார்கள். அவசர காலத் தேவைக்கு ஐம்பது பைசா வட்டி, திருவிழாக் காலத் தேவை மற்றும் தொழில் சம்பந்தமான தேவைகளுக்கு நூற்றுக்கு மாதம் ஒரு ரூபாய் வட்டி என்றும் கணக்கிட்டுக் கொள்கிறார்கள்.

சேமிப்பைப் பலப்படுத்திக் கொண்ட மகளிர் சுய உதவிக் குழுக்கள் நபார்டு வங்கி மூலமாகவும் கடனுதவி பெற்றுக் கொள்கின்றன.

சேமிப்பது, கடனுதவி பெறுவது, பொருளாதார வளர்ச்சி காண்பது போன்றவை மட்டுமல்ல இந்த மகளிர் சுய உதவிக் குழுக்களின் நோக்கம் என்பதை அங்கு வந்திருந்த குழுவினரிடம் பேசியதிலிருந்து தெரிந்து கொண்டோம்.

**மா**டப்புறா என்பது ராமனாத நல்லூர் கிராமத்து மகளிர் சுய உதவிக் குழுவின்



"உங்க மகனைக் கொஞ்சம் கண்டிச்சு வைங்க!"

"ஏங்க?"

"எனக்கு ஏதாவது லஞ்வெட்டர் உண்டானு தினம் கேட்கிறான்!"

– உ. ராஜாஜி

பெயர். இக்குழுவிலுள்ள பன்னிரண்டு பேரும் தினசரி இருபது ரூபாய் கூலி பெறும் விவசாயத் தொழிலாளிகள். நாற்பது வயதாகும் சரசுவதி நம்மிடம் கூறுகிறார்: "இப்போ மாசம் அம்பது ரூபா சேமிச்சு வர்றோம். இதுக்கு முன்னாடியெல்லாம் எங்களுக்கு ஒரு கஷ்டம்னா அவசரப் பணத் தேவைக்குக் கந்து வட்டி தர்றவங்ககிட்ட தான் போயி நிப்போம். இப்பல்லாம் அப்படி இல்லீங்க. எங்க சேமிப்பு பணத்துலேந்து ரெண்டு ரூபா வட்டிக்கு நாங்களே பணம் எடுத்துக்கறோம். அந்தப் பணத்தையும் ஒழுங்காத் திருப்பி அடைச்சுடறோம்!"

அதே கிராமத்தைச் சேர்ந்த புஷ்பவல்லி, "எங்க கிராமத்துப் பக்கம் சரியான முள்ளுக் காடுங்க. ரொம்ப நாளா சாராயம் காய்ச்சி வித்துட்டு இருந்தாங்க. பஞ்சாயத்துல சொல்லிப் பாத்தோம். சொன்னா ரெண்டு நாளு சும்மா இருப்பாங்க. அப்புறமா ஆரம்பிச்சுடுவாங்க. நாங்க உள்ளூர்ப் பொம்பளைங்க எல்லாரும் ஒண்ணா சேந்து போயி ஊறல் பானையெல்லாம் எடுத்துப் போட்டு ஒடைச்சிட்டு வந்தோம்ங்க. இப்ப எங்க கிராமத்துல சாராயம் காய்ச்சறது இல்லீங்க!" என்கிறார்.

சில கிராமங்களில் மது ஒழிப்புக் கமிட்டிகளில் மகளிர் சுய உதவிக் குழுவினரை அங்கத்தினராகப் போட்டுள்ளதாகவும் கூறுகிறார்கள்.

மகளிர் சுய உதவிக் குழுவா? அப்படியென்றால்...?

"மகளிர் சுய உதவிக் குழுக்கள் உலகிலேயே முதன்முதலாக வங்க தேசத்தில்தான் தோன்றின" என்கிறார் 'சேவை நிறுவனத்தின் ஸ்தாபகரும் செயலாளருமான கே. கோவிந்தராஜு'. "இதன் மூலம் பெண்களுக்கு வேலை வாய்ப்புகள் பெருகி பொருளாதார வளர்ச்சி பெற்று அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரத் துவங்கியது. உலகின் வளர்ந்து வரும் நாடுகளில் படிப்படியாக மகளிர் சுய உதவிக் குழுக்கள் உருவாகின. பெண்கள் தாங்களே முன்வந்து செயல்படும்போது தன்முனைப்பு முயற்சிகளின் பலனாக முதலில் தனி நபர் திறமை வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி, சமூக வளர்ச்சி என ஒவ்வொன்றாக அடைந்திட முடியுமென்பது மகளிர் சுய உதவிக் குழுக்களின் செயல்பாடுகள் மூலமாக நிரூபணமான உண்மை!" என்கிறார் அவர்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

ஒரு மணி இருக்கும். என் கௌண்டரில் இருந்த கூட்டத்தை அனுப்பி வைத்துவிட்டு பாங்க்கை விட்டு வெளியில் வந்து பிளாட்பாரத்தில் நின்றபடி சிகரெட்டைப் பற்றவைத்தபோதுதான் என் முன் புதிதாக முளைத்திருந்த குடிசையைப் பார்த்தேன். அழுக்குச் சட்டையும் ஆறுநாள் தாடியுமாக இருந்தான் அந்த ஆக்கிரமிப்பாளன். ஆனால் முகத்தில் இருந்த ஏதோ ஒன்று என்னை என்னவோ செய்தது.

"இங்க பாருப்பா. இது கவர்மெண்ட் பாங்க். இங்கெல்லாம் குடிசை போடக் கூடாது. போலீஸ்ல சொல்லிருவோம்."

"வைகை ஆத்துக் கரைலதான் சார் குடிசை போட்டுருந்தேன். நேத்து பெஞ்ச மழைல அடிச்சிக்கிட்டுப் போயிருச்சி சார். நானும் என் பெண் ஜாதியும் பாத்திரம் பண்டத்தோட அலஞ்சிக்கிட்டிருந்தோம். இங்க உள்ள போலீஸ்காரர், கைல உள்ள காசெல்லாத்தயும் பிடுங்கிக்கிட்டு இங்க குடிசை போட்டுக்கோன்னு சொன்னாரு. இப்ப நீங்க துரத்திவிட்டீங்கன்னா, அடுத்து போலீசுக்குக் கொடுக்கக்கூட காசு கிடையாது சார். ஒரு ரெண்டு மாசம் இருக்க விட்டீங்கன்னா

# மரசாணம்

கொஞ்சம் காசு சேத்துக்கிடுவேன். அப்பறம் திடீர் நகர் சேரில குடி போயிருவேன் சார்."

சிலருக்குக் கஷ்டங்கள் ரொம்பவே பழகிப் போய்விடுகின்றன. இவன் ஒரு நாள் மேற்கூரையின்றிப் பட்ட கஷ்டத்தை விட நேற்று இரவு கேபிள் டீ.வி. அரை மணி நேரம் கட் ஆன போது நான் பட்ட கஷ்டம் அதிகம். பாதிக்கு மேல் இருந்த சிகரெட்டை வெறுப்புடன் கீழே போட்டு நசுக்கி விட்டு பாங்கிற்குள் திரும்பினேன்.

"சேது, ப்ராஞ்ச் வாசல்ல குடிசை போட்டவனோட பேச்சுவார்த்தை நடந்துச்சு போல? ஜாக்ரதைப்பா அடுத்து அந்த குடிசைக்காக நம்ப பாங்க்லயே ஹவுசிங் லோன் கேக்கப் போறான்."

இந்த அக்கௌண்டன்டுக்கு வாழ்க்கையில் சீரியஸ் மேட்டர் என்று எதுவுமே கிடையாது.



அவன் அங்கு குடிசை போட்டதைப் பாங்கில் வேலை பார்த்த எல்லோரும் மேலோட்டமாக எதிர்த்தாலும் யாருக்கும் குறிப்பான எதிர் நடவடிக்கை எடுக்க மனம் வரவில்லை. அவன் ஒவ்வொரு இடமாகப் போய்ப் பெரிது பெரிதாய் ஏசுநாதர், கிருஷ்ணர், மீனாட்சி என்று இடத்துக்கு ஏற்ற மாதிரி வரைந்து அதில் மனம் உருகி மக்கள் விட்டெறியும் சில்லரைகளுக்குள் வாழப் பழகியிருந்தான். ஒரு தரம் அவன் வரைந்த மீனாட்சி படத்தை ரயில்வே ஸ்டேஷன் வாசலில் பார்த்தேன். அந்தக் கண்களில் தென்பட்ட அன்பு, பார்ப்பவர்களை இம்சித்தது. அப்போதுதான் அவன் பெயர் என்னவென்று விசாரிக்க வேண்டும் என்று தோன்றியது.

ஒரு நாள் பைக்கைப் பாங்க்கில் வைத்துவிட்டு பக்கத்துத் தியேட்டரில் செகண்ட் ஷோ பார்த்து விட்டு வந்தேன். பைக்கை எடுக்க வந்த போதுதான் கவனித்தேன். அவன் சுவரில் கறுப்பு வர்ணம் பூசிக் கொண்டிருந்தான்.

"என்ன மாசாணம், உனக்குப் போனாப் போகுதுன்னு குடிசை போட இடம் கொடுத்தா, நீ பாங்க் சுவர்லயே கைவைக்க ஆரம்பிச்சிட்ட?"

"சார், வாங்க, சார். இந்த சுவர்ல அசிங்கம் அசிங்கமா சினிமா போஸ்டர ஒட்டிடறாங்க சார். பாங்க்குக்கு வர பொம்பளைங்க அப்படியே கூசிப் போயிடறாங்க. அதான் கறுப்பு பெயிண்ட அடிச்சு அதுல சாக்பீஸால தினம் ஒரு திருக்குறள் எழுதி அர்த்தத்தையும் எழுதி வைக்கப் போறேன்."

அவ்வளவு படித்தவனா இவன்? பார்வையையே கேள்வியாக்கினேன்.

"பத்து வரைக்கும் படிச்சிருக்கேன் சார். எனக்குத் திருவள்ளுவர்னா ரொம்ப இஷ்டம் சார். என்கிட்ட ஒரு பழைய திருக்குறள் புஸ்தகம் இருக்கு. அதுல முக்காவாசிக் குறளை மனப்பாடம் பண்ணிட்டேன் சார்."

எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை.

"எல்லோரும் 'கற்க கசடற கற்க' இல்லேன்னா 'அகர முதல' இல்லேன்னா 'துப்பார்க்குத் துப்பாய' இப்படி பத்து குறளை வச்சிக்கிட்டு ஜல்லி அடிச்சிக்கிட்டு

**வரலொட்டி ரெங்கசாமி**

இருக்காங்க. இது போக அழகான குறள் நிறைய இருக்கு. யாரும் படிக்காத குறளா தினம் ஒண்ணு எழுதி அர்த்தமும் எழுதப் போறேன் சார்."

எல்லாரும் ஜல்லியடிக்கும் அந்தப்பத்து குறளுமே எனக்குச் சரியாகத் தெரியாது. ஃபிக்ஸ் செய்யப்பட்ட கிரிக்கெட் மாட்சுகளைப் பார்த்து ரத்த அழுத்தத்தை ஏற்றிக் கொண்டிருந்த நேரத்தில் சமத்தாக திருக்குறள் படித்திருக்கலாம் சாதாரணத் தமிழனுக்குத் தாமதமாகத்தான் வரும் பட்டறிவு.

தினமும் ராசி பலனைப் பார்ப்பது போல் மாசாணம் எழுதிய திருக்குறளைப் பார்க்க ஆரம்பித்தேன். குறளை அப்படியே மனப்பாடம் செய்யும் வயது தாண்டி விட்டது. ஆனால் மாசாணத்தின் 'நறுக்' உரை மனத்தில் எளிதாக உறைந்து போனது.

'விலை மகளிரை அணைப்பது என்பது இருட்டறையில், தொடர்பில்லாத ஒரு பிணத்தைத் தழுவுவதைப் போல' - கன்னத்தில் அறைந்த மாதிரி வார்த்தைகள்.

லஞ்ச் ப்ரேக்கில் ரம்பாவின் தொடை, சிம்ரனின் இடை என்று பட்டி மன்றம் நடத்திக்கொண்டிருந்த எங்கள் பாங்க் ஊழியர்கள் இப்போது 'அகலாது அணுகாது தீக்காய்வார்' 'நாடோறும் நாடி முறை செய்யா மன்னவன்' என்று டிபன் பாக்ஸிலிருந்து கெட்டியான தயிர் சாதத்தைச் சாப்பிட்டபடி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தனர். எல்லாம் மாசாணம் உபயம்.

'நல்ல பெயரையும் புகழையும் விரும்பும் மனைவி இல்லாதோர் தங்களைக் கேலி செய்வார் முன் சிங்கம் போல பீடு நடை போட முடியாது'.

ஆடிட், இன்ஸ்பெக்ஷன்போது கூட நடுங்காத எங்கள் காஷியரை நடுங்க வைத்து அவர் 'பீடு நடை'யைப் பறித்த, அவர் சம்சாரத்தைப் பற்றி வள்ளுவருக்கு எப்படித் தெரிந்தது?

**"அந்தப் பிச்சைக்காரனைச் சுற்றி ஏகப்பட்ட கூட்டமா இருக்கே? என்ன விஷயம்?"**

**"கிழியாத 5 ரூபாய் நோட்டு ஒண்ணு வச்சிருக்கானாம்...! 50 பைசா போட்டவங்களுக்கு, அதைக் கண்ணிலே காட்டறானாம்...!**

**— வத்திராயிருப்பு கலைநண்பன்**



மாசாணத்தைக் கூப்பிட்டுச் சொன்ன போது வெட்கப்பட்டான். பிறகு பெருமை.

"அங்க பாருங்க சார் என் பொஞ்சாதிய! என்னக் கட்டிக்கிட்டு என்ன சுகத்தக் கண்டா? பாதி நாளுக்குச் சாப்பாடுகூட சரியா கிடைக்காது. ஒண்டறதுக்கு ஒழுங்கா ஒரு வீடு கிடையாது. இருந்தாலும் என் மேல அவ்வளவு ஆசை. அதனாலதான் கைல காசு இல்லாட்டிக்கூட இப்படி கம்பீரமா நடக்கிறேன். எல்லார்கிட்டயும் தைரியமாப் பேசறேன். வள்ளுவருக்கு இது எப்படி சார் ரெண்டாயிரம் வருஷத்துக்கு முன்னாலேயே தெரியும்?"

இரண்டு மாதத்தில் பிளாட்பாரத்தைக் காலி செய்துவிடுவேன் என்று சொன்ன அந்த இனிய ஆக்கிரமிப்பாளன் ஆறு மாதம் ஆகியும் இடம் பெயரவில்லை. மாசாணம் எங்களின் சாலமன் பாப்பையா ஆனான். அவ்வப்போது அவனுக்கும் அவன் மனைவிக்கும் காபி, டீ, வடை இது போக மதியம் சாப்பாடு, கொஞ்சம் பணம் என்று நாங்கள் உதவ ஆரம்பித்தோம். 'கற்றவனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு' (குறளிலேயே அவனை மடக்குவதாக நினைத்தேன். "சார் நீங்க சொல்றது திருக்குறள் இல்லை சார்." மாசாணம் என்னைத் திருத்தினான்.) எங்களை மேலே இருந்து பார்த்துக் கொண்டிருந்த மலர்மிசை ஏகினானுக்கு (சும்மா சும்மா கடவுள், தெய்வம் என்ற பழைய வார்த்தை வேண்டாமே) போர் அடித்து விட்டது. மாசாணத்தைத் தன் விளையாட்டுப் பொருளாக்கிக் கொண்டான் அவன்.

அன்று மாலை நான் பாங்க்கை விட்டுக் கிளம்ப கொஞ்சம் லேட்டாகிவிட்டது. பைக்கை ஸ்டார்ட் செய்யும்போது ப்யூன் ஓடி வந்தான்.

"சார் உங்களுக்கு விஷயம் தெரியுமா? நம்ப மாசாணத்தோட சம்சாரம் எவனையோ இழுத்துக்கிட்டு ஓடிப் போயிருச்சி."

பைக்கை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டு மாசாணத்தைப் பார்க்க ஓடினேன்.

அவன் கையில் திருக்குறள் புத்தகத்தைத் திறந்து வைத்தபடி, சுவரில் அடுத்த நாளுக்கான குறளைக் கவனத்துடன் எழுதிக் கொண்டிருந்தான். எப்படி ஆறுதல் சொல்வது. 'தொலையறா சனியன்' என்றா? 'நானே வேற ஆள பாத்து...' என்றா? - தெரியவில்லை. குனிந்து காலியான குடிசையைப் பார்த்தேன். துக்கம் கேட்பதை நாளை வரை ஒத்திப் போட்டுவிட்டு சத்தமில்லாமல் கிளம்

## ஹால்மார்கிங் உள்ள நகைகளை வாங்குங்கள்!

கல்கி 29.10.2000 இதழில் 'தமிழ்நாடு தங்க நகை வணிகர்கள் சங்கங்களின் கூட்டமைப்பு' தலைவர் வசந்தலால் சி. மேத்தா தங்களுக்கு அளித்துள்ள நேர் முகம் படித்தோம்.

நகைகளின் தரம், சுத்தம் மற்றும் நம்பகத் தன்மைக்காக உருவாக்கப்பட்டுள்ள பாரபட்சமற்ற அஸேயிங் சென்டர்கள், அவர்கள் வழிமுறைகள் சரியாக உள்ளனவா என்று எமது அமைவனத்தால் கண்டறியப்பட்ட பின்புதான் அங்கீகரிக்கப்படுகின்றன.

இந்த பி.ஐ.எஸ். ஹால்மார்க்கிங் திட்டமே உலகளாவிய அபூர்வ உலோகங்களின் முத்திரை திட்டத்தின் கீழ், அதாவது வியன்னா ஒப்பந்தப்படியே அமல்படுத்தப்படுகிறது. அஸேயிங் சென்டர்கள் உருவாக்கமே, ஐ.எஸ்.ஓ/ஐ.ஈ.சி கைட் 25ன் பிரகாரம்தான் செய்யப்படுகிறது. இந்த உலகளாவிய தர நியமமே, தயாரிப்பு நிறுவனங்களின் கெடுபிடி இல்லாமல், பரிசோதனைச் சாலைகள் தன்னிச்சையாகச் செயல்பட வழிவகை செய்திருக்கிறது.

இதுபோன்ற அஸேயிங் மையங்கள் எந்தவித குறுக்கீடுகளும் இல்லாமல் தன்னிச்சையாகச் செயல் பட முடியுமா என்பதை ஆராய்ந்த பின்பே அவர்களுக்கு அங்கிகாரத்தை அளிக்கிறது இந்திய தர நிர்ணய அமைவனம். நிலைமை இப்படி பாரபட்சமின்றி இருக்க, அஸேயிங் சென்டர்கள் நகை வியாபாரிகளின் ஓர் அங்கமே என்று மேத்தா கூறியிருப்பது எமக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

இந்த ஹால்மார்க்கிங் திட்டமே கட்டாய தர முத்திரை திட்டத்தின் கீழ் வரவில்லை என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறோம். நகை வியாபாரிகள் தாமாக முன் வந்து இத்திட்டத்தின் சிறப்பு பற்றி உணர்ந்து ஹால்மார்க்கிங் வேண்டுமென கேட்பார்கள் என நம்புகிறோம்.

நுகர்வோரும் இந்த ஹால்மார்க்கிங் திட்டத்தின் உன்னதத்தை உணர்ந்து, தங்களுக்குத் தரமான நகைகள் மட்டுமே வேண்டுமென வியாபாரிகளைக் கேட்கத் தொடங்கும் பட்சத்தில், வியாபாரிகள் இத்திட்டத்தை எல்லா நகைகளுக்கும் விஸ்தரிக்க எண்ணுவார்கள் என்பது உறுதி.

சென்னை-113, ரவிசங்கர்,
இயக்குனர், ப்யூரோ ஆஃப் இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ்

---

பினேன்.

அன்று இரவு நெடு நேரம் வரை தூக்கம் வரவில்லை. மாசாணம் இப்போது என்ன நினைத்துக்கொண்டிருப்பான்? மாசாணம் மாதிரி பிளாட்பாரக் குடிசையில் வாழ்பவர்களுக்கு மனைவி ஓடிப் போவது, வேறு ஒருத்தி வந்து ஒண்டிக் கொள்வது என்பதெல்லாம் சாப்பிடுவது, பாத்ரூம் போவது போன்ற ஒரு சாதாரண நிகழ்வு என்று ப்யூன் எனக்கு ஆறுதல் சொல்லியிருந்தான். மாசாணம் இதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ளாததால்தான் எப்போதும் போல் குறள் எழுதிக் கொண்டிருந்தானோ? இது போன்ற ஒரு நிகழ்வை யாராக இருந்தாலும் சரி, எப்படி சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியும்? என்னால் மாசாணத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. நாளைக்கு அவனுக்குப் பாய் கடையில் ஸ்பெஷல் பிரியாணி வாங்கிக் கொடுத்து அவனிடம்பேச வேண்டும் என்று தீர்மானித்த பிறகுதான் எனக்குத் தூக்கமே வந்தது.

மறுநாள் காலை நான் கொஞ்சம் முன்னதாகவே பாங்கிற்கு வந்துவிட்டேன். பாங்க் கிளை இருந்த தெரு முனையில் ஒரு கூட்டம் தென்பட்டது. தெருவிற்கு அந்தப் பக்கம்தான் நகரத்தின் மார்க்கெட் இருந்தது. ஏதாவது ஆக்ஸிடென்ட், அடிதடி, சண்டை, தகராறு, வெட்டு, குத்து என்று எப்போதும் இந்தத் தெரு முனையில் கூட்டம் இருக்கும்.

நான் பைக்கை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தியபடி முந்தையதினம் மாசாணம் எழுதி வைத்திருந்த குறளைப் பார்த்தேன்.

*"மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்*
*உயிர் நீப்பர் மானம் வரின்."*

மாசாணத்தின் 'நறுக்' உரை அன்று போர்டில் இல்லை. இந்தக் குறளே 'நறுக்'காக இருப்பதால் உரை தேவையில்லை என்று நினைத்திருப்பானோ?

அப்போது பாங்க் ப்யூன் மூச்சிரைக்க என்னை நோக்கி ஓடி வந்தான்.

"சார், நம்ம மாசாணம்..." - அவன் சொல்லி முடிப்பதற்கு முன்னாலேயே எனக்கு விஷயம் தெரிந்துவிட்டது. ஆளில்லாத அந்தக் குடிசையைக் குனிந்து பார்த்த போது நான் சன்னமாக அழுது கொண்டிருந்தேன்.

# நகர்வலம்



# கிறங்குங்க!

உய்யி... உய்யின்னு காது கிழிக்கிற விசிலு. எங்களை ஆளவந்த கமல் வாழ்கன்னு கோஷம். இதுக்கு ஊடால வாலி தலைமையில கவியரங்கம். கே.ஏ. குணசேகரன் நாட்டு பாடல்னு காமராசர் அரங்கத்துல ஒரே அமர்க்களம். கமலு பொறந்த நாள் விழாவையும் (எத்தனை யாவது பொறந்தநாளுன்னு இனிவிடேஷன்ல போடலை) நற்பணி இயக்க ஆண்டு விழாவையும் ஒவ்வொரு வருஷமும் வித்தியாசமா கொண்டாடுறாரு. இந்த தபா SEEDன்னு ஒரு அமைப்பை நடத்துற ஏ.ஆர். பழனிச்சாமிக்குச் சமூக சேவை விருது கொடுத்தாரு. கொலை குற்றத்துக்காக ஆயுள் தண்டனை மரண தண்டனை அடைஞ்ச கைதிகளோட ஏழைக் குழந்தைகளைப் பத்தி யாருமே கவலைப்படுறது இல்லை. அந்த மாதிரி குழந்தைகளுக்கு ஸ்ரீபெரும்புதூர்லே பள்ளிக்கூடம் கட்டி இந்தப் பழனிச்சாமி காப்பாத்துறாராம். இலக்கிய விருது வாங்குன எஸ். மாசிலாமணி, நாகர்கோயில்ல வீரமாமுனிவர் பேச்சாளர் பேரவை தொடங்கி அதுக்குத் தலைவரா இருக்குறதோட, தெற்கே பெரிய பேச்சாளராம்.

கும்பகர்ணனோட தேசபக்தி இந்திய கிரிகெட்டு வீரர்களோட தீவிர தேச பக்தி ரெண்டையும் இணைச்சிப் பேசி எல்லாத்தையும் ரசிக்க வெச்சிபுட்டாரு. என்ன ஒண்ணு நாற்பது வயசு கொண்ட இவரு இளம் பிள்ளை வாதத்தாலே ரெண்டு காலும் செயல் இழந்தாலும்.. முதுகலை பட்டம் வரைக்கும் படிச்சு முன்னேறியிருக்காரு... மேடைக்குத் தூக்கிட்டுப் போறோம்ன்னு சொன்னப்போ... வேண்டாம்ன்னு தவழ்ந்தே வந்துட்டாரு... இன்னா தன்னம்பிக்கைப்பா...

அப்பாலே பங்ஷன் சிறப்பு விருந்தினர் போலீசு அதிகாரி ஆர். சேகர் ஐ.பி.எஸ். கமலு பேசும்போது எனக்குப் பதினோரு வயசுதான் ஆச்சுன்னு மன்றத்தோட வயிசை சுட்டிக்காட்டினாரு... விழா முடிஞ்சி வெளியே வந்தப்போ...




• பழனிச்சாமி, மாசிலாமணியுடன் கமல்.

இனிவிடேஷன்ல தலைவர் கமல்ன்னு பிரிண்டு பண்ணியிருக்காங்க பாத்தியான்னு சக்கரம் கேட்டதும் எனக்குப் பத்திக்கிட்டு வந்துது. உருப்படியா தமிழு சினிமாவுலே எதுனாச்சும் செய்யிற கமலை சுதந்தரமா வுடுங்கப்பான்னு சொல்லிப்புட்டு வண்டியை வுட்டேன்.

• ருடிஷாப், வோல்ப்கேங் நியூமேன்



எழும்பூர் மியூசியம் தியேட்டர்லே ஜெர்மன் கலாசார தொடக்க விழா. ரெண்டு வெளிநாட்டுக்காரங்க உலக இசை வாசிக் கப்போறாங்கன்னு சக்கரம் சொன்னதும் ஆ.ஆ....ஊ.... ப்பீ...ன்னு காட்டுக் கத்தல் கத்தினு இருப்பாங்களேனு கேட்டேன். அட இல்லப்பா துல்சிமர், கிதார் இந்த ரெண்டு கருவிகளையும் வெச்சுக்கிட்டு கலக்கப் போறாங்களாம்ன்னு பார்ட்டி ஹார்லிக்ஸ் ஊட்டிச்சு. தியேட்டர்ல உட்கார இடம் இல்லே. அவ்ளோ கூட்டம். ருடிஷாப், வோப்கேங் நியூமேன்னு ரெண்டு பேரு. ருடிஷாப் கையில நம்ம சங்க காலத்து யாழ் பாணில ஒரு இசைக் கருவி. அதுல நூறு கம்பியிருந்தது. அதுதான் துல்சிமராம். நியூமேன் கித்தாரு. ருடிஷாப் ரெண்டு மரக் குச்சிகளை வெச்சிகிட்டு துல்சிமரை வாசிக்க ஆரம்பிச்சதும்... அடடா இன்னா ஸாஃப் டான சவுண்டு! பீங்கான்ல மணி செஞ்சு பீச்சு காத்துல ஆட விட்ட மாதிரி அப்பிடி யொரு 'கிங்குளிங்கு....' சவுண்டு. அதுக்கு ஈடு கொடுக்கிறாப்புலே நியூமேன் கித்தாருலே தூள் கிளப்பிட்டாரு... அரங்கத்துலே ஒரே அமைதி... சக்கரத்தைத் திரும்பிப் பார்த்தா... மெலடி இசையிலே கண் கலங்கிப்போயி உட்கார்ந்திருக்கு... முதல்பிட் வாசிச்சு முடிஞ் சதும்... நியூமேன் பேசினாரு... இப்போ உங் களை மயக்குன இந்த துல்சிமார் கருவி இந்திய கலாசாரத்துக்குச் சொந்தமானது. சந்தூர் இசைகருவியாக காஷ்மீரிலிருந்து ஐரோப்பாவிற்கு வந்தப்போ நாங்க துல்சி மார்னு பெயர் வச்சோம். பியானோ கண்டு பிடிக்கவும் இந்த துல்சிமார்தான் எங்களுக்கு அடிப்படையா இருந்ததுன்னு சொன்னதும் ஒரே கைதட்டல்... நாம கைவிட்ட இசைக் கருவியிலே ஐரோப்பாகாரன் என்னமா உருக்கினான் பாத்தியான்னு சக்கரம் உணர்ச்சிவசப்பட்டதும்... நம்ம ஊர்லயும் ஒரு இசைக்கருவி ரொம்ப பிரபலம் உனக்கு தெரியுமான்னு நான் கேட்டேன்... இன்னா அதுன்னு சக்கரம் அப்பாவியா முழிச்சது. அப்போ உனக்கு ஜால்ரா பத்தி நெசமா லுமே ஒண்ணும் தெரியாதான்னேன் பாருங்க. தடபுடன்னு ஆட்டோ சவுண்டு மாதிரி சக்கரம் சிரிச்சது. பயந்துபோயி ஆட்டோ சவுண்டே மேலுன்னு வண்டியை ஸ்டார்ட் பண்ணுனேன்.

— மீண்டும் சந்திக்கும் வரை
மீட்டருக்குமேல் கேட்காத ஆட்டோ
செல்வம்

## மனசில் மட்டும் இடம்!

சட்டமன்றத் தேர்தல் வர இருக்கின்ற நிலையில் ஆங்காங்கு செல்வாக்குடன் இருக்கும் குட்டி குட்டி இயக்கங்கள் அமையவிருக்கும் கூட்டணிகளில் இடம் கேட்டு காய்களை நகர்த்துகின்றன. சென்னை பிரஸ் கிளப்பில் தினசரி ஏதாவது ஓர் இயக்கம் பத்திரிகையாளர் சந்திப்பை நடத்திக் கொண்டிருக்கிறது. தமிழ்நாடு அருந்ததியர் சங்கம் என்ற அமைப்பு "யார் எங்களுக்கு 13 இடங்கள் கொடுக்கிறார்களோ அவர்களை ஆதரிப்போம்" என்றது. 'புரட்சிபாரதம்' அமைப்பு ஐந்து இடங்கள் கொடுக்கும் கூட்டணிக்கே ஆதரவு என்று சொல்கிறது. சேக்தாவூது என்பவர் தலைமையில் 'தமிழ்மாநில முஸ்லிம் லீக்' என்ற அமைப்பு இயங்குகிறது. சேக்தாவூது கிரிக்கெட் மேட்ச் ஃபிக்ஸிங் விவகாரத்தில் அசாருதினை மட்டும் தனிமைப்படுத்தி பேசுவதைக் கண்டித்துப் பத்திரிகையாளர்களிடம் விளக்கினார். அப்போது ஒரு நிருபர் "வரும் தேர்தலில் உங்கள் ஆதரவு யாருக்கு?" என்றார். "நாங்கள் அம்மாவோடு தான் இருக்கிறோம். எங்களுக்கும் இடம் கொடுக்கப்படும் என்று நம்புகிறோம்" என்றார் அவர். உடனே மற்றொரு நிருபர் "அம்மா உங்களுக்கு மனசில் மட்டும்" இடம் கொடுத்தா என்ன பண்ணுவீங்க" என்றதும் ஒரே சிரிப்பு. சேக்தாவூதும் விடாப்பிடியாக "அதையும் எத்துக்க வேண்டியதுதான்" என்று கூறி சமாளித்தார்.


• சேக்தாவூது

— கௌசி
படம்: ராஜன்

மூணு முறை ஃபைனல் செலக்ஷன் வரைக்கும் வந்துட்டு செலக்ட் ஆகாம போன ஒரு நாவலுக்கு இந்த வருஷம் புக்கர் பிரைஸ் கிடைச்சிருக்கு. 'தி பிளைண்ட் அஸாஸின்' - ஒரு எண்பது வயசு கிழவி தன் வாழ்க்கையைத் திரும்பிப் பார்த்து அசை போடற கதையாம். எழுதின மார்கரட் அட்வுட்டும் கிழவிதான் – வயது - 68! லாஸ்ட் இயர் புலிட்ஸர் பிரைஸ் நம்ம ஊரு சின்னப் பொண்ணு ஜும்பா லஹிரிக்குக் கிடைச்சது. என்ன காண்ட்ராஸ்ட் பாருங்க!

இந்த வருஷம் பரிசீலனைக்கு வந்த என்ட்ரீஸ் அவ்வளவு திருப்திகரமா இல்லைன்னு ஜட்ஜஸ் ஓபனாவே சொல்லிட்டாங்க. பரிசு வாங்கினவங்களுக்கு எப்படி இருக்கும்? ஏதோ கான்ஸலேஷன் பிரைஸ் கிடைச்சாப்பல இருக்கும்னு நினைக்கறேன். ஆனா அதைக் காமிச்சுக்காம அட்வுட் ரொம்ப சந்தோஷம் வெளிப்படுத்தி ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்காங்க.

இந்த மாதிரி முக்கியமான இன்டர்நேஷனல் பிரைஸஸ் வாங்கற புத்தகங்களை முழுசா இல்லாட்டியும் பகுதிகளில் தமிழாக்கி இன்டர்நெட் தமிழ் சைட்ஸயும், இலக்கிய பத்திரிகைகள்ளயும் போட்டா என்ன? தமிழ் ரீடர்ஸுக்கு ஒரு நல்ல சாம்ப்ளிங் கிடைக்கும். எழுத்தாளர் காஞ்சனா தாமோதரன், அமெரிக்காவிலே அறக்கட்டளை ஆரம்பிச்சு தமிழுக்காக ஆக்டிவிடீஸ் நடத்தப் போகிறதா கல்கிலதான் படிச்சேன். அது மாதிரி அமைப்புகளால பர்மிஷன் வாங்கி இந்த மாதிரி சாம்பிள் டிரான்ஸ்லேஷன்ஸ் பொருத்தமான ஆட்களைக் கொண்டு சுலபமா பண்ண முடியும்.



• மார்கரட் அட்வுட்

வைல் ஆன் தி டாபிக் அஃப் டிரான்ஸ்லேஷன் கல்கியோட சிறுகதைகளை இங்க்லிஷ்ல படிச்சுக்கிட்டிருக்கேன். அவரோட பேத்தி கௌரி ராம்நாராயண் மொழி பெயர்த்து பெங்குவின்ல பப்ளிஷ் பண்ணியிருக்காங்க.

தாத்தான்னு பார்க்காம கல்கியோட கதைகளை ரொம்ப கிரிடிகலா எடை போட்டு முன்னுரை எழுதியிருக்காங்க மொழிபெயர்ப்பாளர். 'சில கதைகள் எப்படி பப்ளிஷ் ஆச்சுன்னுகூட யோசிக்க வைக்குது'ன்னு எழுதியிருக்காங்க.

உழைப்பு தெரியாம ரொம்ப இயல்பா எழுதற மாதிரி அமையறதுதான் நல்ல மொழிபெயர்ப்பு. அந்தக் குவாலிடி 'Kalki-Selected Stories' புத்தகத்துல இருக்கு. ஆனா என்ன செஞ்சாலும் தமிழ் வாசனையை முழுசா இங்க்லிஷ்ல கொண்டு வர முடியாத சில இடங்கள் இருக்கத்தான் செய்யுது. (இதை மொழி பெயர்ப்பாளரேகூட கடைசியில கொடுத்திருக்கிற குறிப்புல ஒத்துக்கிட்டிருக்கார்) உதாரணமா




• மொழி பெயர்ப்புச் சவால்!

கடிதமும் கண்ணீரும் கதையோட கடைசி வரி:

*அந்த நாதஸ்வரக்காரன் கேதாரகௌளை ராகந்தான் வாசிக்கிறானா? அல்லது உலக மகா காவியங்களிலுள்ள சோக ரஸத்தையெல்லாம் பிழிந்து நாதஸ்வர குழாய் வழியாகப் பொழிகிறானா?*

இதை ரொம்ப

# சுமி சூப்பர் மார்க்கெட்

அழகாகத்தான் மொழி பெயர்த்திருக்கார்:

*Was the piper merely playing the ragam Kedaragowla? Or was he pouring out all the sorrows of the world's great epics through his pipe?*

ஆனா முதல்ல 'பிழிந்து' அப்புறம் பொழியறதுக்கு இங்க்லீஷ்ல சரியான வார்த்தை இல்லையே! பிழியப்படறது சோக ரஸம் மட்டுமில்ல,' படிக்கறவங்க மனசும்தான். அதனாலே அந்த வார்த்தை விட்டுப் போகறபோது உணர்ச்சி ஒரு மாத்து குறைஞ்சுதான் போகுது. பட் இங்க்லீஷ்ல

பிழிஞ்சு கொடுத்த இன்னொரு வித்வான் பத்திச் சொல்லட்டுமா...? ஆனா பிழிஞ்சதும் பொழிஞ்சதும் சோகத்தை இல்லே - கேதார கௌளையையும் இல்லே; சாரமதி ராகத்தை - வித்வான் புல்லாங்குழல் சஷாங்க். குழந்தை மூஞ்சி இன்னும் முழுசா மாறல்லே- ஆனா வாசிப்பு ரொம்ப மெச்யூர். சாரமதியை அப்படியே ஃப்ளூட்டுக்குள்ளே இறக்குமதி பண்ணி வைச்சுக்கிட்டு டீஸ்பூன் டீஸ்பூனா எடுத்து ருசிக்கற மாதிரி கொடுத்தார் பாருங்க... ஒவ்வொரு துளியிலயும் ஜீனியஸ்ன்றது தெரிஞ்சுது - இத்தனைக்கும் டீ.வி ப்ரோக்ராம்தான் - பொதிகைல மார்னிங் அஞ்சரை மணிக்கு... ஆமாங்க! ஆஃப்டர் எ லாங் டைம், பழைய டி.கே.பி, கே.வி.என், சேஷகோபாலன் ரெகார்டிங்ஸுக்குக் கொஞ்சம் ரெஸ்ட் கொடுக்கறதுன்னு ஒரு நல்ல முடிவு எடுத்திருக்காங்க போல இருக்கு பொதிகைல -

## இங்க்லீஷ்ல பிழிஞ்சு பொழிய முடியுமா?



இப்போ இரும்பவும் நியூ ப்ரோக்ராம்ஸ் போடறாங்க. அதுவும் லைவ் ரெகார்டிங்ஸ். மெட்ராஸ்ல மியூசிக் சீசன் ஆரம்பிக்கறதுக்கு முந்தி பொதிகைல ஆரம்பிச்சிருச்சுன்னு சொல்ல பயமாயிருக்கு. நாளைக்கே மகாராஜபுரம் சந்தானந்தோட ஸ்டுடியோ ரெகார்டிங்கை ஆயிரத்தியோராவது தடவையா போட்டாலும் போட்ருவாங்க.



• சஷாங்க்

மொழி பெயர்ப்புல ஆரம்பிச்சதால மொழி பெயர்ப்புலயே முடிக்கிறேன். சிட்லபாக்கம் - ஸாரி பெங்களூர் சண்முகசுந்தரம் ஒரு லெட்டர் போட்ருக்கார் சூப்பர்மார்க்கெட்டுக்கு. பர்ஸுக்கு நேர் தமிழ் 'மடிப்புப் பணப்பை' - உச்சரிக்க கஷ்டமாயிருந்தா 'மடிசு'ன்ற வார்த்தையை உருவாக்கலாம்னு!

பர்ஸ் இஸ் பெஸ்ட் - தட் டு எ ஃபுல் ஒன்!

படிக்கறவங்க தமிழையும் படிச்சுட்டு வந்து கம்பேர் பண்ணப் போறதில்லே!

— சுமி

# அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்,



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கற்பக விருட்சமா கற்பக விநாயகர் அள்ளிக் குடுக்கறாருங்க இந்த வாரம்! உள்ளூர் விவகாரம், வெளியூர் மேட்டர் எல்லாத்துலயும் புகழும் பாராட்டும் குவியும். புது சொத்து, வாகனம் வாங்கற சான்ஸ்கூட இருக்கு. பொருளாதார விஷயத்துல கொஞ்சம் கேர்ஃபுல்லா இருங்க; அப்பா உடம்பை கவனிச்சுக்குங்க; அம்மாவுக்கு நிறைய 'ஐஸ்' வைங்க; அவங்க வழியில உங்களுக்கு நிறைய அதிர்ஷ்டம் அடிக்கப் போகுதே!



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

சூர சம்ஹாரத்துக்குப் பிறகு திருச்செந்தூர் முருகன் கொஞ்சம் 'ஹாட்'டாவே இருக்காரா, இது உங்களுக்கு சுமாரான வாரம்தான். எதுலயும் எச்சரிக்கையும் கவனமும் தேவை; ரொம்ப அவசியமில்லைன்னா எதுக்கு ஊரைச் சுத்தணும்? வீட்டோட இருங்க; வாயையும் அடக்கிக்கங்க; விழிப்போட இருந்தா, யார்கிட்டயாவது அல்வா வாங்காமத் தப்பலாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

ராகவேந்திரர் புண்ணியத்துல நீங்க அளவான நன்மைகள் பெறுவீங்க; வாழ்க்கைத் துணையோட நலனை கவனியுங்க; பயணம் வாணாம்; வாகனத்தால சங்கடங்கள் வரலாம். நிதானமும் பொறுமையும் கடைப்பிடிச்சா, 'வீக் எண்ட்'ல சந்தோஷம் 'ஹலோ' சொல்லும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ஆஞ்சநேயர் அருளால நீங்க காண்டஸ்டெல்லாம் ஜெயிக்கற வாரங்க இது! ரெட் ட்ரெஸ் போட்டுக்கிட்டு 'கோடீஸ்வரன்' போட்டிக்குப் போங்க! நீங்க குரோர்பதியாவது நிச்சயம்! பதவி, பட்டம், விருதுன்னு ப்ளஸ் பாயிண்டுங்க அனுமார் வால் மாதிரியே நீளும்; கின்னஸ் புக்குல இடம் பெற்றாலும் அதிசயமில்லை! பயணத்தின்போது மட்டும் செக்யூரிட்டி கார்டுங்களை வச்சுக்கங்களேன்... அட ஒரு சேஃப்டிக்குத்தாங்க!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

சத்ய சாயிபாபா உங்க வசீகரத்தைக் கூட்டறாரே! ஜாலியான வாரம்தான்; புதுநகை, புது ட்ரெஸ்ஸுன்னு வாங்கி, புதுப்புது ஊருங்கள்ள ரவுண்ட்ஸ் வருவீங்க; ஆனா உடம்பை ஜாக்கிரதையா பாத்துக்குங்க; லொட லொடன்னு உளறிக் கொட்டாம, அழகாகப் பேசக் கத்துக்கங்க.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சீரடி சாய்பாபா அருளால உங்க வாழ்க்கை சீராவே இருக்கும். பேச்சு சாமர்த்தியம், நல்லவங்க தொடர்பு ரெண்டுனாலும் ஆதாயம் எக்கச்சக்கம்; கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல சான்ஸ் தேடி வரும்; ஆனா எதுலயும் அலட்சியமா இருந்தீங்கன்னா உங்க லட்சியம் நிறைவேறாது – கபர்தார்!

## நவம்பர் 15 முதல் 21 வரை

# நடக்கும்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ஏழுமலையான் துணையோட உங்க திறமைகள் பளிச் பளிச்னு மின்னுற நேரமிது! நீங்க 'பார்ட்டி- அனிமலா'? ஒரு விருந்தையும் விட்டு வைக்காதீங்க; எதிர்பாராத 'லக்' அடிக்கும்; பரிசெல்லாம் கிடைக்கும்; எதிரிங்க எதிர்க்க நிக்கமாட்டாங்க; ஆனா உடன்பிறந்தவங்க, வேலைக்காரங்க, கவர்மெண்ட் ஊழியருங்க... இவங்ககிட்ட வாயை வுடாதீங்க... பிரச்னையாயிடும்!



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பாலாதிரிபுர சுந்தரி உங்களுக்கு டன் டன்னாக உற்சாகத்தை வழங்கப் போறா! வீடு, நிலம், வாகனம், ஸ்திர சொத்துக்கள் எல்லாம் வாங்குவீங்க! ஜெண்ட்ஸுக்கு லேடீஸால (எப்பவும் போல) அனுகூலம் ஏற்படும். பயங்கர குஷியில ரொம்ப அகலக் கால் வச்சுடாதீங்க; அப்புறம் மாட்டிக்கிட்டு முழிக்க வேண்டியதுதான்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

கருமாரியம்மா எழுத்தாளர்களையும் பத்திரிகைக் காரங்களையும் ஓஹோன்னு உசர வைக்கப் போறா, தன்னம்பிக்கையும் துணிச்சலுமிக்க சரக்கை நன்னா சிந்திச்சு, எடுத்து, உட்டீங்கன்னா, சும்மா பிய்ச்சுக்கிட்டு போகும். ரொம்ப நாளா 'வெயிட்டிங்'ல இருந்த நல்ல செய்தி இப்போ வந்து, எல்லாரையும் நண்பராக்கிடும். உங்க பல்லு முத்து போல இருக்கலாம்; ஆனா முன்னப் பின்ன தெரியாதவங்கக்கிட்ட காட்டிடாதீங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

மதுரை மீனாட்சி, பெண்கள் நிலையை உயர்த்தி, அவங்க மூலமா ஆண்களையும் உயர்த்தப் போறா; வியாபாரிங்களுக்கு நல்ல பீரியட்; ஆன் மீசைத்துல ஈடுபட்டா எதிரிகள் அம்போ; பாஷை தெரியாதவங்ககூட உதவுவாங்க; உடல் ஆரோக்கியம்தான் இன்னிக்கு இருந்தா மாதிரி நாளைக்கு இருக்காது!



கன்னி ராசிக்காரரான பாடகர் சஞ்சய் சுப்ரமணியத்துக்கு ஆதாயம் எக்கச் சக்கமாம்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அபிராமி மனசு வச்சாத்தான் உங்க மனசுல இருக்கற சஞ்சலங்கள் தீரும்; இல்லாட்டி ஆரோக்கியக் குறைவு, பண விரயம், வீண் அலைச்சல், மனக்குழப்பம்னு அல்லாடுவீங்க; மின்சாரம், நெருப்பு, கூரிய ஆயுதங்கள், இதுங்ககிட்டயே போகாதீங்க! பர்ஸை மட்டும் உங்ககிட்டயே வச்சுக்குங்க... உஷார்... உஷார்...!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

மாதா புவனேஸ்வரி, தாய்க்குலத்தை எல்லாம் உற்சாகமான பாதையில இருப்பப் போறா; ஞான மார்க்கம், பக்தி மார்க்கம்னு போயி 'மனசு தெளிஞ்சு நிக்கும்; அதுனால வீட்ல 'டொய்' ஒண்ணுமிருக்காது; சீரான வளர்ச்சியோட சுப காரியங்களுக்கும் சான்ஸ் இருக்கு! ஆனா எதுலயும் நிதானம் தவறிடக் கூடாது அம்புட்டுதேன்.



# ஆஸ்துமா ஈஸ்னோபீலியா அலர்ஜி, சைனஸ், காசநோய்களுக்கு தெய்வீக மூலிகை சிகிச்சை



பல வருட ஆராய்ச்சியின் மூலம், வேதங்களும், ஞானிகளும் போற்றியதும், கடவுளுக்கு சமமாகவும், நம் நாட்டின் பல பொக்கிஷங்களில் ஒன்றாகவும் கருதக் கூடிய பல தெய்வீக மூலிகைகளைக் கொண்டு பக்க விளைவுகள் இல்லாத வகையில், தாமே தயார் செய்த தெய்வீக மூலிகை மருந்துகள் மூலம் குழந்தைகளுக்கு வரும் பிரைமரி காம்ப்ளக்ஸ், எதிர்ப்பு சக்தி குறைவின் காரணமாக வரும் டஸ்ட் அலர்ஜி, சீதோஷ்ண நிலை மாற்றத்தால் வரும் மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், தொடர் இருமல், சுவாசிக்க முடியாதபடி மூக்கடைப்பு, சைனஸ், தொண்டை கரகரப்பு, தலைவலி, மலச்சிக்கல், ஈஸ்னோபீலியா, மூச்சு விடும் போது விசில் சத்தம் வருதல் (நின்றால் - நடந்தால் - படுத்தால் - மூச்சு வாங்குதல்) சாப்பிட முடியாமை, உடல் மெலிவு, உடல் வெளுத்து காணப்படுதல் போன்ற அறிகுறிகளை உடைய ஆஸ்துமா நோய்களுக்கு சிறப்பான சிகிச்சை அளிக்கப்படுகின்றது மற்றும் எய்ட்ஸ், எல்லாவித புற்றுநோய், BP, இதய நோய், சிறுநீரக கோளாறு, சர்க்கரை வியாதி, ஆண்மைக் குறைவு, குழந்தையில்லாத குறை, அல்சர், மூட்டுவலி, சொரியாசிஸ் போன்றவைகளுக்கு சிறப்பான ஆலோசனைகளும் & சிகிச்சைக்கும் அணுக வேண்டிய முகவரி




**தெய்வீக மூலிகை வைத்தியர்கள்**

தலைமை முகவரி : Dr. M.குருபரன் & Dr. M. சபாபதி, Dr. M.சிவசக்தி,S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்
P.B. NO. 30, 3,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் DT 635601 ✆ : 04179-20469, 22769
சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010. ✆ : 044-6424285, 6427638.


இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 P.M. மாலை 5.00-7.00 P.M.

**ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க**

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>[illegible] | **காஞ்சிபுரம்**<br>[illegible] | **கடலூர் (S.A. DT.)**<br>[illegible] | **விழுப்புரம்**<br>[illegible] | **திருவண்ணாமலை**<br>[illegible] |
| **மும்பை**<br>7 & 8-ந்தேதி-10 A.M. TO 8 P.M.<br>The South Indian Concerns Ltd.,<br>401, Telang Road, Matunga (CR),<br>PH : 022/4011680 | **பெங்களூர்**<br>[illegible] | **ஓசூர்**<br>[illegible] | **சேலம்**<br>[illegible] | **ஈரோடு**<br>[illegible] |
| **கோயம்புத்தூர்**<br>[illegible] | **மதுரை**<br>[illegible] | **தஞ்சாவூர்**<br>[illegible] | **திருச்சி**<br>[illegible] | **நாமக்கல்**<br>[illegible] |
| **நியூடெல்லி**<br>[illegible] A.M. TO 8 P.M.<br>South Indian Hotel, [illegible], Padam<br>Singh Road, Ajmal Khan Road,<br>Karol Bagh ✆ : [illegible] | **தர்மபுரி**<br>[illegible] | **திருப்பூர்**<br>[illegible] 2 P.M. TO 3 P.M.<br>[illegible] | **உடுமலைபேட்டை**<br>[illegible] | **திண்டுக்கல்**<br>[illegible] |
| **தூத்துக்குடி**<br>[illegible] | **திருநெல்வேலி**<br>[illegible] | **நாகர்கோவில்**<br>[illegible] | **விருதுநகர்**<br>[illegible] | **கரூர்**<br>[illegible] |

தகவல் : SUN, RAJ, VIJAY, D.D T.V. களில் எமது பேட்டியை காணத்தவறியவர்கள். டாக்டரின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ. 130/-மேற்கண்ட முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

# "கல்விசம்மா கல்விசு!"



"உங்களால் ஜீரணிக்க முடியாத விஷயம் ஏதாவது உண்டா?"
"இருக்கே... நேற்று ஐந்து வேளை சாப்பிட்டேன்.."
— சித்தோடு பூங்கொடி

"அந்தக் குழந்தை அரசியல்வாதி வீட்டுக் குழந்தையா இருக்கணும்னு எப்படி அவ்வளவு நிச்சயமா சொல்றே?"
" 'கல்விசம்மா, கல்விசு'ன்னு பாடுதே!"
— எஸ். மோகன்



"நம்ம தலைவருக்கு ஆனாலும் அவசரம்..."
"எதனாலே சொல்றீங்க?"
"உப தலைவர் தேர்தல் நாளைக்குத் தான் நடக்கப் போகுது... தேர்தல் நடந்து அவர் மகன் தேர்ந்தெடுக்கப்பட்டதா இன்னிக்கே அறிவிச்சிட்டாரு!"
— கணியூர் சீனிவாசன்



"என்னோட மூத்த பையன் ரகுபதி. இரண்டாவது பையன் சபாபதி. இப்ப மூணாவது பொறந்திருக்கிற பையனுக்கு என்ன பேர் வைக்கலாம்?"
" 'குரோர்பதி'ன்னு வையுங்களேன்!"
— நெல்லையப்பபுரம் செல்வன்



## நீங்கள் கேட்டவை - தராசு

● பி. பவானி, பெங்களூர்-58

*? புதிய மாநிலங்கள் உதயமாவதால் ஏதேனும் பெரிய மாற்றம் உண்டா?*

! மாற்றம் நிச்சயம் உண்டு. உற்பத்திக்கு உதவாத அரசாங்கச் செலவினங்கள் இரட்டிப்பாகி தேசப் பொருளாதாரத்தை மேலும் சீரழிக்கும்! முன்னேற்றம் இதை ஈடு செய்வது போலிருந்தால் பரவாயில்லை. ஆனால் அது எங்கே நடக்கப்போகிறது? ஆரம்பமே சண்டை பூசலாக அல்லவா இருக்கிறது!

● ஈ. சிதம்பரம், சிவகாசி (மேற்கு) ❑

*? அரசியலில் ஐம்பதாண்டு அனுபவம் உள்ளவர்கள், நேர்மையானவர்கள், படித்தவர்கள் என்று அமையப் பெற்ற கட்சித் தலைவர்கள் ஜெயலலிதாவுக்கு முக்கியத்துவம் தரும்போது, படிக்காத பாமர மக்கள் தங்கள் தகுதியை நிரூபிப்பார்கள் (தேர்தலில்) என்று நம்புகிறீர்களா? அனைத்துக் கட்சிகளும் 'ஜெ'வைத் தனிமைப்படுத்தினாலன்றி அவர் மீண்டும் ஆட்சிக்கு வந்துவிடக் கூடும் என்பது என் கருத்து- தராசுவின் கருத்து என்ன?*

! டிட்டோதான், வேறென்ன? 'ஜெ'வுக்கு முக்கியத்துவம் ஏற்படுத்துவதே கூட்டணி கட்சித் தலைவர்கள்தான். ஆனால், அவர்களோ ஜெயலலிதாவினால் தங்களுக்கு ஆதாயம் என்று தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். பரிதாபம்.



● ஜெ. கண்ணன், சென்னை-101.

*? கிரிக்கெட் சூதாட்டக்காரர்கள், லஞ்சம் கொடுக்க, டெல்லியிலுள்ள மகாத்மா காந்தி சமாதியைப் பயன்படுத்தினர் என்று செய்தி வெளியாகியிருப்பதைப் பற்றி...?*

! லஞ்ச ஒப்பந்தத்தை இரு தரப்பினரும் சத்தியம் தவறாமல் நிறைவேற்ற வேண்டுமல்லவா? அதற்காக இருக்கும்! திருடன்கூட சாமி கும்பிட்டுவிட்டுத்தான் புறப்படுவானாம்.



● எஸ். அப்துல் மஜீது, நாவினிப்பட்டி

*? பீஹார் மாநிலத்திலுள்ள பாட்னா சிறையில் கைதிகள் கலர் டீ.வி. பார்த்துக் கொண்டும், செல்போனில் பேசிக் கொண்டும் சொகுசு வாழ்க்கை நடத்துவது பற்றி தங்கள் கருத்து...?*

! பீஹாரின் சட்டம் ஒழுங்கு நிலைமை எப்படியிருக்கிறது என்பதற்கு மற்றொரு சாட்சியம்.



● கே. மூர்த்தி, குட்டலாடம்பட்டி

*? தமிழ்த் திரையுலகம் மீண்டும் பிரச்னைகளைச் சந்திக்க, ஆரம்பித்து விட்டதே - என்ன காரணம்?*

! 'பியூர் அண்டு சிம்பிள் ஈகோ' என்று சொன்னால், தராசு இடத்தை கமி ஆக்ரமித்துக் கொண்டதாகக் குற்றம் சாட்டாதீர்கள்!

● எல். கோபாலகிருஷ்ணன், வேலூர்-6

*? நமது நாட்டின் உண்மையான எதிரி (அல்லது எதிரிகள்) யார்?*



• இல்லாத்லை...

! முதலும் முடிவுமாக அறியாமை. இவ்விஷயத்தில் 53 ஆண்டுகளின் மிகப் பெரிய சறுக்கல்தான் மற்ற எல்லா பிரச்னைகளுக்கும் (எதிரிகளுக்கும்) அடிப்படைக் காரணம்.

● கு. கணேசன், பனங்கோட்டூர்

*? இந்திய பார்லிமெண்டின் பிரதிநிதியாக ஐ.நா. சபைக்குச் சென்ற வைகோ, இந்திய அரசால் தடை செய்யப்பட்ட விடுதலைப் புலிகள் இயக்கத்தின் பிரதிநிதி பாலசிங்கத்தை லண்டனில் சந்தித்துப் பேசியது தவறா?*

! தடை செய்யப்பட்ட அமைப்பின் பிரதிநிதியுடன் பேச்சு வார்த்தை நடத்துவதென்றால்

பிரதமர் அல்லது அயலுறவுத் துறை அமைச்சரின் ஒப்புதல் தேவை. அவ்வாறின்றி தன்னிச்சையாகச் செயல்படுவது தேசத்துரோகம். அதிலும் ம.தி.மு.க. மத்திய அரசின் ஓர் அங்கம் என்னும்போது, மேலும் பொறுப்புணர்வுடன் நடந்துகொள்வது அவசியம்.

❏ ரூ.50 பரிசு பெறுபவர்
ஈ. சிதம்பரம்
4/8/1140, முத்துராமலிங்க நகர்,
ரிசர்வ் லைன்,
சிவகாசி (மேற்கு)

● க. சாந்தி, காட்பாடி

? தேவர் ஜெயந்தியை அனைத்து அரசியல் கட்சிகளும் போட்டி போட்டுக் கொண்டு கொண்டாடுகின்றனவே?

! பின்னே, "ஐயா! அம்மா! தாயே! வோட்டுப் பிச்சைப் போடுங்க!"என்றா கேட்க முடியும்!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

? சோனியாவை எதிர்த்து ஜிதேந்திர பிரசாதா போட்டியிடுகிறார். இது எவ்வகையில்

# ஜிதேந்திரா ஏன் எதிர்ப்பு பி.ஜே.பியின் சதியாமே?

பி.ஜே.பி.யின் சதியாகும்? - நம் அண்ணன் இளங்கோவன் திருவாய் மலர்ந்தருளியுள்ளாரே?

! அபத்தமாக பேசியது போதாதென்று சென்னை வந்த பிரசாதாவை சந்திக்கவே கூடாதென ஓடி ஒளிந்து கொண்டார்கள் தமிழக காங்கிரஸார். இதில் சோனியா வேறு. பிரசாதா போட்டியிடுவது உட்கட்சி ஜனநாயகம் என்கிறார்! மொத்தத்தில் காங்கிரஸ் தொண்டர்கள் தலையில் காங்கிரஸ் தலைவர்கள் மிளகாய் அரைக்கிறார்கள்!


● கனைக்கும்...


● சொல்லும் செயலும்!

● எஸ். நாகராஜன், மேலப்பாதி

? இந்திய கிரிக்கெட் அணிக்குத் திறமை இல்லையா? அதிர்ஷ்டம் இல்லையா?

! ஒத்துழைப்பும் உறுதியும் இல்லை. அதனால் சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது.

● பால கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம் ★

? தீர்ப்பு - நீதி - என்ன வேறுபாடு?

! நீதி - ஆதர்சம் அல்லது இலக்கு. தீர்ப்பு - வாதம், பிரதிவாதம், சாட்சியம் போன்றவற்றுக்குக் கட்டுப்படும் கருவி. தீர்ப்பு எப்போதும் நீதி வழங்குவதாக அமைவதில்லை.

● ஆர். சந்திரசேகர், குளித்தலை

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
பால கிருஷ்ணமூர்த்தி,
கனரா வங்கி, காந்தி நகர்,
கும்பகோணம்

? பத்திரிகைகள் வாரா-வாரம் பெரிய பரிசுப் போட்டிகள் நடத்துவது ஆரோக்கியமானதல்ல என முன்பு பதில் அளித்த தாங்கள் தற்போது 'அமெரிக்க டூர்' என பரிசுப் போட்டி அறிவித்துள்ளீர்களே?

! போட்டிகள் என்ற போர்வையில் சூதாட்டம் நடத்துவதைத்தான் ஆட்சேபிக்கிறேன். அறிவுக்கும் முயற்சிக்கும் பரிசு தரப்படுவது நியாயமானதுதான்.


● அத்துமீறல்


● — பகைமையும்!

● எஸ். பொன்னுசாமி, உடுமலைப்பேட்டை

? அரசியல்வாதி, மந்திரவாதி, இலக்கியவாதி - ஒப்பிடுங்களேன்..?

! அரசியல்வாதிகள் பலர் தாங்கள் இலக்கியவாதிகள் என்று எண்ணிக் கொள்கின்றனர். இலக்கியவாதிகள் பலர் அரசியல் செய்வதில் சளைக்காதவர்கள். இருபிரிவினருமே மக்கள் மீது சொக்குப் பொடி தூவி மயக்கக்கூடிய மந்திரவாதிகள்தான்!

# ஸ்ரீ ராமபக்த ஹனுமான் 16

உயிரை மாய்த்துக் கொள்ளும் நிலைமைக்கு வந்து விட்ட சீதை ராக்ஷஸிகள் சூழ இருக்கிறாள்.

ஹனுமான் அவளைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று தீர்மானித்து விடுகிறான். ஆனால் அதை எப்படிச் செயல்படுத்துவது...? அங்கேதான் அவனுடைய அறிவும் ஆற்றலும் சங்கமமாகிச் செயல்படுகின்றன. ஆராய்ந்து முடிவெடுக்கிறான். அதையும் விரைந்தே எடுக்கிறான்.

அவன் எண்ண ஓட்டம் இதுதான் :

'இந்த சீதை பிழைக்க வேண்டும் என்றால் அதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. ராமதூதன் வந்திருக்கிறேன் என்று அவளிடம் சொல்லியாக வேண்டும். ஆனால், எப்படி அவளிடம் பேசுவது? அவளைச் சுற்றி அரக்கிகள் காவலிருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாமல் பேசுவதென்பது சாத்தியமாகுமா? மேலும் இவளிடம் பேசாமல் திரும்பிப் போனோமானால் ஸ்ரீராமனுக்கு என்ன பதில் சொல்வது? 'சீதை என்ன சொன்னாள்?' என்று அவன் கேட்பானல்லவா? இங்கே, சீதை இருக்கும் இடத்துக்கு ராமனை அழைத்து வந்து விடலாம். ஆனால் அதற்குள் அவள் தன் உயிரை மாய்த்துக் கொண்டுவிடக்கூடும்.

'என்னதான் செய்வது...? திடீரென்று அவளெதிரே போய் நின்றால், ராவணன் தான் மாறுவேடத்தில் வந்திருப்பதாக எண்ணி அவள் கூச்சலிடுவாளோ! அப்படியானால் ராக்ஷஸிகள் எல்லோரும் ஆயுதங்களைத் தூக்கிக் கொண்டு தாக்க வந்து விடுவார்களே! அப்புறம் ராமன் சொல்லியனுப்பிய செய்தியை சீதையிடம் சொல்ல முடியாமலே போய்விடுமே! வந்த காரியமே நடக்காமலல்லவா போய்விடும்!...'

– இப்படியெல்லாம் சிந்தித்து விட்டு ஒரு முடிவுக்கும் வருகிறான் ஹனுமான்.

'சீதையின் மனம் ராமனிடத்திலே பற்றியிருக்கிறது. எனவே ராமனின் குணங்களை அவளிடம் பேசுவதால் மட்டுமே அவளது கவனத்தைப் பெற முடியும். அச்சமற்ற அவளது நம்பிக்கையைப் பெற அது ஒன்றே வழி.'

இத்தனையையும் சிந்தித்துவிட்டு சீதையை அணுகி மதுரமாகப் பேச ஆரம்பித்தான் ஹனுமான்' என்று வால்மீகி சொல்கிறார்.

வால்மீகி சுலோகம் இது :

ஏவம் பஹுவிதாம் சிந்தாம் சிந்தயித்வா<br>மஹாகபி :<br>ஸம்ச்ரவே மதுரம் வாக்யம் வைதேஹ்யா<br>வ்யாஹ்ஹாரஹ

('இப்படிப் பலவிதமாகச் சிந்தித்து ஹனுமான் சீதையிடம் மதுரமாகப் பேசத் தொடங்கினான்' என்று பொருள்)

ஆன்றோர்களான பெரியோர்கள் இங்கே ஓர் அற்புதமான கருத்தைச் சொல்லுவார்கள் :

ஹனுமான் நவவியாகரண பண்டிதன். அதாவது உலகில் எந்தப் பகுதியிலும் வழக்கில் உள்ள மொழிகளைக் கற்றவன். (இதுவும் தூதுவனுக்கு அவசியமான தகுதிதானே!) ஆதலினாலே, கோசல நாட்டில் வழக்கிலுள்ள மொழியில் பேசலாம் என்று முடிவு செய்கிறானாம். அவ்வாறு பேசினால் அது சீதைக்கு மட்டும் விளங்கும்; அரக்கிகளுக்குப் புரியாது என்பதனால் அவ்வாறு தீர்மானமும் செய்கிறான்.

முடிவு செய்த ஹனுமான் சீதையிடம் வந்து என்ன கூறினான்?... ஏறத்தாழ ராம காதையை முழுவதுமாக விவரித்துக் கூறினான்!

"தசரதன் என்ற சக்ரவர்த்தி அயோத்திக்கு அதிபதியாக இருந்தான். அவனுக்குச் சிறந்த குணங்களும் மேலான பராக்கிரமும் நிறைந்த ஒரு மூத்த மகன். ராமன் என்னும் பெயருடையவன். அந்த ராமன், தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்று ஏற்று,

மனைவி சீதையுடனும் தம்பி லக்ஷ்மணனுடனும் வனவாசம் சென்றான்.

"வனத்திலே இருந்த முனிவர்கள் அவனிடம் சரணாகதி என்று வந்தார்கள். அப்படி வந்தவர்களின் சரணாகதியை ஏற்று, அவர்களைத் துன்புறுத்தி வந்த பதினாலாறாயிரம் அரக்கர்களையும் கொன்று தீர்த்தான் ஸ்ரீ ராமன். அவன் கரங்களில் உள்ள வில்லுக்கு இரையானவர்களுள் முக்கியமானவர்கள் கரன், தூஷணன் ஆகியோர்.

"ராமனின் இந்த வீர தீரத்தைக் கேள்வியுற்று ராவணன் கோபப்பட்டான். ராமனின் மனைவி சீதையை அபகரித்துப் போனான்.



"ராமனும் லக்ஷ்மணனும் சீதையைத் தேடிச் சென்றனர். தேடிச் செல்லும் வழியிலே குரங்கு அரசனான சுக்ரீவனுடன் அவர்களுக்கு நட்பு ஏற்பட்டது. சுக்ரீவனின் அண்ணனான வாலியை சம்ஹரித்தான் ராமன். பின்னர் சுக்ரீவன் உதவியுடன் சீதையைத் தேடும் முயற்சிகள் தொடங்கின. சுக்ரீவனின் வானர வீரர்கள் சீதையைத் தேடி அனைத்து திசைகளிலும் சென்றுள்ளனர். நூறு யோஜனை தூரம் சமுத்திரத்தைக் கடந்து நான் வந்துள்ளேன் இங்கே..."

– இத்தனை விவரணையும் ஒரு குட்டி ராமாயணமாக சுந்தர காண்டம் 31வது சர்கத்திலே வருகிறது.

சுந்தர காண்டத்தின் 68 சர்கங்களுமே மிக உயர்ந்தவை. ஆனால் இந்த 31வது சர்க்கம் அலாதியானது. அதை மட்டும் படித்தாலே போதும், எல்லா கவலைகளையும் போக்கிவிடும்; தீராத நோய்கள் தீரும், என்றெல்லாம் சொல்வதுண்டு.

இந்த 31வது சர்கத்துக்கு மட்டும் ஏன் இத்தனை பெருமை?

ராமனின் சரித்திரத்தை ஹனுமான் கூறக் கேட்கும் பெருமைதான் அது!

ஹனுமான் இனிமையாகப் பாடுகிறானாம் அந்தப் பெருமைகளை. உண்மையான பக்தன் ஒருவன் பகவானைப் பாடுகையில் அந்த இடத்திலே ஏற்படவல்ல சாந்நித்யம் ஹனுமானின் கானத்தின் போது ஏற்படுகிறது. அதனால்தான் ஹனுமத்கானமாக வருகிற அந்த 31வது சர்கத்துக்கு அத்தனை பெருமை. அதுவும் ஹனுமான் பாட அங்கே கேட்டுக் கொண்டிருப்பது யார்...? சீதையல்லவா? சாக்ஷாத் மஹாலக்ஷ்மி அல்லவா! அசோகவனத்தின் சீதை அந்த பரமாத்மாவை எண்ணி அவனை அடையத் துடித்து சதா ஏங்கும் ஜீவாத்மாவின் உருவகம் அல்லவா! அப்பேர்ப்பட்ட பக்தைக்கு அசஞ்சல பக்தனான ஆஞ்சநேயன் ராமகானம் செய்யக் கேட்கும் அனுபவம் எத்தகையதாக இருந்திருக்கும்!

இங்கே இன்னொரு சுவையான வரலாறு சொல்லியே ஆக வேண்டும்.

தும்புருவும் நாரதரும் தங்களது வீணைகளுடன் ஹனுமானிடம் வந்து தங்கள் இசைத் திறனை எடுத்துச் சொல்கிறார்கள்.

'அப்படியா செய்தி!' என்று ஹனுமான் அவர்களுக்குப் பாடிக் காண்பிக்கிறான். தும்புருவும் நாரதரும் வீணைகளைக் கீழே வைத்து விட்டார்கள்!

வைத்த இடம் 'கரும்பாறை! ஹனுமான் பாடப் பாட, அந்தப் பாறை நெகிழ்ந்து கரைந்து விட்டது! அவன் பாட்டை நிறுத்தியதுதான் தாமதம், பாறை மீண்டும் இறுகிக் கொண்டு விட்டது!

தும்புரு, நாரதர்களின் வீணை உருகி மீண்டும் இறுகிய பாறையுடன் சேர்ந்து இறுகிப் போய்விட்டது. வீணைகளை எடுக்க முடியாமல் இருவரும் திகைத்து நின்றபோது ஆஞ்சநேயன் மீண்டும் பாடினான். ஒரு ராகத்தை அவன் பாடப் பாட அந்தப் பாறை மீண்டும் இளகியது. வீணைகள் அதிலிருந்து நெகிழ்ந்து வெளிப்பட்டன!

இந்தச் சம்பவத்தின் போது ஹனுமான் பாடிய ராகம்தான் ஹனுமத்தோடி!

இந்த வெகு அழகான கதையை அருணாசல கவிராயரின் நூலில் காணலாம். ராம நாடக கீர்த்தனை இயற்றிய கவிராயர் 'அனுமன் பிள்ளைத் தமிழ்' என்றும் ஒரு நூல் படைத்திருக்கிறார். அதிலே வருகிறது இந்த 'ஹனுமத் தோடி' கானம் பற்றிய கதை.

தும்புரு நாரதர் முன் பாடி கல்லை உருகச் செய்த அந்த ஹனுமான் இப்போது சீதையின் முன் பாடினான். ராமனின் சரித்திரத்தைப் பாடினான். சீதை தன்னையும் தன் துக்கத்தையும் மறந்து கேட்டாள்.

"அடாடா! இலங்கையில் கூட ராம குணத்தைப் பாடுவோர் உண்டா?" என்ற

## அருள்வாக்கு

சேர்க்கத்தில் மனசுக்கு ரொம்பவும் ஆனந்தமாகவும் சாந்தமாகவும் இருக்கப்பட்ட பல விஷயங்களுக்கு அப்பர் ஸ்வாமிகள் ஒரு 'லிஸ்ட்' கொடுக்கிறார். இந்திரியங்களுக்கு அகப்படுகிற சுகங்கள் போல இருந்தாலும் நிரந்தரமான, தெய்விகமான ஆனந்தத்தைத் தருகிற வஸ்துக்களைச் சொல்கிறார். அந்த வஸ்துக்கள் என்ன? முதலில் தூளிக்கூட தோஷமே இல்லாத வீணா கானம்; அப்புறம் பூரண சந்திரனின் பால் போன்ற நிலா; தென்றல் காற்று; வசந்த காலத்தின் மலர்ச்சி; வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிற தாமரைத் தடாகம்.

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே.*



இந்திரியங்களால் பெறுகிற இன்பங்களை ஈசுவர சரணார விந்த இன்பத்துக்கு உபமானமாக அடுக்கும்போது ''மாசில் வீணை'' என்று சங்கீதத்துக்கே முதலிடம் தருகிறார்.

நல்ல சங்கீதம் - அதுவும் குறிப்பாக நம்முடைய சங்கீதத்துக்கே எடுத்த வீணையோடு கானம் - என்றால் அது ஈசுவரனின் பாதத்துக்குக் கொண்டு சேர்ப்பதாகவே இருக்கும். நம் பூர்வீகர்கள் இசையை ஈசுவரனின் சரணங்களிலேயே சமர்ப்பணம் பண்ணினார்கள். அந்த இசை அவர்களையும், அதைக் கேட்கிறவர்களையும் சேர்த்து, ஈசுவர சரணாரவிந்தங்களில் லயிக்கச் செய்தது. தர்ம சாஸ்திரம் தந்த மக ரிஷி யாக்ஞவல்கியரும் ''சுஸ்வரமாக வீணையை மீட்டிக் கொண்டு, சுருதி சுத்தத்தோடு லயம் தவறாமல் நாதோபாஸனை செய்துவிட்டால் போதும் - தியானம் வேண்டாம்; யோகம் வேண்டாம்; தபஸ் வேண்டாம்; பூஜை வேண்டாம்; கஷ்டமான சாதனைகளே வேண்டாம் - இதுவே மோக்ஷத்துக்கு வழிகாட்டிவிடும்'' என்கிறார்.

*வீணா வாதன தத்வக்ஞ : ச்ருதி*
*ஜாதி விசாரத:*
*தாளக்ஞச்ச அப்ரயத்னேன மோக்ஷமார்க்கம்*
*ஸ கச்சதி*

இதிலே இன்னொரு விசேஷம், சங்கீத வித்வான் மட்டுமில்லாமல், அவன் கானம் செய்வதை வெறுமே கேட்டுக் கொண்டிருக்கிற அத்தனை பேருக்கும் அவன் ஒருத்தன் செய்கிற சாதனையின் பூரண பலனான நிறைந்த திவ்விய சுகம் கிட்டிவிடுகிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ**
**சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

எண்ணம் அவளுக்குள்ளே எழுகிறது. சந்தேகம் வருகிறது. 'இது என்ன கனவா? நனவா?'

'கானமானது மரத்தின் மேலிருந்து அல்லவா வெளிப்படுகிறது...?' என்று சிம்சுபா விருக்ஷத்தை அண்ணாந்து பார்த்தாள் சீதை.

அங்கே... நமது ராமபக்தன் சொல்லின் செல்வன், திருவடி ஆஞ்சநேயன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள்.

பார்த்ததுதான் தாமதம். ஒரு பக்கம் வியப்பு, ஒரு பக்கம் பயம் - இரண்டுமே பற்றிக்கொண்டன அவளை.

மீண்டும் எண்ணமிடுகிறாள் - 'நான் கண்டது கனவா அல்லது நனவா?'

''கனவாக இருந்தால், கனவில் வானரத்தைப் பார்க்கலாகாது என்று சொல்வார்களே! என் கணவனான ராமபிரான், மாமியார் கௌசல்யை யாருக்கும் எந்தவித தீங்கும் நேராமலிருக்க வேண்டுமே!''

இந்த சிந்தனை தோன்றிய மறுகணமே இன்னொரு சிந்தனையும் வருகிறது அவளுக்கு:

'இது எப்படி கனவாக இருக்க முடியும்? தூக்கத்தில் அல்லவா கனவு வரும். நானோ தூங்காமலேயே அனவரதமும் ராமனை அல்லவா நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஒருவேளை அதனாலேயே அவன் சரித்திரத்தை யாரோ சொல்வது போன்ற பிரமை எனக்கு ஏற்பட்டிருக்கிறதோ?'

- இப்படியே சிந்தனை ஓடி திடீரென்று ஒரு பயத்திலே போய் முட்டி நிற்கிறது!

ஒருக்கால் ராவணனே மாறுவேடத்தில் இங்கே குரங்கு போல் வந்து இப்படியெல்லாம் என்னை ஏமாற்றுகிறானோ...?'

ஒரு விஷயத்தை இங்கே கவனிக்க வேண்டும். சீதை எவ்வாறு பயப்படக்கூடும் என்று ஹனுமான் எதிர்பார்த்தானோ, அதே போல் அவள் பயப்படுகிறாள் - ராவணன் மாறுவேடத்தில் வந்திருக்கக்கூடும் என்று கற்பனை செய்து பயப்படுகிறாள்!

இந்தக் கட்டத்தில் சீதையின் சிந்தனையை நயம் மேலிட அனுகிச் சொல்பவர் கம்பர் :

சீதை நினைத்தாளாம் : 'அவன் குரங்கோ, அரக்கனோ, தேவனோ... யாராயிருந்தாலும் இருக்கட்டும். என் பிரபு ராமனைப் பற்றிச் சொல்லி எனக்கு உயிரளித்தவன் அவன்தான்' என்று எண்ணமிடுகிறாளாம்.

*அரக்கனே ஆக, வேறு ஓர் அமரனே*
*ஆக, அன்றிக்*
*குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக,*
*கொடுமை ஆக,*
*இரக்கமே ஆகவந்து, இங்கு எம்பிரான்*
*நாமம் சொல்லி*
*உருக்கினன் உணர்வை தந்தான் உயிர்*
*இதின் உதவி உண்டோ'*

சீதையின் இந்த மனப்போராட்டங்கள் ஹனுமானுக்கு நன்றாகப் புரிகின்றன. அவன் மெள்ள மரத்திலிருந்து கீழே இறங்குகிறான்.

(வளரும்)

# இனிமேல்

## 4

மீனாட்சி கிளம்பும் பொழுதே ஈஸ்வரன் கிண்டலாகக் கேட்டார்.

"என்ன, மீனாட்சியம்மன் கிளியை விட்டுட்டுத் தனியா உலாக் கிளம்பியாறது. ஹெவி பர்ச்சேஸோ?"

மீனாட்சி புன்னகைத்தாள்.

கணவரின் கிண்டல் புரிந்திருந்தது. எப்பொழுதும் அவர் தன் மனைவியை மீனாம்பிகை. மீனாட்சி அம்மன் என்றும், தன்னை அந்த அம்மனின் தோளில் உட்கார்ந்திருக்கும் கிளி என்றும் சொல்லிக் கொள்வார்.

'கிளிக்குப் பசிக்கிறது...'

'கிளிக்கு சூடா ஒருவாய் காஃபி கெடைக்குமா?'

"நான் என்னப்பா சொன்னதைத் திருப்பி சொல்ற கிளிப் பிள்ளை. உங்கம்மா என்ன சொல்றாளோ அதை அப்படியே திருப்பி சொல்வேன். அவ்வளவுதான்."

ஈஸ்வரன் விளையாட்டுக்காக இப்படிச் சொன்னாலும் உண்மையும் அதுதானே... இந்த ஜோடியைத் தனித்தனியாகப் பிரித்து யாரும் பார்த்தே இருக்கமுடியாது. சில சமயங்களில் மீனாட்சி, பொய்க் கோபத்துடன் அலுத்துக் கொள்வாள்.

"ஒவ்வொரு புருஷாள போல ஒருவாய் காஃபி கலந்துக்கவோ, ஒரு ஆத்திரம் அவசரம்னா ஒரு பிடி அரிசியைக் களைஞ்சு குக்கர்ல வச்சுக்கவோ தெரியுமா உங்களுக்கு? அமெரிக்காவுலயிருந்து அர்ச்சனா விடாம ஃபோன் பண்றா; மசக்கைப் படுத்தறது. டிக்கெட் அனுப்பறேன். ஒரு மூணுமாசம் போல வந்துட்டுப் போயேன்னு. உங்களைத் தனியா விட் டுட்டு நான் எங்க போறது? அப்பாவுக்குத் தனக்கா எதுவும் செஞ்சுக்கத் தெரியாதுன்னு சொன்னா நம்பக்கூட மாட்டேங்கறா. மாப்பிள்ளை, மூந்தாநாள் பார்ட்டிக்குப் பக்கோடா போட்டாராம்."

இதைக் கேட்டால் ஈஸ்வரனுக்குச் சிரிப்புப் பொங்கி வரும்.

"இங்க பாரு. அந்த நாளிலிருந்து இந்த நாள் வரைக்கும் நீயும், எங்கம்மாவும் சேர்ந்து அடுப்படி எந்த பக்கம் இருக்கும்னே தெரியாம வச்சுட்டீங்க. உங்களுக்கெல்லாம் சுயநலம். சமையல்ங்கற பிரும்ம வித்தையை ஆம்பளை தெரிஞ்சுண்டுட்டா, அப்புறம் நமக்கு மவுசு குறைஞ்சு போயிடும்னு பயம். எப்பவும் உங்க தலைப்பைப் பிடிச்சுட்டே அலையணும்கற பேராசை. ஆனால் என் பொண்ணு அப்படியில்லை. என்னை மாதிரி பரந்த மனசு. எல்லாத்தையும் மாப்பிள்ளைக்குச் சொல்லிக் கொடுத்திருக்கா. அது சரி. அது என்ன உனக்கு மட்டும் விசா அனுப்பறா. அப்பா வரவேண்டாமா?"

"போதுமே. பூனையை மடியில கட்டிண்டு சகுனம் பாக்கறாப்பல. உங்களையும் அங்க அழைச்சுண்டு போய், நான் மசக்கைக் காரியப் பார்ப்பேனா, மாப்பிள்ளையைப் பார்ப்பேனா, இல்ல பாதி ராத்திரி பன்னெண்டு மணிக்கு, இந்த க்ஷணம் கொஞ்சம் போல ரவா கேசரி பண்ணித்தா யேன்னு குழந்தை மாதிரி கேட்பேளே, உங்களை கவனிப்பேனா?"

அலுத்துக் கொண்டாற்



# ஆரம்பம்

**அனுராதா ரமணன்**

போல சொன்னாலும், மீனாட்சி, ஒரு பொழுதும், கணவரை யாரிடமும் விட்டுக் கொடுக்க மாட்டாள். டிசம்பர் சங்கீத ஸீஸனானாலும் சரி. அகில இந்திய பொருட்காட்சியானாலும் சரி, யார் வீட்டுக் கல்யாணமானாலும் சரி, காது குத்தல் வைபவமானாலும் சரி... நெற்றி நிறைந்த குங்குமமும், தலைநிறைய ஜாதி மல்லிகையும், பட்டுப் புடவையுமாக கணவருடன் கிளம்பி விடுவாள்.

அஜய், இவர்களின் மூத்த மகன், அர்ச்சனா அவனது தங்கை.

ஈஸ்வரனைப்போல நெடுநெடுவென்ற உயரமும், சிரிக்கும் கண்களும், பால்வடியும் முகமும் அப்படியே ஜெராக்ஸ் காப்பியாக மகனுக்கு அமைந்திருந்தாலும், குணத்தில் அவன் அம்மாவையே கொண்டிருந்தான்.

எதையும் திட்டமிட்டுச் செய்தல். வார்த்தைகளை அளந்து பேசுதல். எப்பேர்ப்பட்ட தருணத்திலும், பொறுமையை சிதற விடாமல் புன்னகையுடன் பதிலளித்தல். சட்டென எல்லோருடனும் ஒட்டிக் கொள்ளுதல். எல்லாமே மீனாட்சியின் இயல்பு.

அர்ச்சனா இதற்கு நேர் எதிரிடை. உருவத்தில் அம்மாவைப்போல். குணத்தில் அப்பாவைப்போல். சோப்பிலிருந்து,



டவல் வரையில் கையில் எடுத்துக் கொடுக்க வேண்டும்.

'இப்போது அமெரிக்காவில் எப்படிதான் குடும்பம் நடத்துகிறானோ?'

மீனாட்சிக்கு அவ்வப்பொழுது கவலை தோன்றினாலும், எப்படியும் மாப்பிள்ளை சமாளித்துக் கொள்வார் என்கிற தைரியமும் உண்டு.

"நீ எங்கே போறேன்னு சொல்ல வேண்டாம். குறைந்தபட்சம் டிரைவருக்குப் பதிலாக நான் வரேனே!"

இப்படி பத்து வயசு சிறுவன்போல, விடாமல் கேட்ட ஈஸ்வரனைச் சமாளித்து, காபி, ஃப்ளாஸ்க்கில் இருக்கிறது என்றும், ஓமப்பொடி டப்பாவில் இருக்கிறது என்றும் படித்துப் படித்துச் சொல்லிவிட்டு நகர்ந்தாள் மீனாட்சி.

'இவரையும் அழைச்சிட்டுப் போகலாம் தான். ஆனால் எதையும் செய்ய விடமாட்டேங்கிறாரே'

ஈஸ்வரனுக்குப் பொழுது விடிந்தால் பிறந்த நாள். ஒவ்வொரு முறையும் மீனாட்சி அவருக்காக எதையாவது வாங்க நினைத்தாலும் வாங்கவிடாமல் அவர் தடுத்து விடுவார்.

"எதுக்கு? எதுக்குங்கறேன்? அதான் மணி மணியா இரண்டு குழந்தைகளைக் கொடுத்திருக்கியே போதாதா?"

இப்படிப் பேசி சமாளித்து விடுவார்.

இந்த முறை அப்படியெல்லாம் இல்லாமல் கொஞ்சம் விமரிசையாகக் கொண்டாட வேண்டுமென்று நினைத்தாள் மீனாட்சி. மகனிடமும் சொல்லி வைத்திருந்தாள். அவனும் உற்சாகமாக ஒப்புக் கொண்டிருந்தான்.

"நீ நேரே புறப்பட்டு ஆபீஸுக்கு வந்துடும்மா. நம்ப ரெண்டு பேருமா போய், நீ என்ன வாங்கணும்னு ஆசைப்படறியோ அதையெல்லாம் வாங்கிண்டு வந்துடலாம். அப்பாவுக்கு ஒண்ணும் தெரிய வேண்டாம்."

"அது எப்படிடா முடியும். குழந்தை மாதிரி அடம் பிடிப்பாரே!"

"அடம் பிடிச்சா, உனக்கா அடக்கத் தெரியாது? என்னையும், அர்ச்சனாவையும் ராத்திரி தூங்கவச்சுட்டு, பாட்டியையும் துணைக்கு வச்சுட்டு, நீயும் அப்பாவுமா தில்லானா மோகனாம்பாளுக்குப் போகலை? என் கையில ஒரு சாக்லேட்டைக் கொடுத்துட்டு அப்பாவுக்கு உடம்பு சரியில்ல ஊசி போட்டுட்டு வந்துடறேன்னு சொல்லிட்டாய்ச்சிட்டு 'மகாராஜபுரம்' கச்சேரிக்குப் போகலை? ட்ரிக்கை இங்கேயும் யூஸ் பண்ணு."

மகன் சொன்னதுபோல ஈஸ்வரனுக்கு மிகவும் பிடித்த பாலமுரளியின் புது கேஸட் இரண்டை வாங்கி அவர் கையில் கொடுத்து விட்டுக் கிளம்பி வந்திருக்கிறாள் அவள்.

ஆனால், அலுவலகத்தில் மகனைப் பார்த்ததுமே அவளுக்குப் புரிந்து போய் விட்டது.

'பிள்ளையாண்டான் வேலை பளுவுல மறந்துட்டான்போல இருக்கு...'



**"எதுக்கு அந்த ஆபிஸ் மானேஜரைக் கைது பண்ணிட்டாங்க?"**

**"முதல் மாடியிலிருந்து மூணாவது மாடிக்குப் போனதுக்குப் பயணப்படி இரண்டாயிரம் ரூபாய்னு கணக்கு எழுதிட்டாராம்!"**

**- எஸ். தமிழ்மணி**

உண்மைதான். அஜய் அம்மாவைப் பார்த்ததும் விரல்களை உதறினான்.

"அச்சோ. மறந்தே போயிட்டேம்மா. ஸாரி. இன்னிக்கு ஜெர்மனிலேந்து ஒருத்தர் வரார். அவரை ரிசீவ் பண்ண நான் ஏர்போர்ட் போகணும். வேணுமானா நாளைக்கு..."

கோபமே வராத மீனாட்சிக்குக் கூட

கோபம் வந்தது.

"சமர்த்துதான் போ. நாளைக்கு அப்பா வோட பொறந்த நாள். சாதாரண நாள் லேயே என்னை அவர் எங்கேயும் தனியா அனுப்பமாட்டார். நாளைக்கு கேட்கவே வேண்டாம். விடிகாலம்பற சுப்ரபாதத்துல யிருந்து ராத்திரி குட் நைட் சொல்ற வரைக் கும் கூடவே இருப்பார். அந்த ஜெர்மன் காரரை வரவேற்க வேற யாரையும் அனுப்ப முடியாதா?"

அஜய்க்கும் வருத்தமாகத்தான் இருந்தது. ஆனால் என்ன செய்வது? வரப்போகிறவர், இந்த நிர்வாகத்துக்கு முக்கியஸ்தர். அவரால் கோடிக்கணக்கில் லாபம் கிடைக்கப் போகிறது. சேர்மன் இவனைத்தான் போய் அழைத்து வரச் சொல்லி திரும்பத் திரும்ப கேட்டுக் கொண்டிருக்கிறார்.

சேர்மன் மட்டுமில்லை. அவர் அர்ச்சனா வின் மாமனாரும் ஆயிற்றே. அம்மாவுக்குப் புரியும்படியாக எடுத்துச் சொன்னவன், சட் டென முகம் மலர இன்டர்காமில் ப்ரீதியை அழைக்கிறான்.

"ப்ரீதி ஒரு நிமிஷம் இங்க வந்துட்டுப் போயேன்."

அடுத்த கணமே தன் எதிரே சுரிதார் அணிந்த மின்னல் ஒன்று நிற்கக் கண்டு மீனாட்சி புருவத்தை உயர்த்தினாள். அஜய் தாயின் வியப்பை ரசித்தபடியே ப்ரீதியிடம் சொன்னான்.

"ப்ரீதி, எங்க அம்மா. மிஸஸ் மீனாட்சி ஈஸ்வரன்" ப்ரீதியின் முகத்தில் நாணமும், மகிழ்ச்சியும் குழப்பமாய்க் கலவையிட கை குவித்தாள்.

"நமஸ்காரம்."

மீனாட்சிக்கும் அவளது புன்னகை தொற்றிக் கொண்டது.

"நன்னாயிரும்மா... என்னை இங்க வரச் சொல்லிட்டுப் பாரும்மா, இவன் பாட்டுக்கு ஏர்போர்ட்டுக்குக் கெளம்பறானாம்."

அஜய், தணிந்த குரலில் தனது நிலையை விளக்கினான். ப்ரீதி முறுவலுடன் கேட் டாள்.

"நான் என்ன செய்யணும் சொல் லுங்கோ."

"அம்மாவோட கடைக்குப் போயிட்டு வரமுடியுமா?" நாளைக்கு அப்பாவோட பர்த்டே.. சர்ப்ரைஸா ஏதோ கொடுக் கணும்னு ஆசைப்படறா. என்னைவிட இந்த விஷயத்துல நீதான் கில்லாடி."



- ராம்கி

ப்ரீதி வெட்கத்துடன் ஏகமாய்த் தலை யசைத்தாள்.

"இந்த ஐஸ் எல்லாம் வேண்டாம். கெளம் புங்க ஆன்ட்டி. நாமபோய் முடிச்சிட்டு வரலாம்."

மீனாட்சியின் முகம் மட்டும் இல்லாது, அவளது வைரத்தோடும், பேஸரியும்கூட பூரித்தன.

ப்ரீதி கையில் ஒரு நோட்டுப் புத்தகத்தை வைத்துக் கொண்டு அவளிடம் கேட்டாள்.

"அங்கிளுக்கு என்னல்லாம் பிடிக்கும். வரிசையாய்ச் சொல்லுங்க ஆன்ட்டி."

மீனாட்சி யோசித்து யோசித்து சொல்லத் தொடங்கினாள்.

"நல்ல சமையல் பிடிக்கும். ப்ரெண்ட்ஸ் ஸோடு உட்கார்ந்து அரட்டை அடிக்கப் பிடிக்கும். நல்ல சங்கீதம் பிடிக்கும். அதுலயும் பக்க வாத்தியம் இல்லாம பாலமுரளியோட குரலை கேட்கப் பிடிக்கும். எப்பவும் கதர் சட்டை, கதர்வேஷ்டி ரொம்பப் பிடிக்கும். எல்லாத்துக்கும் மேல எதை ரசிச்சாலும் என்னோட சேர்ந்து ரசிக்கப் பிடிக்கும்."

அறுபதை நெருங்கிக் கொண்டிருக்கும் மீனாட்சி இருபது வயசு பெண்போல் வெட்கப்பட்டாள்.

அதை ரசித்தபடியே ப்ரீதி சொன்னாள்.

"ஆனால் ஒரு விஷயம் ஆன்ட்டி. நம்ம திட்டம் அஜய்க்குக் கூட தெரிய வேண் டாம்."

(தொடரும்)

## "பா.ம.கவை வீழ்த்துவதே முதல் பணி!"

**எ**திர்வரும் சட்டமன்றத் தேர்தல் தமிழக அரசியலில் மிகுந்த எதிர்பார்ப்பை உருவாக்கியிருக்கிறது. ஆளும் கட்சியான தி.மு.க தனது அடிப்படை கொள்கையிலிருந்து பிறழ்ந்து அதற்கு நேர்மாறான கொள்கைகளைக் கொண்ட பாரதிய ஜனதாவுடன் கூட்டணி அமைத்ததன் மூலம், சாயம் வெளுத்து அம்பலப்பட்டு நிற்கிறது. மேலும் கடந்த ஐந்து ஆண்டு கால ஆட்சியில் தமிழகமெங்கும் தலை விரித்தாடிய ஜாதி வெறியாட்டம், மத வெறியாட்டம், கோவை குண்டுவெடிப்பு அதனையடுத்த ரத்தக்களரி, சென்னை மையச் சிறையில் நடந்த படுகொலை, இரண்டாம் ஜாலியன் வாலாபாக் என வர்ணிக்கப்பட்ட தாமிரபரணி படுகொலை போன்றவற்றால் சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கவியலாத கையறு நிலை, விலைவாசி உயர்வு, எதிர்க்கட்சிகளைப் பழிவாங்கும் போக்கு, தலித் மற்றும் சிறுபான்மை மக்களுக்கு எதிரான அடக்குமுறை ஆகியவற்றின் மூலம், வெகு மக்களின் வெறுப்புக்கும், எதிர்ப்புக்கும் ஆளாகி, கை பிசைந்து நிற்கிறது திராவிட முன்னேற்றக் கழகம்.

இன்னொருபுறம் ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகி தனி நீதிமன்ற விசாரணைகளுக்குட்பட்டு, பல்வேறு நெருக்கடிகளில் சிக்கியிருக்கிறது அ.தி.மு.க. மேலும் அ.தி.மு.க.விலிருந்து வெளியேறி உருவாகியுள்ள எம்.ஜி.ஆர். கழகம், எம்.ஜி.ஆர் அ.தி.மு.க, தமிழர் பூமி, புரட்சித் தலைவர் அ.தி.மு.க, மக்கள் தமிழ்த் தேசம், புதிய நீதிக்கட்சி போன்ற அரசியல் கட்சிகளின் எதிரான பிரசாரங்களைச் சந்திக்க வேண்டிய நெருக்கடியிலும் சிக்கியுள்ளது அ.தி.மு.க.

தி.மு.க.வும் அ.தி.மு.க.வும் பல்வேறு சர்ச்சைகளுக்கு ஆளாகி இருக்கும் நிலையில், எதிர்வரும் சட்டமன்றத் தேர்தல் எப்படி நடக்கப் போகிறதோ? என்கிற எதிர்பார்ப்பு தமிழக மக்களிடையே பரவலாக எழுந்துள்ளது. இந் நிலையில் புதிய அணியை உருவாக்க வேண்டும் என்ற கருத்தும் பரப்பப்படுகிறது. இத்தகைய சூழலில் "விடுதலைச் சிறுத்தைகள்" சட்டமன்றத் தேர்தலை எதிர்கொள்ள தெளிவானதொரு முடிவோடு களம் காண தயாராகி வருகிறது.

வரும் சட்டமன்றத் தேர்தலில் ஜாதி வெறி சக்திகளையும், மதவெறி சக்திகளையும் வீழ்த்த வேண்டும் என்பதில் தெளிவாகவும் உறுதியாகவும் இருக்கிறது விடுதலைச் சிறுத்தைகள். அந்த வகையில் ஜனநாயகத்தையே உணராத ஜாதி வெறி பிடித்த வன்முறைக் கும்பலான பா.ம.கவையும் 'தலித்' மற்றும் சிறுபான்மை மக்களுக்கு எதிரான வெகு மக்கள் விரோத கொள்கைகளைக் கொண்ட பா.ஜ.கவையும் அம்பலப்படுத்தி அவர்களை வீழ்த்துவதே, முதன்மையான பணியாகும்.

**பா**.ம.க வன்னியர் சங்கமாக இருந்த போது 1987-ல் மரங்களை வெட்டியும், பாலங்களை உடைத்தும், பேருந்துகளைக் கொளுத்தியும் வெறியாட்டம் போட்டதோடல்லாமல் பன்னிரண்டாயிரம் சேரிக் குடிசைகளையும் எரித்துச் சாம்பலாக்கியது. தனி இட ஒதுக்கீடு கேட்டு அரசுக்கு எதிராகப் போராடியவர்கள் சேரி மக்களுக்கு எதிரான வன்முறைகளில் இறங்கி வெறியாட்டம் போட்டனர். அதன்பின் அவர்கள் பா.ம.க என அரசியல் கட்சியாகப் பெயர் மாற்றிக் கொண்டார்களேயொழிய, அவர்களது தலித் விரோதப் போக்கையோ, வன்முறை குணத்தையோ சிறிதும் மாற்றிக் கொள்ளவேயில்லை. இதை மக்களிடத்திலே எடுத்துச் சொல்வோம். அத்துடன், பிற்படுத்தப்பட்டோருக்கான 50% இட ஒதுக்கீட்டை இரு கூறாகப் பிரித்து பிற்படுத்தப்பட்டோருக்கு 30%மும், மிகவும் பிற்படுத்தப்பட்டோருக்கு 20%மும் கொடுக்கப்பட்டதில் கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகப் பிற்படுத்தப் பட்டோரில் குறிப்பிட்ட சில சமூகத்தினர் கல்வி மற்றும் வேலை

விடுதலைச் சிறுத்தைகள் திருமாவளவன்



படுத்துவோம்.

அதைப் போல, மதவெறிக் கொள்கைகளை உயர்த்திப் பிடிக்கிற பாரதிய ஜனதாவை அம்பலப்படுத்துவோம். மதச் சார்பின்மையைச் சிறப்பம்சமாக உயிர் நாடியாகக் கொண்டுள்ள இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை, மறு ஆய்வு என்னும் பெயரில் மதச்சார்பின்மையைச் சிதைக்க முயற்சித்திருப்பதையும், கிறிஸ்தவ தேவாலயங்களை எரிப்பது, கன்னியாஸ்த்ரிகளைப் பாலியல் பலாத்காரம் செய்வது, பாதிரியார்களைப் படுகொலைகள் செய்வது, அயோத்தியில் இராமர் கோவில் கட்டுவது, தலித் மற்றும் பழங்குடி மக்கள் மீது வன்கொடுமைகளைக் கட்டவிழ்த்து விடுவது போன்ற வன்முறை வெறியாட்டங்களைச் செய்யும் ஹிந்து தீவிரவாத அமைப்புகளை ஊக்கப்படுத்துவதையும், இவற்றையெல்லாம் மூடி மறைக்கும் வகையில் பங்காரு லட்சுமண், கிருபாநிதி போன்ற தலித்துகளுக்குப் பதவிகள் தந்து நாடகமாடுவதையும் தொடருகின்ற பாரதிய ஜனதாவை அம்பலப் படுத்துவோம். அத்துடன், கடந்த ஓராண்டு கால ஆட்சியில் இரண்டு, மூன்று முறை பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய் மற்றும் சமையல் எரிவாயு போன்றவற்றின் விலையை உயர்த்தி சாதாரண மக்களின் அடிவயிற்றிலடிக்கும் போக்கையும் கோலார் தங்கச்சுரங்கம், சேலம் உருக்காலை, ஜெயங்கொண்டம் மின் திட்டம் மற்றும் நெய்வேலி சிரோயூனிட் போன்றவற்றையெல்லாம் தனியார்மயமாக்குவதையும், தொலைபேசி மற்றும் இதர பொதுத்துறைகளைத் தனியார் மயமாக்கி வருவதையும் மக்களுக்கு எடுத்துச் செல்வோம். தனியார்மயத்தின் மூலம் இட ஒதுக்கீட்டுக்கே மறைமுகமாக வேட்டு வைப்பதையும் அம்பலப்படுத்து வோம்.

வாய்ப்பில் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளனர். பிற்படுத்தப்பட்ட சமூகத்தினரை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர விடாமல் தடுத்துக் கொண்டிருப்பது பா.ம.க.வே என்றும் அதனால் அச்சமூகத்தினர் பெருமளவில் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் குற்றஞ்சாட்டுகின்றனர். டாக்டர் இராமதாஸ் ஜாதிவாரி கணக்கெடுப்பு முழக்கத்தை முன் வைப்பதே மேற்சொன்ன ஜாதியினர் மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கக் கோரும் கோரிக்கையைத் திசை திருப்புவதற்கேயாகும் என கருதுகின்றனர். அதாவது, தமிழகத்திலே மட்டும் ஜாதி வாரிகணக்கெடுப்பு கோரிக்கையை முழங்கும் டாக்டர் இராமதாஸ், மைய அரசிலே ஆளுங்கட்சியாக அங்கம் வகித்திருந்தும் தில்லியிலே அதற்கான எந்த முயற்சியையும் முன்னெடுக்காதது அவரது இரட்டை வேடத்தையே காட்டுகிறது. தாழ்த்தப்பட்டோருக்கெதிராக மட்டுமில்லாமல் பிற்படுத்தப்பட்டோருக்கெதிராகவும் செயல்படுகிற டாக்டர் இராமதாசையும், பா.ம.கவையும் இந்தத் தேர்தலில் அம்பலப்

தலித் சமூகம் நீண்டகாலமாகவே விலைக்கு வாங்கப்படும் கடைச் சரக்காகவே அரசியல் கட்சிகளால் மதிக்கப்பட்டு வந்தது. இந் நிலையை முற்றிலும் மாற்றியமைத்து மண்ணின் மைந்தர்களான சேரி வாழ் மக்



''வண்டி சைதை வரைதான் போகும்.''

''கட் சர்வீஸா?''

''இல்லீங்க. அங்கே போனதும் பிரேக் டவுன் ஆயிடும்!''

— பர்வதவர்த்தினி



''எதெதுக்குத்தான் விழா எடுக்கறதுன்னு ஒரு விவஸ்தையே கிடையாதா?''

''ஏன்?''

''ஒரு மணி நேரத்துல புடைவை செலக்ட் பண்ணுன ஒரு பெண்ணுக்குப் பாராட்டு விழா நடத்தறாங்களாம்!''

— எஸ். சரவணன்

''எனக்கு ஞாபக மறதி...ன்னா நீங்க ஏன் டாக்டர் மண்டையைப் பிய்த்துக் கொள்றீங்க?''

''நீங்களே இன்னிக்கு எட்டுத் தடவை வந்துட்டீங்களே...! அது போதாதா?''

— தேனி எஸ். மாரியப்பன்



களுக்கு ஆட்சியிலும் பங்கு, அதிகாரத்திலும் பங்கு என்னும் அடிப்படையில் அரசியல் அதிகாரப் பகிர்வை நிலை நாட்டுவதை எமது கடமையாகக் கொண்டுள்ளோம். அந்த வகையில் கூட்டணி அரசு அமைப்பதற்கு முயற்சிப்போம்.

தாழ்த்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீட்டை முழுமையாக நடைமுறைப்படுத்தவும், ஐ.ஐ.டி. போன்ற மைய அரசு நிறுவனங்களில் நீதித்துறை, இராணுவம், தொழிற்கல்வி போன்ற துறைகளில் இட ஒதுக்கீட்டை நடைமுறைப்படுத்தவும், விடுதலைச் சிறுத்தைகள் பணியாற்றும் என்பதை மக்களுக்கு உறுதியளிப்போம். தலித் கிறிஸ்தவர்களைப் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்த்திருப்பது கேலிக்கூத்தாகும். ஆகவே தலித் கிறிஸ்தவர்களை தாழ்த்தப்பட்டோராய் அறிவிக்க வேண்டும் என்பதோடு மாநில அரசின் அதிகாரத்தைப் பயன்படுத்தித் தற்போதைக்கு அவர்களை மிகவும் பிற்படுத்தப்பட்டோராய் அறிவிக்க வேண்டுமென குரல் கொடுப்போம்.

தீவிரவாதிகள் என முத்திரைக் குத்தி அப்பாவி இஸ்லாமியர்களைச் சிறைப்படுத்தும் போக்கைத் தடுப்போம். மேலும் எவ்வித விசாரணையுமில்லாமல் கடந்த நான்காண்டுகளாகச் சிறைப்படுத்தப்பட்டிருக்கும் நூற்றுக்கணக்கான இஸ்லாமியர்களை விடுதலை செய்ய தொடர்ந்து போராடுவோம்.

முல்லைப் பெரியார் அணையை உயர்த்தவும் சேது சமுத்திரக் கால்வாய் திட்டத்தை நடைமுறைப் படுத்தவும், காவிரி நீர் பிரச்னைக்கு நிரந்தர தீர்வு காணவும் சட்டமன்றத்தில் போராடுவோம் எனவும் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் இந்தத் தேர்தலில் உறுதியளிப்போம்.

தாமிரபரணியில் படுகொலை செய்யப்பட்ட மாஞ்சோலை தோட்டத் தொழிலாளர்களின் குடும்பங்களில் தலா ஒருவருக்கு அரசு வேலை வாய்ப்பு வழங்க வேண்டுமெனவும் குரல் கொடுப்போம்.

கடைசி மனிதனுக்கும் ஜனநாயகம், எளிய மக்களுக்கும் அதிகாரம் பரவலாக்கப்படும் வகையில் செயலாற்றுவோம் என்பதை இந்தத் தேர்தல் மூலம் மக்களுக்கு எடுத்துச் சொல்வோம்.




# வட்டமேஜை

## சரியான வேஷம்!

✉ கல்கி தீபாவளி மலர் 2000 கண்டோம். 54 மற்றும் 55-ஆம் பக்கங்களில் உள்ள கட்டுரை முழுவதும் மதுரை ஆலயத்தைப் பற்றி வருணித்தாலும் அப்பக்கங்களில் பதிக்கப்பட்டுள்ள புகைப்படங்கள் திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேச்வரர் ஆலய கோபுரங்கள்தாம்.

"ஸ்ரீரமண மகரிஷிகளின் தீர்க்க தரிசனம்" என்ற கட்டுரையில் "2000 வருடத்திற்குப் பின் திருப்பதிக்கு வருவதைப் போல இரண்டு மடங்கு மக்கள் திருவண்ணாமலைக்கு தினசரி வந்து செல்வார்கள்" என்று ஸ்ரீ ரமண மஹரிஷி குறிப்பிட்டதாக வருகிறது. பகவான் ரமணரைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்ற அன்பர்களில் சிலர், மேற் குறிப்பிட்டுள்ள கருத்தைத் தெரிவித்திருந்தாலும் ஸ்ரீ ரமண பகவான் இவ்வாறு பேசியது கிடையாது.

**வி.எஸ். ரமணன்,**
**ஸ்ரீ ரமணாசிரமம்,**
**திருவண்ணாமலை,**

✉ சர்ச்சைக்கிடையே சிரிக்கும் குருவாயூரப்பன், படித்தேன். கோயிலோ, தேவாலயமோ, மசூதியோ எதுவாக இருந்தாலும், கடவுளை தரிசிக்க வேண்டும் என்று வருகிற பக்தனை மதத்தைக் காட்டி கோயிலுக்குள் வரக்கூடாது என்று தடுப்பது முறையல்ல.

**மயிலாடுதுறை, எல்.துர்காதேவி**

✉ மஞ்சளுக்கு இவ்வளவு மருத்துவக் குணங்கள் உள்ளதா? அப்பப்பா வியந்தோம். இனி பல வகையான க்ரீம்கள் உபயோகிப்பதை அறவே ஒதுக்கிவிட்டு மஞ்சளுக்கு மங்கையர்கள் முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்து விடுவார்கள் என்பது சர்வ நிச்சயம்.

**சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்**

✉ 'அழைக்கிறது அமெரிக்கா' படித்தேன். எப்போ அமெரிக்கா போவேன் என்று இருந்தவனுக்கு இப்படி ஒரு அதிர்ஷ்டமா? என என்னைக் கிள்ளி பார்த்தேன். கனவு. 26 வாரம் பொறுத்துக் கொள்ள வேண்டுமா? வேணாம் சார் விரைவிலேயே போட்டியை முடித்து நான் வெளிநாடு செல்ல ஏற்பாடு செய்யுங்கள்.

**பெருந்துறை, ந.சிவாயமூர்த்தி**

✉ இன்று தமிழ்நாட்டின் இரண்டாவது பெரிய கட்சி பா.ம.க.தான் என்றும் வன்முறையைத் தூண்டிவிடுவதில் போட்டி போட்டுக் கொண்டிருக்கும் ராமதாஸ் போன்றவர்கள் "மக்கள் மாற்றத்தை விரும்புகிறார்கள்" என்று சொல்வதும் சரியான வேஷம்.

**மொரட்டுப்பாளையம்,**
**க.நா.இராஜேஸ்வரன்**

✉ ஏறக்குறைய தமிழ் மக்கள் அனைவரின் நெஞ்சங்களிலும் நிலவி வரும் கருத்தையே இவ்வார தலையங்கம் எடுத்தியம்பியது. (ஏகாதிபத்திய அதிமுக அஜெண்டா!) தாங்கள் கூறியுள்ளது போல் வரவிருக்கும் தேர்தலில் அதிமுக வெற்றி பெற்றால்..? நினைக்கவே பயமாய் இருக்கிறது. தான் முதல்வராக இருந்ததைவிட, 'ரிமோட்' முதல்வராக ஆகி தமிழ்நாட்டை ஒரு வழி பண்ணிவிடுவார் "ஜெ".

**திண்டுக்கல், ஜனனி பார்கவி**

✉ ஒரு தனி மனிதன் முறையாகச் செயல்பட வீடு, கல்வி நிலையம், ஆலயம் என்கிற அமைப்பின் கடமையைச் சரியாக செய்தால் தனி மனித ஒழுக்கம் மேன்மை பெறும் என்கிற இல. கணேசன் பேட்டி சிந்திக்க வைத்தது.

**கோ. தியாகராஜன், கீழ்வேளூர்.**

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka.